# வகுப்புரிமைப் போராட்டம்



திரு கு. அன்பழகன்

1951

# 'இலட்சியப் பண்' வளர்ந்த விதம்

## 1917-ல் நீதிக்கட்சி

அரசியல் பார்ப்பனரை ஒருபொழுதும் நம்பாதீர்கள்.

(சர்). பி. தியாகராயர்

## 1926 சுயமரியாதை இயக்கம்

புரோகிதப் பார்ப்பனரைப் பணியாதீர்.

ஈ. வெ. இராமசாமி.

## 1937 இந்தி எதிர்ப்பு இயக்கம்

பார்ப்பனர் மொழிகளை (இந்தி, சமஸ்கிருதம்) ஏற்காதீர்.

மறைமலை யடிகளார்.

## 1939 நாட்டுப் பிரிவினை இயக்கம்

ஆரியர் ஆட்சி, கலை, மொழி, நாகரிகம் எதற்கும் இடம் கொடாதீர்.

சர். ஏ. டி. பன்னீர்ச் செல்வம்.

## 1944 திராவிடர் கழகம்

ஆரியம் (வைதீகம்) ஆபத்து மிக்கது. அரசியல், சமூகவியல், பொருளியல், வாழ்வியல் ஆகிய அனைத்திலிருந்தும் அதனை ஒழித்துக் கட்டுங்கள்.

பெரியார் ஈ. வெ. இராமசாமி.

## 1949 திராவிட முன்னேற்றக் கழகம்

ஆரியமே, (வர்ணாஸ்ரம வைதீகம்) பாசீசத்தின் பிறப்பிடம். வளர்ந்துவரும் ஆரிய பாசீச ஆட்சியிலிருந்து விடுபட, வாழ்வுபெற "திராவிடநாடு திராவிடருக்கே" என்பதை நிலை நாட்டுங்கள்.

அறிஞர் அண்ணாதுரை.



வ. உ. சிதம்பரம் பிள்ளை



டாக்டர் P. நடேச முதலியார்



அறிஞர் அண்ணா



பெரியார் ஈ. வே.ரா

# வகுப்புரிமைப் போராட்டம்

## 1. தீர்ப்புக்குப்பின்

சில உரையாடல்கள் :—

கல்லூரி மாணவர்கள் சிலர் :—

"டேய், கிட்டு, நம்மளவா எதை எடுத்தாலும் ஜெயந்தாண்டா, பார்த்தியோன்னோ, கம்யூனல் ஜி. ஓ. மண்ணைக் கவ்விண்டு போயிட்டுது!"

"ஆமாண்டா, ரகு, அதான் அந்தப் பசங்கள்ளா, ஒரே ஆத்திரமா, கும்பலா கூடிக்கூடிப் பேசின்டிருக்கா!"

"நோக்கு, ஏண்டா, அதுபற்றிக் கவலே. அந்தப் பசங்களையெல்லாம் நம்ம பிரின்ஸ்பால் நோட் பண்ணிக்காமலா இருப்பார்? அதிருக்கட்டும், வர்ற வருஷத்திலேருந்து, நம்மப் பிடிச்ச கலி ஒழிஞ்சுது. ஜாம், ஜாம்னு மெடிக்கல், இன்ஜினீயரிங் காலேஜ்லேயெல்லாம், நாமே சேர்ந்துடலாம்."

"அடுத்த வருஷம் இருக்கட்டுண்டா, இப்பவே நம்ம ஃபிரண்ட்ஸ் (Friends) எல்லாம் நம்மையே ஒரு மாதிரி—பார்க்கிறளேடா?"

"அந்தப் பசங்க இப்ப அப்படித்தாண்டா, கோபமா இருப்பா, நாலு நாள் ஆனு, அப்புறம் அதெல்லாம் அடங்கிடும். நீ ஏண்டா பயப்படுறே? வாடா, ஐஸ்கிரீம் சாப்பிட்டு வரலாம்."

அரசாங்க அலுவலகத்தில்,
உத்தியோகஸ்தர்கள் இருவர் :—

"என்ன ஓய், வேம்புவா? வாரும், ஒரே குஷீ தான் போலே இருக்கு! நம்மளவா, வெகுநாள் மனோபீஷ்டம் நிறைவேறிப் போச்சோல்லியோ?"

"ஆமாம், ஆமாம். சாம்பு சாஸ்திரிகளே! அவா, அதோட விட்டுடுவாண்ணு தோணல்லியே, அப்பீலுக்குப் போவாப்போல இருக்கே!"

"போனாதான், என்னங் காணும்? நம்ம அல்லாடியின் திறமை, சாமர்த்தியம், எல்லாம் எங்கே போயிடும் ஓய்! இப்பதான் அல்லாடியின் புத்தி தீட்சண்யத்தை தேசமே தெரிஞ்சுடப் போகுதுங் காணும்."

"அதிருக்கட்டும். இப்ப நம்மளவாளை, ஊரெல்லாம் தூஷித்துப் பேசறதை, நெனச்சாத்தான், கொஞ்சம், என்னமோபோல இருக்கு ஓய்!"

"என்னங்காணும் வேம்பு! அதைப் பார்த்தே அசந்துட்டீர் போல இருக்கே? இப்படிப்பட்ட நேரத்திலே மனோ தைரியத்தை இழந்துடுவளோ? அவாள்ளாம் இப்ப, அப்படித்தான் ஆத்திரமா கொதிச்சிண்டிருப்பா. இப்பத்தான் நாம கொஞ்சம் ஜாக்கிரதையா, ஏதோ, ஒண்ணும் அறியாதவா மாதிரி, சந்தோஷத்தை வெளிக்குக் காட்டாம நடந்துக்கணும்."

"அதென்னமோ, அவன்களைப் பார்த்தா, காந்தி செத்தப்ப முகத்தை வைச்சிண்டிருந்தான்களே, அப்படீண்ணா இருக்கானுங்க."

"வருத்தம், இருக்காதோ அவாளுக்கு. இது ஒண்ணுதான் அவா, வாழ வழியா இருந்தது, அதுவும் போச்சுண்ணா, ஐயோடாண்ணு குந்த

வேண்டியதுதானே? இருந்தாலும், காந்தி செத்தப்ப மஹாராஷ்டிரத்திலே யெல்லாம் நடந்துகிட்டான்களே, ஆத்திரமா, அப்படி நடந்துக்க மாட்டாங்காணும் இவா. தென்னாட்டுக்காராளோல்லியோ, நாசகாரியத்திலே பிரவேசிச்சுட மாட்டாங்காணும்!"

"என்ன இருந்தாலும், ஆத்திரம் வந்தா? அப்புறம் நம்ம கதி"

"அதாங்காணும், இப்ப ஜாக்கிரதையா, இருந்துட்டம்னா, அப்புறம் நம்மபாடு வேட்டைதான். கொஞ்ச நாளிலே அதுங்கள்ளியே சிலது, இதையெல்லாம் மறந்துட்டு வாலைக் குழைச்சிண்டு, நம்ம பின்னாலியே வரும், ஓய். அதுவரையிலேதான், நாம நிஷ்காமிய கருமி மாதிரி நடந்துக்கணும் ஓய். அப்புறம், நம்ம அல்லாடிக்குக் கோயிலே கட்டினா கூட, அவாளே பொருளுதவி பண்ணுவாங்காணும்."

"சரி, சரி, மணி 4 ஆச்சு, வாரும் ஆத்துக்குப் புறப்படலாம்."

பத்திரிகாலயத்தில்,

ஆசிரியரும் உதவி ஆசிரியரும்:—

"என்ன, மிஸ்டர் சீனு! இது ரொம்ப ரொம்பத் தொல்லையான்னா போச்சு. கம்யூனல் ஜி. ஓ., சட்டப்படி செல்லாதுண்ணு தீர்ப்பு கிடைச்சதிலேருந்து ஊரெல்லாம் ஒரே ரகளையான்னா இருக்கு."

"ஆமாம், எடிட்டர் சார்! நியூஸ் வேறே, அதைப்பத்தியே ஏராளமா வந்துண்டே இருக்கு. நாம்தான், இருட்டடிப்புச் செய்தாகுணுமே? மற்றவா பத்திரிக்கைகயிலே மட்டும் கொஞ்சமாவது

வெளியிட்டுடுவாளே? என்ன செய்றதுண்ணு யோசிச்சிண்டிருந்தேன்."

"அந்த 'நியூஸே' ஒரு நியூசன்சான்னு போச்சு, அதைப் போடறதுக்கு எடம் குப்பைக் கூடைதான், சீனு. ஆனு, நம்மளவாளுடைய இந்த ஜெயத்தைப் பாராட்டி—ஒரு—சப் லீடர் எழுதக் கூடண்ணு அதிர்ஷ்டம் இல்லாம போச்சுங்கிறதை நினைச்சாத்தான், மனசு ரொம்ப கஷ்டப்படுது!"

"ஏன் சார்? வழக்கம்போல, வேஞெரு பிரச்னையிலே கலந்து, தென்னுப்பிரிக்கா பிரச்னை மாதிரி ஒண்ணுலே சேர்த்து, நம்ம கருத்தை—எழுதீட்டாப் போச்சு!"

"நம்ம கருத்தை யாருங்காணும் கேக்கிரு? நாம வெளிப்படையா வர்றமாண்ணுதானே பாக்கிரு? இவ்வளவு காலமா, எதைப்பத்தி வாரந் தவரும எழுதி ஜெய்மாச்சோ, அதையே அப்படி குழப்பினு, நம்ம பத்திரிக்கைக்கு ஜனங்க கிட்டே என்னு மதிப்பிருக்கும்னு, நம்ம ஆத்துக்காரியே கேட்பாளே நாளைக்கு?"

"அப்படீண்ணு, தைரியமா, ஜெயத்தைப் பாராட்டி எழுதிட வேண்டியதுதான்."

"ஆத்துக்காரி, சொல்வாளேண்ணு? சொன்னு சொல்லட்டுமே, நம்ம கிட்டத்தானே சொல்லுவா! நீர் சொல்றுப்பிலே எழுதிட்டா அவ்வளவுதான், வேறே வினை வேண்டியதில்லை. நம்ம பத்திரிகையிலே பாராட்டி எழுதினு, 'உண்மை' புரியாதவாளும் புரிஞ்சுடுவாளே! அதிலும் இப்ப அந்த இனத்தா வேறே நம்ப பத்திரிகையை ஏராளமா படிச்சிண்டிருக்கா, இப்ப இதை எழுதினு, நம்ம பத்திரிக்கைக்கு நாமே உலை வைச்சுண்ட மாதிரிதான்."

"ஆமாம் சார். இப்பவே கிளர்ச்சியிலே நான்டபிரூமின் காங்கிரஸ்காரா உட்பட எல்லாரும் ஒண்ணு சேர்ந்துட்டா! இப்ப எதை எழுதினாலும், நெருப்பிலே நெய் வார்த்தாப்பிலே தான்."

"ஆமாம், சீனு, அல்லாடியைப் பாராட்டி எழுதாட்டியும் போறது, அவர் ஒண்ணும் கோபிக்க மாட்டார், அவரது சேவையையும், புத்தி தீட்சண்யத்தையும், நாமஎழுதித்தானா நம்மளவா தெரிஞ்சுக்கப் போறா? இல்லாட்டி, நாம எழுதி னாத்தான், மத்தவா நம்பப் போறாளா என்ன?

"ஆமாம், ஆமாம்! நம்ம ஆபீசை நோக்கி ஆபத்து வராம இருந்தா அதுவே போதும்!"

"அது கிடக்கட்டும், நம்மளவா பயந் தவா பாரும்! அவாளுக்கும் ஒண்ணும் கஷ்டம் வரக்கூடாது நம்ம பத்திரிக்கையாலே! அதைக் கவனியும் முதல்லே."

சங்கீத சபாவில் இரு ரசிகர்கள் :—

"கச்சேரி, எப்படி இண்ணைக்கு?"

"கவனிக்கல்லியே!"

"ஏன்? ஓய்!"

"கம்யூனல் ஜி. ஓ. தொலேஞ்ச விஷயத்திலே அதே நினைவா இருந்துட்டன் ஓய். அரியக்குடி பாட்டா நுழைஞ்சுது காதிலே, அல்லாடி பேச் சுண்ணா கேட்டுண்டிருந்தது!"

"அட, போங்காணும், நீர் இந்த லோகத்தி லேயே இல்லபோலிருக்கே, ஊரெல்லாம் நடக் கிறதைப் பார்த்தா—பெரிய நஷ்டமால்ல முடியும் போலத் தோணுது, நம்மளவாளுக்கு. அந்தத் திகில்லியே—சங்கீதம் காதிலே ஏறல்லேங்காணும் நேக்கு."

ஸ்திரீகள் சங்கத்தில் இருவர் :—

"ஏண்டி, சுகுணு! நீ சொன்னபடியே ஆயிட்டு தேடி, உன் வாய்க்கு சர்க்கரைதாண்டி கொட்டணும்."

"போடி, போடி லீலா! முந்தியெல்லாம், நம்மளைக் கண்டா மத்தவா, என்ன அன்பா, திருப்தியா, பார்த்திண்டிருந்தா? இப்ப அதெல்லாங் காணண்டி! ஒரே துவேஷமா, கோபமா பார்க்கிருடீ."

"ஆமாண்டி, அதான் பஸ்ஸிலே டிராம்லே எல்லாங்கூட நம்மைக் கண்டதும் எழுந்திருச்சு உட்காரச் சொல்லிண்டிருந்த புருஷாகூட இப்ப இடம்தர மாட்டேங்கிருடி, காலெல்லாம் வலியா வலிக்குதடி."

"இதையெல்லாம், பார்த்தா நேக்குக்கூட, ஏண்டி இந்த வீண் விரோதமெல்லாம்னுதான் தோண்றது! சாதியாம், ஆசாரமாம், எல்லாம் நமக்குத்தாண்டி விஷமா வந்துது!—நம்ம புருஷா—சொன்ன கேட்கிருளா, என்ன? அதாலேதானே இந்தக் கஷ்டமெல்லாம் நமக்கு?"

* * *

இவ்விதந்தான், உரையாடல்கள் நிகழ்ந்திருக்கவேண்டும் ஆதிக்க வகுப்பார் சந்திக்கும் இடங்களிலெல்லாம்.

கல்வித்துறையில் கம்யூனல் ஜி. ஒ. செல்லாது என்ற தீர்ப்புக் கிடைத்தவுடன், அவர்களது உள்ளமெல்லாம் உவகை வெள்ளம் கரைபுரளத் தொடங்கிய அதே நேரத்தில், தென்னுட்டுப் பெருங்குடி மக்கள், கம்யூனல் ஜி. ஒ.வை இழக்க மனமின்றி, காத்து நிற்கத் தீர்மானித்து, வரிந்து

கட்டி, வரிசை வரிசையாகக் கிளம்பி, வானளாவ முழக்கமிட்டு, வரிப்புலிகளெனக் காட்சியளித்தது கண்டு, ஆதிக்கவாதிகள் திகில்கொண்டு, அச்சத்திற்கும் ஆசைக்கும் இடையிலே ஊசலாடுகின்றனர் இன்று.

'அவர்களுடைய' மனம் ஜெயபேரிகை கொட்டுகிறது. நாவோ, அதை வெளியிடத் துடித்து விளைவை எண்ணி மென்று விழுங்குகின்றது. 'அவர்களது' மூளை, வெற்றியை விவரிக்க, புதிய புதிய தொடர்களையெல்லாம் நினைவு படுத்துகின்றது. கைகளோ—தீட்டுதற்கு அஞ்சுகின்றன, தம் எண்ணம் வெளிப்பட்டுவிடக்கூடாதே என்பதால், தமது இனத்தின் வெற்றிக் களிப்பும் பூரிப்பும், வெளியே பரவினுல், மாற்றினத்தின் மரமண்டைகளும் மண்பொம்மைகளுங்கூட உண்மையை உணர்ந்து, உரிமைப்போரில் பங்கு கொண்டு எதிர்ப்புச் சக்தியை, புரட்சித் தீயாக வளர்த்துவிடுவரே என்ற அச்சமே, ஆதிக்கவாதிகளின் நாவையும் கையையும் ஆடாமல் அசையாமல், ஆரவாரமின்றியே அடங்கிக்கிடக்கச் செய்துள்ளது.

காவலுக்கு வைக்கப்பட்டவனே நடுநிசியிலே மாளிகையிலே நுழைந்து, தலையணைக் கடியிலே இருந்த சாவிக் கொத்தையும் எடுத்து, இரும்புப் பெட்டியையும் திறந்து, பொருள் குவியலை அள்ளி மடியில் கட்டித் திரும்புகையில் கால் இடறியதால் செம்பு உருண்ட சப்தம் கேட்டு வீட்டுக்குரியவன் விழித்துக்கொண்டு, காவல்காரனைக் கூப்பிட, அவனே, அதே இரும்புப்பெட்டிக்குப் பின்னுல் ஒளிந்து கொண்டுள்ளதைப் போன்றுதான், இன்று, வாய்மூடி மௌனிகளாக, இமை மூடாக் கண்ணினராகக் காட்சியளிக்கின்றனர் ஆதிக்கவாதிகள்

இந்துவும், மித்திரனும், கல்கியும், விகடனுங் கூட இந்த வெற்றிகுறித்துப் பாராட்டி எழுத முன்வரவில்லையெனில், அவர்களது திகைப்பு—குற்றம் செய்த உள்ளம் குறுகுறுக்குந் தன்மை—தெளிவாகாமற் போகாது.

அவர்களது 'தந்திரமாகிய திறமை' பொது மக்களின் ஆத்திரத்தைக் கிளறிவிடாமல் தப்பித்துக்கொள்ள உதவுகிறது. உதவட்டும், வரவேற்கிறோம். ஆனால், அதே திறமைதான்,—சூழ்ச்சியோடு கூடிய, சுயநலப் பேராசை எண்ணந்தான் அவர்களை-பொதுமக்களின் நிரந்தர வெறுப்புக்கு ஆளாக்கி, வருங்கால வாழ்வையே இழக்கச் செய்யக் காரணமாகும் என்பதை அவர்கள் உணர்ந்ததாகத் தெரியவில்லை.

எப்படி உணரமுடியும், அந்த 'மேதை'களால்? அவர்கள்தான், பரம்பரை பரம்பரையாகப் பலநூறு ஆண்டுகளாகத் தந்திர மந்திரத்திலேயே, சோம்பேறிச் சுகவாழ்வைத் தேடிக்கொண்டவர்களாயிற்றே? பிறர் கஷ்டம் உணராத உயர்சாதிக்காரராயிற்றே? அப்படிப்பட்டவர்கள், மக்களாட்சிக் காலமாகிய இப்பகுத்தறிவு நூற்றாண்டில், 'அதே திறமை,' தான் தாம் வீழக் காரணமாகிவிடும் என்பதை எங்கே உணரப் போகிறார்கள்? அந்தத் தெளிவு எப்படிப் பிறக்கும் அகம்பாவப் பிறவிகளுக்கு? ஆதிக்கவாதிகளின் 'திறமை', வழக்குமன்றத்தை நாடி, சமூக நீதிக்கு வழிவகுத்த கம்யூனல் ஜி. ஓ. இந்திய அரசியல் சட்டப்படிக். கல்வித்துறையில் செல்லத்தக்கதல்ல" என்ற உயர் நீதிமன்றத் தீர்ப்பைத் தேடித் தந்தவுடன், பொது மக்களிடம் ஏற்பட்டுள்ள ஏமாற்றமும் அவநம்பிக்கையும் சொல்லுந் தரத்தது அன்று.

ஜுலை 27-க்குப் பின்!

உயர்நீதிமன்றம் இந்தத் தீர்ப்பை வழங்கிய நாள் 1950 ஜுலை 27. அன்று தோன்றிய அதிர்ச்சி, நாட்டு மக்களின் உள்ளங்களிலே ஏற்பட்ட கொதிப்பு, பிற்படுத்தப்பட்டவர்களின் நெஞ்சிலே நிறைந்த சோகம், மாணவர்களின் மனத்திலே பொங்கிய குமுறல், இன்னும் ஆறவில்லை, அண்மையில் ஆறவும் வழியில்லை.

இன்றைய தமிழகம் குமுறும் எரிமலையாக இருக்கிறது. தென்னாட்டுப் பொது மக்களின் உரிமை உணர்ச்சியும், எழுச்சியும் ஓரளவேனும், ஆளவந்தோரால் மதிக்கப்படுகிறது என்பதற்குச் சில அறிகுறிகள் காணப்படுவதாலேயே, குமுறும் எரிமலை புகைந்தபடி உள்ளது, கனல் கக்கவில்லை; புரட்சிக் குழம்பு நாட்டில் பரவவில்லை, ஆதிக்க வெறியர்களை ஆபத்து இன்னும் அணுக்கவில்லை.

ஆனால், இந்த நிலைக்குக் காரணமான தீர்ப்பைப் பெறுவதற்குத் தான் எவ்வளவு முயற்சி, என்னபாடு? அடடா, எவ்வளவு பெரிய மனிதர்களின்—அதிமேதாவிகளின் புத்திச்செலவு? சட்டத்தின்படி சரியென்றே ஒப்புக்கொள்ளினும், சமூக நிலைமைகளின்படி—நியாயமல்லாத, "கல்வித்துறையில் கம்யூனல் ஜி. ஒ. செல்லாது" என்ற இந்தத் தீர்ப்பைப் பெறத்தானா இவ்வளவு காலமும் முயற்சியும் செலவாகவேண்டும்? என்ன பலன் கண்டார்கள்? மலையைக் கல்லி எலியையாவது பிடித்திருக்கிறார்களா? என்றால், எலி இருந்திருக்கவேண்டிய வளையில் பாம்பல்லவா—படமெடுத்துச் சீறுவதைக் காண்கின்றனர்!

பொதுமக்களோ, பிற்படுத்தப் பட்டவர்கள் எல்லோரும், சாதி, மதம், கட்சி முதலிய வேறுபாடுகள் எதையும் விலக்கி, சமூக நீதியை நிலை

நாட்ட, உறுதிகொண்டு ஒன்றுபட்டுவிட்டனர். மாணவர்களோ எத்தகைய விலைகொடுத்தும், சமூக நீதியை நிலைநாட்டத் தீர்மானித்துவிட்டனர். வாலிபர்கள் போருக்குத் தயாராகிவிட்டனர். இந்நிலையைக் கண்டபின்பே, அரசியல் சட்டத்தையே மாற்றியமைக்கவேண்டி நேரிட்டாலும், மாற்றியமைத்தேனும், இன்னும் சிறந்த வடிவிலேயே சமூகநீதி நிலைநாட்டப்பட்டுத் தீருமே தவிர, சரியவிடப்படமாட்டாது என்ற உறுதி பிறக்கின்றது நமக்கு.

## 2. வகுப்பு நீதி வளர்ந்த விதம்

இத்தகு சிறப்பும், முக்கியத்துவமும் அடைந்துள்ள சமூக நீதி உத்தரவாகிய கம்யூனல் ஜீ. ஓ. குறித்துப் பொதுமக்களிலே பலர் உண்மை வரலாற்றை அறிய மாட்டார்கள்.

பார்ப்பனரல்லாத பெருங் குடிமக்களோ நூற்றுக்குத் தொண்ணூறு பேரும் தற்குறிகள். மிகச்சிலரே படித்தவர்கள். அவர்களுள்ளும் பலர், தானுண்டு தன் வாழ்வுண்டு என்று வாய் மூடி அடங்கிக்கிடப்பவர்கள். அப்படி அடங்காவிடில், ஆதிக்கவாதிகளால், தொல்லைக்கு ஆளாக நேரிடும் என்பதையும் கண்டறிந்தவர்கள், ஆதிக்கவாதிகளுக்கு மாறாக எப்படி வாய் திறந்து உண்மையை உரைக்க முன்வருவர்?

அன்றியும், அரசாங்க உத்தியோகத் துறையிலும், உயர்தர விஞ்ஞானக் கல்வி நிலையங்கள் ஒன்றிரண்டிலும் மட்டுமே, கைக்கொள்ளப்பட்டு வந்த சமூக நீதித்திட்டம் குறித்து, மிகப் பெரும்பான்மையும் தற்குறிகளைக் கொண்ட சமூகம் எப்படி உணரமுடியும்? வண்டி இழுப்பவர்கட்கும், வயல்

உழுபவர்கட்கும், கட்டை வெட்டுபவர்கட்கும், கல் உடைப்பவர்கட்கும் இந்த உத்தியோக விகிதாச் சார உத்தரவு குறித்து அறிந்துகொள்ள வாய்ப் புத்தான் ஏது? அறிவிக்கத்தான் யார் உள்ள னர்? அறிவித்தாலும் அறியத்தான் திறன் ஏது?

## ஆதிக்க வெறியரின் சதி

மற்றும், தம் சுயநலம் காரணமாக, இந்தச் சமூக நீதிச்சட்டத்திற்கு மாருக, ஆதிக்கவாதி களின் தினப்பதிப்புக்களும் வாரப்பதிப்புக்களும், வாத்தியார்களும், தலைவர்களும், தொண்டர்களும் —ஆதிக்க வெறியோடு நெடுநாட்களாகவே தொடர்ந்து நடத்திவந்த, உண்மையை மறைக் கும் பொய்ப் பிரசாரத்திஞலேயே இன்றளவும் இதனைக் குறித்துத் தெளிவு பெருமலே பிற்பட்ட வகுப்பு மக்களிலே பலர் உள்ளனர்.

என்ருலும், படித்த சிலரே உண்மையை உணர்ந்துள்ள நிலையில், இதனை ஆதரித்து இவ் வளவு எழுச்சி காணப்படுகின்றதெனில், எல்லோ ருமே இதை உணர்ந்திருந்தால், ஆதிக்கவாதிகள், இந்தத் திட்டத்தை ஆட்டவும் அசைக்கவும்கூடக் கருதியிருக்கமாட்டார்கள் என்பது நிச்சயம்.

'கம்யூனல் ஜி ஓ.'—வகுப்பு வாதச்சட்டம், வகுப்புத் துவேஷிகளின் திட்டம், வெள்ளைக்காரர் களின் பிரித்தாளும் சூழ்ச்சித்திட்டம், மதத் துவேஷிகளின் சட்டம், தேசத்துரோகிகளின் சூதுத்திட்டம், திறமையையும் தகுதியையும் பாழாக் கும் தவருன ஆணை, தனி மனிதர்களின் அடிப் படை உரிமையையே பறிக்கும் உத்தரவு—என்று ஒவ்வொரு காலத்திலும், ஒவ்வொரு வகையாகத் திரித்துக்கூறி தூற்றிப்பேசி, கண்டித்துத் தீட்டித் தமது தேசிய செல்வாக்கையும் பயன்படுத்திப்

பார்த்து, இவ்வளவிலும் சமூக நீதித்திட்டத்தைச் சாய்க்க முடியாதது கண்டு, சமயத்தினை எதிர் பார்த்துஇருந்து, விடுதலைக் கொண்டாட்டத்தின் சந்தடி சாக்கில், அரசியல் சட்ட நகல் தீட்டும் வேளையில், ஆதிக்கவாதிகள் தமது சுயநலம் ஓங்கும் வழி, சட்டத்தைத் திருத்தி, சட்டசபையில் நிறைவேற்றிவிட்டு, வீடுதிரும்பி, தமது வேதபுத்தகமாகிய சட்டபுத்தகத்தை எடுத்துக்கொண்டு கிளம்பி, வழக்கு மன்றம் ஏறித் தமது வாய்த்திறமை காட்டிச் சமூக நீதித்திட்டத்தினைச் சாய்த்துள்ளனர்.

ஆனால், இவைகளை அறியாதார், ஆதிக்கவாதிகளின் கூற்றையே நம்பி, "கம்யூனல் ஜீ. ஓ." என்றாலே அந்த ஆங்கிலச் சொல்லின் பொருளின்படியே, "வகுப்புவாத (பேத) அரசாங்க உத்தரவு" என்றே மனத்தில் கொண்டு தடுமாறுகின்றனர். உண்மையில் சொல்லளவில், அவ்வாறு நின்றாலும், அதன் அடிப்படையையும், நோக்கத்தையும், பயனையும் அறிபவர்கள், அதனை "வகுப்பு உரிமையை நிலை நாட்டும் அரசாங்கஉத்தரவு" என்பதை உணர்ந்து போற்ற முன்வருவர்.

இதன் உண்மையை உணர, இத்திட்டம், எந் நிலையில் யாரால் கொண்டு வரப்பட்டது என்பதையும், இதனை யார் அன்றும் இன்றும் எதிர்க்கிறார்கள், ஏன் எதிர்க்கிறார்கள் என்பதையும் அறிவது அவசியமாகும்.

அவர்கள் வாழ்வுபெற்ற விதம்

தமிழ் நாட்டில் மட்டுமின்றி பொதுவாக இந்தியத் துணைக் கண்டம் முழுவதிலுமே, ஆங்கிலேயர் ஆட்சி ஏற்பட்ட பின்பு, நாட்டினை ஆண்ட

தொல் மரபிலே பிறந்து உரிமை உணர்வு கொண்ட, வீர சிவாஜியின் பரம்பரையினரும், முத்தமிழ் மன்னரின் வழிவழி வந்த குடியினரும், கட்டபொம்மு ஊமைத்துரை உறவுகொண்டவரும், கப்பலோட்டிய தமிழனின் இனத்தவரும், மற்று வீரம் மிக்கவர் யாவரும் அந்நியர் ஆட்சியை ஒப்ப மனமின்றி, எதிர்த்து நின்று உரிமைக்குப் போராடிய வண்ணமிருந்தனர். ஆனல் அதே சமயத்தில், உரிமை உணர்வுகொண்ட நாட்டுக்குரிய நன்மக்களோடு கலத்தலின்றி, தமது இனமும், சாதியும், மொழியும், நாகரிகமும் உயர்வென்று கூறிப் பிரிந்து நின்று, தமது சுயநலமே பெரிதென மதித்தல் காரணமாகத் தாய்நாடென ஒன்றைக் கொள்ளாத ஆதிக்க வெறியர்கள், அந்நியர் ஆதிக்கம் பெற்றவுடன், அதிலே பங்கு பெற, அவர்தம் ஆங்கிலமொழியை விரைந்து கற்று, அவரது திருப்தியைப் பெறும் விதத்திலெல்லாம் நடந்து, அரசாங்கப்பதவிகளை யெல்லாம் தாமே கைப்பற்றிக்கொண்டனர். அவர்களிற் பலரும், எஜமானருக்கேற்ற நல்ல அடிமைகளாக நடந்து கொள்ளும் இயல்பிலே சிறந்திருந்ததால், அரசாங்கத்தில் அவர்கள் பெற்றிருந்த செல்வாக்கு மேலும் மேலும் வளர்ந்து வந்தது.

மற்ற மக்களெல்லாம், நாட்டு விடுதலையைக் கருதி, ஆங்கில ஏகாதிபத்யத்திலே அடிமை வேலை செய்யக் கூடாதென எண்ணி இருந்ததாலேயே, நாட்டுப்பற்றற்ற மக்களாகிய ஆதிக்கவாதிகள், அரசாங்க உத்தியோக மண்டலம் முழுவதையும் கைப்பற்றிக்கொண்டு, நரிக்குக் கிடைத்த நாட்டாண்மைபோல, ஏகபோக ஆட்சி நடத்தி வந்தனர்.

அதன் விளைவாக, நாட்டுக்குரிய மற்ற இனத்தவர்கள், பின்னர் ஒருகாலத்தில் அரசாங்க உத்தி

யோகம் பெற விரும்பி முன்வந்தபோது பெற முடியாத நிலை ஏற்பட்டது. ஆதிக்கவாதிகள்—தமது இனத்துவரைத் தவிர மற்றவர்கள் நுழைய இடம்தர மறுத்தனர். அதுமட்டுமன்றி, அரசாங்கத்தின் மூலம் நடைபெற வேண்டிய எந்தக்காரியமானாலும், ஆதிக்கவாதிகளின் தயவைப் பெற்றால் தான் முடியும் என்ற நிலையும் ஏற்பட்டது.

சென்னை மாகாணத்தைப் பொறுத்தவரையில், அரசாங்கச் சக்கரம் ஆதிக்கவாதிகளின் பிடியில் சிக்கியதால், பார்ப்பனரல்லாதார் நிலை பரிதாபத்திற்கு ஆளாயிற்று.

பார்ப்பனரல்லாதார் — எனின், பார்ப்பனரல்லாத இந்துக்கள் மட்டுமல்ல, ஆதித்திராவிடர், முஸ்லீம்கள், கிருஸ்தவர்கள் உட்பட அனைவரும், அரசாங்கத்தில் ஆதிக்கம் பெற்றிருந்த வகுப்பாராகிய பார்ப்பனருக்குக் கட்டுப்பட்டே நடக்க வேண்டியவர்களானார்கள். திண்ணையிலே படுத்திருந்த பிச்சைக்காரன், நடு நிசியிலே வீட்டில் நுழைந்த கள்ளனோடு சேர்ந்து வீட்டுக்காரனைத் தாக்குவது போலாயிற்று நிலைமை.

இந்து மதத்தின் மூலம் வருணாசிரம தர்மத்தை நிலை நாட்டி, முதலிலேயே பார்ப்பனரல்லாத இந்துக்களையும், ஆதித்திராவிடர்களையும், சமூக அடிமைகளாய் ஆட்டிப்படைத்துவந்த பார்ப்பனர், இப்பொழுதோ, மற்ற மதத்தவர்களையும் அடக்கி வைக்கும் வாய்ப்பைப் பெற்றனர். தமது இனப் பற்று காரணமாக, அந்த வாய்ப்பைக் கொண்டு, தமது ஆதிக்கம், காலவேகத்தால் கூடச் சரிய முடியாதபடி வளர்த்துக் கொண்டனர்.

ஆளுகிறவர்கள், ஆங்கிலேயர்தானா? ஆதிக்க வகுப்பாரா? என்ற ஐயம் பிறக்கும் அளவுக்கு ஆதிக்கம் பெற்றிருந்தனர்.

அதுமட்டுமன்றி, உத்தியோக மண்டலத்தின் நுழைவு வாயிலாக அமைந்துள்ள கல்வித் துறையையும், தாமே கைப்பற்றிக் கொண்டனர். தங்கள் முன்னாள் மதக்கொள்கைப் படியே தங்களுக்கு மட்டுமே கல்விகற்கும் உரிமை உண்டென்றும், மற்றவர்கள் கற்பதே பாபம் என்றும் கூறி வந்தோர் புதிய முறையிலும், கல்வித்துறையில் மற்றவர்கட்கு இடமின்றி 'கவனித்துக்' கொள்ளத் தவறவில்லை. அதன் விளைவாக உத்தியோக மண்டலத்தில் நுழையும் தகுதியை அளிக்கும் கல்வியைப் பெறும் வாய்ப்புங் கூடப் பிற்பட்ட வகுப்பினர்கட்கு மிகவும் குறைந்து போயிற்று.

"பார்ப்பனர்களுக்கே புரோகித வேலை" என்ற திட்டம் சமூகத் துறையில் அமைந்தது போலவே, "பார்ப்பனர்கட்கே உத்தியோக மண்டலம், மற்றவர்கட்கு அங்குவேலை இல்லை, இடமில்லை, தகுதி பெறவும் வாய்ப்பில்லை" என்ற துக்ககரமான நிலை அரசியல் துறையில் ஏற்பட்டது. தமிழகத்தார்—தென்னாட்டார், பிற்படுத்தப்பட்ட மக்களாயினர்'' ஏமாந்த காலத்தில் ஏற்றங் கொண்டோர், புலிவேஷம் போடுகின்றார்,—எலியாக முயலாக இருக்கின்றோம் நாம்''—என்று நல்லறிவாளர் எண்ணி ஏக்கமுறும் நிலை பிறந்தது. எங்கும் இருள் சூழ்ந்தது.

### விடி வெள்ளி தோற்றம்

இத்தகு இருள் சூழ்ந்த நிலை நிலவிய போது தான், ஒரே வகுப்பு ஆதிக்கத்தால் விளையும் அநீதி இருள் நீங்கத்தான் போகிறது என்ற நம்பிக்கையைப் பிற்படுத்தப்பட்ட மக்களுடைய மனத்திலே தோற்றுவித்த விடிவெள்ளி தென்னாட்டு அரசியல் வானில் தோன்றிற்று.

பார்ப்பனரல்லாத மக்களில் அறிவுடையவராகவும், செல்வமுடையவராகவும் விளங்கிய ஒருசிலர், அரசியல் இயக்கத்திலே இடம் பெற்றிருந்தாலும், அரசாங்க அலுவலில் அமர்ந்திருந்தாலும், பார்ப்பனர்களின் இனப்பற்றினையும், ஆதிக்க வெறியினையும் கண்டுணர நேர்ந்தபோது, தாமும் இனவுணர்ச்சியோடு, தம் மக்களை உயர்த்தப் பாடுபட வேண்டுமென்ற கருத்துக்கொண்டனர். எனினும், மலையளவு முயற்சி தேவைப்படு மிடத்தில் கடுகளவாகவே அது அமைந்தது.

நூற்றுக்கு நூறு பார்ப்பனரல்லாத இந்துக்களும், பார்ப்பனர்களிடத்தில் பக்திப் பூர்வமான சமூக அடிமைகளாக இருந்த அக்காலத்தில், தாங்கள் மேலும், மேலும் தாழ்வதையும் ஆதிக்கவாதிகள் அதிவேகமாக உயருவதையும்கூட உணர முடியாத அளவு, மௌடீகம் அவர்கள் கண்களை மூடியிருந்ததெனில்—அவர்களிடத்தில் இனவுணர்ச்சி எப்படி இயல்பாகத் தோன்ற முடியும்? இனஉணர்ச்சி கொள்ளாமல்—இழிநிலை அடைந்த அவர்கள் உயரும் வழி எது?

### இன உணர்ச்சி

இந்நிலையில்தான், தனிப்பட்ட பார்ப்பனரல்லாதாரின் முயற்சி விரும்பிய பயன் அளிக்காது என்பதையும், மக்களிடத்தில் விழிப்புணர்வும், இனப்பற்றும் ஏற்பட்டாலொழிய சமூக அரசியல் சமத்துவம் கிட்டாது என்பதையும், அதற்காகப் பணிபுரிய ஒரு கூட்டம், அமைப்பு, கட்சி, தேவையென்பதையும் கண்டறிந்த—திராவிடத் தந்தை, டாக்டர் சி. நடேசமுதலியார் அவர்களும், திராவிடச் செம்மல், சர். பி. தியாகராயச் செட்டியார் அவர்களும், திராவிடப் பேரறிஞர். டாக்டர். டி. எம். நாயர் அவர்களும்—ஒன்று கூடியே—

பார்ப்பனரல்லாதார் பலருடைய ஒத்துழைப்பையும் திரட்டிப் பிற்படுத்தப்பட்ட மக்களின் நலனைப் பாதுகாக்க முன் வந்தனர்.

**முதல் முரசு!**

முதன் முதலாகச் "சென்னை, திராவிடர் கழகம்" (Madras Dravidian Association) கண்டு, அதன்மூலம் இன உணர்ச்சியை விதைக்க முன் வந்த பெருமையும், சென்னை நகராட்சி மன்ற உறுப்பினர்களாகப் பல்லாண்டுகளாகவே புகழுடன் விளங்கிவந்த பெருமை வாய்ந்த சர். பி. தியாகராயரையும், டாக்டர். டி எம். நாயரையும் நகராட்சிமன்ற நடவடிக்கைகளில் கருத்து மாறுபாடுடையவர்களாக இருந்தபோதிலும், பிற்படுத்தப்பட்ட மக்களின் நலத்தினைக் காக்க ஒரே மேடையில் கூடிநின்று பணியாற்றச் செய்த பெருமையும், டாக்டர். C நடேச முதலியார் அவர்களையே சாரும்.

அதன் விளைவாகவே, பார்ப்பனரல்லாதார் நலத்தைக் கருத்தில் கொண்டு, 1916-ம் ஆண்டில், தியாகராயரும், நாயரும் முன்னின்று — "தென் இந்தியர் நலவுரிமைச் சங்கத்தைத்" (South Indian Liberal Federation.) தோற்றுவித்தனர்.

தியாகராயரின் முதல் அறிக்கையும் வெளிவந்தது. சென்னைமாநிலத்தில், திராவிடர்பெற்றிருந்த தாழ்நிலையை விளக்கி, சமூகநீதியை நிலைநாட்ட, ஒரே வகுப்பாரின் ஆதிக்கத்தைத் தடுத்தாக வேண்டுமென அவ்வறிக்கை முரசு கொட்டிற்று.

**அன்றிருந்த நிலை**

1915-ம் ஆண்டில் சென்னை மாநிலத்தில் பார்ப்பனர் ஆதிக்கம் இருந்த நிலையை அறிந்தவர்கள்தான், பார்ப்பனரல்லாதாரின் சமூகநீதி இயக்

கம் தோன்றிய காரணத்தையும் அவசியத்தையும் நன்குணர முடியும்.

1915-ல் கல்வி இலாக்காவில் இருந்த மொத்த உத்தியோகங்கள் 518. அந்த 518-இடங்களில் அமர்ந்திருந்த, பார்ப்பனர் 399-பேர், கிருஸ்தவர்களும் ஆங்கிலோ இந்தியர்களும் 73-பேர், முஸ்லீம்கள் 28-பேர், பார்ப்பனரல்லாத இந்துக்கள் 18-பேர் (ஆதித்திராவிடர் உட்பட)

ஆம்! அவ்வளவு உத்தியோகங்களிலும்—நாட்டுக்குரிய திராவிட மக்களுக்கு 18 உத்தியோகங்கள்தான். மக்கள் தொகையில் 100க்கு 3 பேராக உள்ள பார்ப்பனருக்கு 399 உத்தியோகங்கள் கிடைத்திருக்கையில், 100க்கு 84 பேர்களாக உள்ள—பார்ப்பனரல்லாத இந்துக்களுக்கு 18 உத்தியோகங்கள்தான் கிடைத்திருந்தன. பார்ப்பனர்களுக்கு 399 உத்தியோகங்கள்; அவர்களைப் போல் 30 மடங்கு மக்கள் தொகை கொண்ட சமூகத்தாருக்கு 18 உத்தியோகங்கள்தான். இதற்குப் பெயர்தான் "அரசாங்கக் கல்வி இலாக்கா" அக்கால நீதிப்படி.

1915-ல்— எழுதப்படிக்கத் தெரிந்தவர்கள் 100 க்கு 7, அல்லது 8—பேரே ஆவர். அதில் 3% வீதம் உள்ள பார்ப்பனரோ தங்களில் 100க்கு 75% விகிதத்துக்குக் குறையாமல் படித்திருந்தனர். மற்ற மக்கள் எல்லோருமே 100க்கு 5% விகிதத்தினரே படித்திருந்தனர் பார்ப்பனரல்லாத இந்துக்களோ—100க்கு 3 %.விகிதத்தினர்தான் படித்திருந்தனர்.

1914-ம் ஆண்டு, சென்னைப் பல்கலைக் கழகம் நடத்திய தேர்வுகளில் கலந்து கொண்ட மாணவர் எண்ணிக்கை விவரம், அன்றைய நிலைமையைத் தெளிவாக்குவதாகும்.

| நடத்தப்பட்ட தேர்வுகள் | பார்ப்பன மாணவர்கள் | | பார்ப்பனரல்லாத மாணவர்கள் | |
|---|---|---|---|---|
| | எழுதியவர் | தேறியவர் | எழுதியவர் | தேறியவர் |
| எம். ஏ. (இண்டர்மிடியட்) | 1900 | 775 | 640 | 240 |
| பி. ஏ. | 469 | 210 | 133 | 60 |
| பி. ஏ. (சயன்ஸ்) | 442 | 159 | 107 | 49 |
| எம். ஏ. | 157 | 67 | 20 | 9 |
| எல். டி. | 104 | 95 | 11 | 10 |

உத்தியோகத்தில் மட்டுமின்றி, உத்தியோகம் பெற வாயிலாகும் உயர்தரக் கல்வி பெறுவதிலும் கூட, 100-க்கு 3-பேராக உள்ள பார்ப்பனர், 100-க்கு 84 பேர்களாக உள்ளவர்களைவிட, மூன்று மடங்கு முதல் பத்து மடங்குவரை இடம் பெற்றிருந்தனர் என்பதை இது காண்பிக்கவில்லையா?

1916-ம் ஆண்டில்—மாகாண சிவில் சர்வீஸ் என்ற உயர்தர பதவியில் இருந்த பார்ப்பனர் (நூறு) 100 பேர். பார்ப்பனரல்லாதாரோ 29 பேர்தான். மக்கள் தொகைப்படி கணக்கிட்டால் அந்த 129 பதவிகளில் 124 பார்ப்பனரல்லாதாருக்கும், 5 மட்டுமே பார்ப்பனருக்கும் உரியதாகி இருக்க வேண்டும்.

அதே ஆண்டில் நீதி இலாக்காவில், 190—பார்ப்பனர்களும் 35-பார்ப்பனரல்லாதாருந்தான் பதவி பெற்றிருந்தனர். இந்த இலாக்காக்களைப் போலத்தான் மற்ற அரசாங்க இலாக்காக்களும் இருந்தன.

மக்கள் எண்ணிக்கை விகிதப்படி பார்த்தால், பார்ப்பனர்களைப்போல், பார்ப்பனரல்லாத இந்துக்கள் 31 மடங்கு இடம் பெற்றிருக்கவேண்டும் எத்துறையிலும். ஆனல் நேர்மாருகப் பார்ப்பனர்கள், மற்றவர்களைப் போல், உத்தியோகத்தில் 20 மடங்கும், கல்வித்துறையில் 10 மடங்கும் இடம் பெற்றிருந்தனர். இதைவிட, வெட்கமும் துக்கமும் தரக்கூடிய நிலை வேறென்ன வேண்டும் பார்ப்பனரல்லாதாருக்கு?

## இழி நிலை போக்க ஓர் இயக்கம்

இந் நிலைக்காளான மக்களை ஈடேற்றுவதற்கு ஒரு இயக்கம் அதற்கென்றே அவசியமாகின்றதன்ருே? விடுதலைக்குப் போராடி வந்த "காங்கிரசில்' அதற்கு இடமின்மையினுலேயே, சமூக நீதியை நிலை நாட்ட, தென் இந்தியர் நலவுரிமைச் சங்கம், என்ற நீதிக்கட்சி, (Justice Party) தோன்ற வேண்டிய அவசியம் ஏற்பட்டதோடு, பிற்பட்ட வகுப்பார்களாகிய பெருவாரியான பொது மக்களின் பேராதரவையும் பெற்றது.

இக்காலத்தில், பார்ப்பனரல்லாதாரில் சிலர் படித்து, அரசாங்க உத்தியோகம் பெற முயற்சிக்கலாயினர். பார்ப்பனர்களே, எங்கும் பெருந்தடையாக இருந்ததால்—இத்தடையை நீக்கிப் பார்ப்பனரல்லாதாரும் எளிதில் பதவி பெறும்படி ஏதேனும் ஒரு நிலைத்த ஏற்பாடு செய்யவேண்டுமெனத் திராவிடத் தலைவர்கள்—அரசாங்கத்தை வற்புறுத்தி வந்தனர்.

அதன் காரணமாக அரசாங்கம், "வரிவசூல் இலாக்காவில் (Revenue Dept.) இனி உத்தியோகஸ்தர்கள் நியமிக்கையில், எல்லா வகுப்பார்கட்கும், பிரதிநிதித்துவம் அளிக்கும் முறையிலேயே தெரிந்தெடுக்க வேண்டும், என்ற ஒரு நிலையான உத்தரவைப் (No. 128-(2) Boards Standing Order) பிறப்பித்தது. ஆனல் இவ்வுத்தரவு ஏட்டளவில்தான் உருவாயிற்றே தவிர, செயலளவில் எதிர்பார்த்த பயன் ஏற்படவில்லை.

**கொள்கை உத்தரவாயிற்று**

இந் நிலையில், 1920-ம் ஆண்டில் நடைபெற்ற தேர்தலில்—நீதிக்கட்சியினர்—சட்ட சபையில் பெரும்பான்மையினராக வந்தனர். அதன் பயனுக பானகல் அரசரின் மந்திரிசபையும் அமைந்தது. நீதிக்கட்சியின் சார்பில், டாக்டர் நாயர் தமது இறுதி மூச்சு இருந்தவரை வற்புறுத்திவந்த வகுப்பு விகிதாசார உரிமைக் கொள்கை, வெள்ளுடை வேந்தர் தியாகராயரின் தளராத முயற்சியாலும், பானகல் மன்னரின் அறிவு நுட்பத்திறனுலும், 1921-ம் ஆண்டில் சென்னை மேல் சபையில் (Legislative council) தீர்மானமாகக் கொண்டு வரப்பட்டு நிறைவேற்றப் பட்டது.

"அரசாங்க அலுவலகங்களில் உள்ள மொத்த பதவிகளில் பார்ப்பனரல்லாதார் பெற்றுள்ள பங்கு விகிதத்தை அதிகப்படுத்தும் நோக்கத்தோடு, ரெவினியூ இலாகாவிற்கென வெளியிடப் பட்டிருந்த, அதே இலாக்காவின் எண் 128—ல் 2—ஆன, நிலையான உத்தரவை (Board's Standing Order) அரசாங்கத்தின் இலாக்காக்கள் அனைத்திற்கும் உரியதாக்க வேண்டுமெனவும், முக்கியப் பதவிகளை மட்டுமன்றி எல்லாத்தரப் பதவிகளையும், அவ்வுத்தரவு கட்டுப்படுத்த வேண்டு

மெனவும், அரசாங்கம் அதற்கேற்ப ஆணை பிறப்பிக்க வேண்டுவதோடு, ஆறுமாதங்கட்கு ஒரு முறை அவ்வுத்தரவின்படி ஏற்பட்டுள்ள முன்னேற்றத்தைக் காட்டும் அறிக்கையை இலாக்கா தலைவர்கள் அனுப்பிவைத்து, மேல்சபை உறுப்பினர்கட்குக் கிடைக்கும்படிச் செய்ய வேண்டுமெனவும் தீர்மானிக்கிறது'' என்பதே அத்தீர்மானம்.

அத் தீர்மானத்தின் படியே "அரசாங்கப் பதவிகளில், பார்ப்பனரல்லாதார் பெற்றுள்ள விகிதத்தைஉயர்த்த, ரெவினியு இலாக்காவிற்காக —அதன் 128 (2) எண்ணுள்ள நிலையான உத்தரவில், பலதரப்பட்ட வகுப்புகளுக்கும், சாதிகளுக்கும் இடையில், உத்தியோக நியமனங்களைப் பகிர்ந்தளிக்க வேண்டிய முறை குறித்து விள்க்கப் பட்டுள்ள திட்டத்தை, எல்லாத்தரப் பதவிகட்கும், அரசாங்கத்தின் எல்லா இலாக்காக்களுக்கும் கைக்கொள்ள வேண்டுமென அரசாங்கம் ஆணைபிறப்பிக்கின்றது. எல்லா இலாக்காத் தலைவர்களும் உத்தியோக நியமனம் செய்யும் அதிகாரம் பெற்ற மற்றவர்களும், இது முதல், பதவிகட்கு நியமனம் செய்ய நேரிடும்போதெல்லாம், இத்திட்டத்தை நிறைவேற்றவேண்டுமென்பது அரசின் கட்டளை" என்று ஓர் உத்தரவும் 16—9—21-ல் அரசாங்கத்தால் பிறப்பிக்கப்பட்டது.

அதன் பின்பும், அரசாங்க உத்தரவின் நோக்கத்தையும் திட்டத்தையும் தெளிவாக்கும்படி மற்றோர் உத்தரவும் பிறப்பிக்கப்பட்டது. ஆனல் இந்த வகுப்பு நீதி உத்தரவு நடவடிக்கைகளில் கைக்கொள்ளப் படவில்லை. அரசாங்க உத்தரவின் விளைவைக் காட்டும்படிக் கிடைத்து வந்த புள்ளி விவரக் குறிப்புக்கள், எதிர்பார்த்த

தற்கு மாறாகப், பழைய போக்கிலிருந்து குறிப்பிடத்தக்க மாற்றம்பெறவில்லை என்பதையும், பிற்பட்ட வகுப்புகட்கு இன்னும் சலுகை காட்டப்படவில்லை என்பதையுமே தெளிவாக்கின.

## வகுப்புரிமையை ஒழிக்க காங்கிரஸ் கேடயம்

என்றாலும் இந்த உத்தரவையும் இதன் நோக்கத்தையும் இதற்குக் காரணமான நீதிக்கட்சியையும் எதிர்த்து அக்கால பார்ப்பனப் பிரமுகர்களும் அவர்தம் ஏடுகளும் தூற்றல் பாணம் தொடுத்தனர். பிற்படுத்தப்பட்ட வகுப்பார்கட்கென நீதிக்கட்சி தோற்றுவிக்கப்பட்டவுடனேயே, அதுவரையில் காங்கிரசில் சேரத் தயங்கிக் கிடந்த பார்ப்பனர்களுங்கூட, தமது 'சுயநலத்தைக் காக்க' அக்கட்சியிலேதான் ஆதிக்கம் பெற்றாக வேண்டும் என்ற எண்ணத்தோடு, பெருவாரியாகச் சேரத் தொடங்கினார்கள். சுயராஜ்யத்திற்குப் போராடிய அதே மூவர்ணக் கொடி, பார்ப்பனர்கள் வகுப்புவாத விஷத்தை மறைக்கப் பேருதவியாயிற்று. காங்கிரசின் கதர் போர்வையில் குளிர் காயத்தொடங்கிய ஆதிக்க வகுப்பார், வைக்கப் போரில் படுத்துக் குளிர்காயும் நாய் வைக்கலைத் தின்னவரும் மாட்டினைக்கண்டு குலைப்பதைப் போல, சமூகநீதியைக் காக்கப் பணியாற்றிய கட்சியினரைக் காயத்தொடங்கினர். காங்கிரசில் புகுந்துகொண்ட பார்ப்பனர்களின் போக்கின் காரணமாகவே, காங்கிரசுக்கும் நீதிக்கட்சிக்கும் இடையில் இலட்சியத்தால் ஏற்பட்ட வேற்றுமை—பகைமையாக வளர நேரிட்டது.

காங்கிரஸ் கேடயம்

அதே சமயத்தில் காங்கிரசில் இருந்த பார்ப்பனரல்லாத தலைவர்களும், பார்ப்பனர் தேசியப்போர்வையில் புகுந்துகொண்டு, காங்கிரசையே தமக்குக் கருவியாகவும், காங்கிரஸ் பார்ப்பனரல்லாதாரிலேயே பலரைத் துணையாகவும் கொண்டு நீதிக்கட்சியையும் அதன் சமூகநீதி இலட்சியத்தையும் ஒழிக்க முயலுவதைக் கண்டு கொண்டார்கள். எனவே காங்கிரசுக்குள்ளும் பார்ப்பனர்-பார்ப்பனரல்லாதார் உணர்ச்சி அரும்பத்தொடங்கிற்று. என்றாலும் இலட்சிய வேறுபாடு காரணமாக, இரு கட்சிப் பார்ப்பனரல்லாதாரும் ஒன்றுசேர வாய்ப்பில்லை.

இதுகாறும், தனித்துமட்டுமே நின்று, இரு வேறு இலட்சியங்களாகிய அரசியல் விடுதலைக்கும், சமூக உரிமைக்கும் பாடுபட்டுவந்த காங்கிரஸ் கட்சியும், ஜஸ்டிஸ்கட்சியும், இப்பொழுது ஒன்றையொன்று நேரிடையாகவே எதிர்க்க நேரிட்டது. இருகட்சிச்சார்பிலும் கட்சியே பெரிதெனமதித்த —தந்திரமறியாத பார்ப்பனரல்லாதாரே, பெரிதும் மோதிக்கொள்ளலாயினர். பார்ப்பனர்களோ, ஊரிரண்டுபட்டால் கூத்தாடிக்குக் கொண்டாட்டம் என்பார்களே அதுபோன்ற நிலையெய்தினர் இனம் இரண்டுபட்டது கண்டு. என்றாலும், உண்மையை காங்கிரஸ் பார்ப்பனரல்லாதார் உணரத் தவறவில்லை.

இதற்கு முன்பும் பின்பும் பார்ப்பனரல்லாத தலைவர்கள் பலர் தமது கொள்கைக்கும் கருத்துக்கும் செல்வாக்கு இன்மையையும், பார்ப்பனர்கள் கருத்துக்கே செல்வாக்கு இருப்பதையும் கண்டு காங்கிரசைவிட்டு வெளியேறியுள்ளனர்.

1898-ம் ஆண்டிலேயே சென்னையில் நடைபெற்ற இந்திய தேசிய காங்கிரஸ் மாநாட்டுத் தொண்டர்படைத் தலைவராகப் பொருப்பேற்றும், அதற்கு அடுத்த ஆண்டில் லக்நெள மாநாட்டில் சொற்பொழிவாற்றியும், காங்கிரசில் பல ஆண்டுகள் தொடர்புகொண்டுமிருந்த, டாக்டர் டி. எம். நாயர் அவர்கள் காங்கிரசில் பார்ப்பனரல்லாதார் கருத்துக்குச் செல்வாக்கின்மையைத் தெளிவாகக் கண்டபின்பே அதைவிட்டு வெளியேறியவராவார்.

ஈ. வெ. ரா. வின் முதல் முயற்சி

இந்த உண்மை, 1924 டிசம்பரில் திருவண்ணாமலையில் நடைபெற்ற, தமிழ்நாடு ஆருவது காங்கிரஸ் மாநாட்டுத் தலைமை உரையிலேயே காணக் கிடக்கின்றது. பார்ப்பனர், பார்ப்பனரல்லாதார் வேற்றுமை உணர்வு தோன்றுவதற்கு அடிப்படையான காரணங்கள் இருத்தல் வேண்டுமெனவும், அதை உணர்ந்து களைய தேசபக்தர்கள் முயற்சிக்கவேண்டும் எனவும் கேட்டுக்கொண்ட மாநாட்டுத்தலைவர். ஈ. வெ. இராமசாமி அவர்கள், "காங்கிரஸ் வாதியாயிருந்த டாக்டர். டி. எம். நாயர் அவர்கள், திடீரென ஒரு கட்சியைத் தோற்றுவிக்கக் காரணங்களாய் நின்றவைகள் எவைகளோ, அவைகள் இன்னும் நிற்கின்றனவா? இல்லையா? என்பதை நேயர்கள் கவனிப்பார்களாக. அக் காரணங்கள் அழிந்துவிட்டதாக எனக்குத் தோன்றவில்லை.'' என்று தெளிவாகக் கூறியுள்ளார். டாக்டர் நாயர் நீதிக் கட்சியைத் தோற்றுவிக்கப் பெருந்துணையாக விளங்கிய சர். பி. தியாகராயரும், காங்கிரசில் பல ஆண்டுகள் தொடர்புகொண்டு, சென்னையில் நடைபெற்ற காங்கிரஸ் மாநாட்டிற்குச் செயலாளராகவும் இருந்தவர் என்

பதும், சமூக நீதிக்காகவே புது இயக்கம் கண்டார் என்பதும் உணர வேண்டிய செய்தியாகும்.

காஞ்சி மாநாட்டுக்குப்பின்

தமிழ்நாடு காங்கிரசின் தலைவர்களிலே ஒருவராகச் சிறப்புடன் விளங்கிய திரு. ஈ. வெ. ரா. அவர்களும், பார்ப்பனரல்லாதார் நிலையை உணர்ந்து, 1920-ம் ஆண்டிலேயே காங்கிரசு நிர்வாகத்தில் 100-க்கு 50-விகிதம் பார்ப்பனரல்லாதாருக்கென ஸ்தானங்கள் ஒதுக்கவேண்டுமெனகேட்கத் தொடங்கி, அதுமுதல் நடைபெற்ற ஒவ்வொரு தமிழ்நாடு காங்கிரஸ் மாநாட்டிலும் அத்திட்டத்தை வற்புறுத்தித் தீர்மானம் நிறைவேற்ற முயன்றும், முதலிலெல்லாம் அதை ஒப்புக்கொள்வதாகவும், எழுத்தில் வேண்டாமெனவும் தந்திரமாகத் தட்டித் தட்டிக் கழித்துவந்த பார்ப்பனத் தலைவர்கள், 1925-ம் ஆண்டில், காஞ்சிபுரத்தில் நடைபெற்ற மாநாட்டில், "பார்ப்பனரல்லாதாருக்குச் சரிபங்கு இடம் (50·1. விகிதம்) ஒதுக்கவேண்டும்" என்று திரு. ஈ. வெ. ரா. கொண்டுவந்த தீர்மானத்தைத் தலைமை வகித்திருந்த திரு. திரு. வி. க. அவர்களைக் கொண்டே அனுமதி மறுக்கச் செய்ததாலேயே, திரு. ஈ. வெ. ரா. அவர்களும், அவரது பார்ப்பனரல்லாத நண்பர்கள் (திரு S. இராமநாதன் M.A.,B.L., அவர்கள் உட்பட) பலரும் காங்கிரசை விட்டு வெளியேறினர்.

சுயமரியாதைச் சுடர் ஒளி

1926-ல் சுய்ராஜ்யக் கட்சியின் பேரால், காங்கிரஸ்காரர்கள் தேர்தலில் கலந்துகொள்ளத் தீர்மானித்ததாலேயே, அத்தேர்தலுக்குப்பார்ப்பனர்களையே நிறுத்தி விடுவார்களோ என்ற அச்சத்தால், பார்ப்பனரல்லாதாருக்கும் தேர்தலுக்கு

நிறுத்தப்படுவதில் சரிபங்கான இடமேனும் கிடைக்கச் செய்யவேண்டும் என்று கருதியே—1925-ல் நடந்த மாநாட்டில் திரு. ஈ. வெ. ரா. அவர்கள், அத்தீர்மானத்தை வற்புறுத்துவாராயினர்.

50·1. விகிதம் இடமளிப்பதற்குத் தடை இல்லை என்றாலும், நீதிக்கட்சியின் இக் கொள்கையை—எழுத்தில் ஒப்புக் கொண்டுவிட்டால் — இக் கொள்கை வளர்ந்து — பார்ப்பனரல்லாதார் முழுவுரிமையும் பெற முயற்சிப்பார்களே என்ற எண்ணத்தாலேயே பார்ப்பனத் தலைவர்கள்—இதற்கு 'வகுப்புவாதம்' என்ற மகுடம் சூட்டி, மாநாட்டில் நிறைவேற்றவிடாமல் தடுத்தனர்.

அதன் விளைவாக, வெளியேறிய திரு. ஈ. வெ. ரா. அவர்கள், பார்ப்பனரல்லாத சமூகத்தின் விடுதலைக்காக, சமூக இயல், அரசியல் ஆகிய துறைகளில் உழைப்பதெனத் தீர்மானித்து, பகுத்தறிவுக் கொள்கைகளில் பற்றுக்கொண்டு, திரு. எஸ். இராமநாதன் அவர்களோடு சேர்ந்து "சுயமரியாதை இயக்கத்தைத்" தோற்றுவித்தனர்.

வகுப்பு நீதிபற்றி வ. உ. சி.

அதற்குப் பல ஆண்டுகட்கு முன்பே, 1908-ல் காங்கிரஸ் இயக்கத்தில் சேர்ந்து, பின் சந்திரபாலர் நடத்திய புரட்சியில் கலந்து—வாழ் நாள் தண்டனை பெற்று, செக்கிழுத்த மறவன், கப்பலோட்டிய தமிழன், வ. உ. சிதம்பரம் பிள்ளை அவர்கள், காங்கிரஸ் இயக்கம் நேர்மையற்றவர்கள் கையில் சிக்கியதாலேயே, சிறையினின்று வெளிவந்தபின் ஒதுங்கி இருக்க நேரிட்டது. 1920-ல் கல்கத்தா காங்கிரஸ் மாநாட்டிற்குப் பிரதிநிதியாகச் சென்றபோதிலும், தலைவர் காந்தியாரின் ஒத்துழையாமைக் கொள்கையோடு மாறுபட்டதால்—மறுபடியும் ஒதுங்க வேண்டியவரானர்.

1927—ல் சேலம் மாவட்ட காங்கிரஸ் மாநாட்டிற்குத் தலைவராக அழைக்கப்பட்டார். அன்று அவர் நிகழ்த்திய தலைமைஉரை—பாரப்பனரல்லாதார் நலத்திற்கு வகுப்பு விகிதமுறை எவ்வளவு அவசியம் என்று அவர் கருதியிருந்தார் என்பதைத் தெளிவு படுத்துவதாகும்.

"இராஜாங்க உத்தியோகங்களும் ஸ்தல ஸ்தாபன உத்தியோகங்களும், பொது ஸ்தாபன உத்தியோகங்களும், நம்தேசத்திலுள்ள ஒவ்வொரு ஜாதியாருக்கும், அந்தந்த ஜாதியாரின் எண்ணிக்கை விகிதப்படி பகிர்ந்து கொடுக்கப்பட்டாலன்றி, நம் தேசத்தாருள் ஒற்றுமையுண்டாகப் போவதேயில்லை யென்பதும், நமக்குள் ஒற்றுமையுண்டாகாமல் நாம் உண்மையான சுய அரசாட்சி அடையப் போவதே இல்லை என்பதும், மனித அறிவுடைய எவருக்கும் தெளிவாக விளங்கத் தக்கவை. இவ்வுண்மைக்கு மாறுகப் பேசுகின்றவர் யாவராயினும் மனித அறிவில்லாதவர்.'' என்று வலியுறுத்திக் கூறியுள்ளார் அவர். அதன் பின்பும் காங்கிரசில் அக்கொள்கைக்கு இடமின்மையைக் கண்டே அவருங்காங்கிரசை விட்டுவிலகிப் பின் தமிழ்த்தொண்டிலே தமது இறுதிக்காலத்தைச் செலவிட்டதோடு, சுயமரியாதை இயக்கத்தையும் பாராட்டி ஊக்குவிக்க முன் வந்தார்.

முத்தையா முயற்சி

1926-ல் நடைபெற்ற தேர்தலில்—சுயராஜ்ய கட்சி (காங்கிரஸ்) பெருவாரியாக வெற்றிபெற்றது. ஆனல் காங்கிரசின் கொள்கைப்படி, மந்திரிசபை அமைக்க இணங்கக் கூடாது என்பதோடு—யார் மந்திரிசபை அமைத்தாலும் அதைத் தோற்கடிக்க வேண்டும் என்பதே, சுயராஜ்யக் கட்சியின் ஒப்புக்கொள்ளப்பட்ட திட்டமாகும். அப்பொழுது

ஜனநாயகக் கட்சியில் முக்கியத்துவம் பெற்று விளங்கிய திரு. எஸ். முத்தையா முதலியார் அவர்கள் — கவர்னர் கேட்டுக்கொண்டும் — மந்திரிசபை அமைக்க மறுத்துவிடவே, சுயேச்சைக்கட்சியினராகிய டாக்டர் சுப்பராயன் அவர்கள் மந்திரிசபை அமைக்க முன்வந்தார், அந்தமந்திரிசபையில் தங்கள் விருப்பப்படி நடக்கக் கூடிய இருவரை மந்திரிகளாக்கி, சுயராஜ்யா கட்சியினர் ஒத்துழைக்கத் தொடங்கினர்கள். இது கட்சிக் கொள்கைக்கும் நேர்மைக்கும் முரண்பட்டிருந்ததைக் கண்ட திரு. எஸ். முத்தையா முதலியார் அவர்கள், மாகாணக் காங்கிரஸ் கமிட்டியில் இதை எடுத்துக் கூறியும் பயனின்மையால், 1927-ஜூன் மாதத்தில் நடைபெற்ற அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியில், அக்கமிட்டியின் உறுப்பினன் என்ற முறையில், "சென்னை மாகாணக் காங்கிரசின் நாணயமற்ற, ஒழுங்கற்ற போக்கு காரணமாக அதன்மீது நம்பிக்கை இல்லை" என்றொரு தீர்மானத்தின் மீது பேச முயற்சித்தார்கள்.

### காங்கிரஸ் ஏதேச்சாதிகாரம்

காங்கிரஸ் தலைவராக இருந்த திரு. எஸ். சீனிவாசய்யங்கார் அவர்கள், திரு. முத்தையா அவர்கட்குப்பேசவாய்ப்பின்றி செய்து, அத்தீர்மானத்தைப் பற்றி விசாரித்தறிந்து முடிவுகட்ட ஒரு தனிக்குழுவை அமைத்து, அந்தக்குழு எப்பொழுது கூடுகிறது என்பதேகூட, அதில் ஒருவராக நியமிக்கப்பட்ட திரு. முத்தையா முதலியார் அவர்கட்குத் தெரிவிக்காமலேயே, "அத்தீர்மானத்தின் குற்றச்சாட்டுகள் உண்மையல்ல" என்ற முடிவிற்கு அக்குழு வந்துவிட்டதாகப் பின்னர் அறிவித்து விட்டார். அக்குழுவில் நியமிக்கப்பட்டவர்கள், தலைவர் திரு. எஸ். சீனிவாசய்யங்கார், திரு. எஸ்.

முத்தையா முதலியார், திரு. ஏ. ரங்கசாமி ஐயங்கார், திரு. எஸ். சத்தியமூர்த்தி சாஸ்திரி, திரு. சாமி. வெங்கடாசலம் செட்டி ஆகியோர் ஆவர். இவர்களுள், தீர்மானத்தைக் கொண்டு வந்தவர் அறியாமலே, குழு கூடித் தீர்மானத்தை ஒதுக்கிவிட்டது எனில், காங்கிரசில் பார்ப்பன ரல்லாதார் கருத்துக்கும் நேர்மைக்கும் கிடைக்கும் மதிப்பை அறிந்த பின்பும், கடமை உணர்ச்சி யுள்ள எவர்தான் அக்கட்சியில் இருக்க சம்மதிப்பர்?

எனவேதான், திரு. எஸ். முத்தையா முதலி யார் அவர்கள் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி உறுப்பினர் பதவியினின்றும், சுயராஜ்யா கட்சியி னின்றும், 1928-ஆகஸ்டில், வெளியேறி, சட்ட சபையிலேயே ஒரு தனிக்கட்சி அமைப்பாரா யினர்.

இவர்களைப் போன்றே பிற்காலத்தில்—டாக் டர். வரதராசலு நாயுடு அவர்களும், சில வாண்டு கட்கு முன்—திரு. வி. க. அவர்களும், காங்கிரசை விட்டு வெளியேறினர். அதுபோலவே, நீதிக் கட்சியை முதலில் ஆதரித்து நின்ற ஓரிரு பார்ப் பனத் தலைவர்களும் பின்னால் விலகிக் கொண்ட னர். ஆனால் காங்கிரசில் சேர்ந்த எந்தத் தென் னாட்டுப் பார்ப்பனத் தலைவரும் பின்னர் அதை விட்டு விலகியதில்லை, விலகி யிருப்பினும் மாறு பாடு கொண்டதில்லை என்பதும் அறியத்தக்க தாகும்.

இவ்வாறு, தெளிவாகவே—நீதிக்கட்சி பார்ப் பனரல்லாதார் கட்சியாகவும், காங்கிரஸ் கட்சி பார்ப்பனரல்லாதாரே பெருவாரியாக இருந்தாலும் பார்ப்பனர் நலக் கொள்கைகளையே ஒப்புக் கொண்ட கட்சியாகவும் உருப்பெற்றன,

நீதிக்கட்சி வகுப்புரிமையை நிலை நாட்ட முற்பட்டபோதெல்லாம் காங்கிரசே அதை வன்மையாக எதிர்த்து வந்தது.

இருபதாம் நூற்றாண்டின் துவக்கத்தில் மேல் நாடுகளில் உரிமைக் கிளர்ச்சியும், ரஷ்யாவில் பொதுவுடமைப் புரட்சியும் பூத்தபோது, இந்தியாவில் "சுயராஜ்யக் கிளர்ச்சியும்" (Home Rule Movement.) தென்னாட்டில் "சமூக நீதிக் கிளர்ச்சியும்" தோன்றின. இரண்டும் மோதுதலின்றி இயங்கி இருக்கக் கூடும், சுயநல ஆதிக்கவாதிகள் நுழையாமல் இருந்திருந்தால்.

### போர் முகாம் அமைத்தனர்

பார்ப்பனர் ஆதிக்கத்தை எதிர்த்து நீதிக்கட்சியினர் சமூக நீதிக் கொள்கையை வலியுறுத்தவே, பார்ப்பனர் காங்கிரசில் சேர்ந்து நீதிக்கட்சியை வீழ்த்த முயன்றனர். காங்கிரசில் இருந்த பார்ப்பனரல்லாத தலைவர்களில் முக்கியமான சிலரும், அதைவிட்டு வெளிவந்து, காங்கிரசையே எதிர்க்கத் தொடங்கினர். தென்னாட்டுக் காங்கிரஸ், ஒரு பார்ப்பன ஆதிக்கக் கருவி என்ற எண்ணமும் பொது மக்களிடத்தில் பரவியது. நீதிக்கட்சியின் சார்பில் பார்ப்பனரல்லாதார் அமைச்சர்களாக ஆதிக்கம் செலுத்தத் தொடங்கியது கண்டதும் அவர்களது ஆத்திரம் வளரவே—நீதிக்கட்சியை ஒழிப்பது தமது பிறப்புரிமை எனக் கங்கணம் கட்டிக் கொண்டு, நீதிக்கட்சித் தலைவர்களை, பதவிப் பித்தர்கள் என்றெல்லாம் தூற்றத் தொடங்கினர்.

பார்ப்பனரல்லாத தலைவர்களோ, ஆங்கில ஆட்சியை ஒழிக்க வேண்டுமென உரத்துப்பேசி தேசத்தியாகி ஆகி காங்கிரசில் முக்கியத்துவம் பெற்ற பார்ப்பனத் தலைவர் பலரும், தம்பிள்ளை,

மருமகன், உற்றார், உறவினருக் கெல்லாம் அரசாங்க உத்தியோகம் தேடிக்கொடுக்கக்கையாண்ட சூழ்ச்சிகளையும், முறைகளையும் கண்டபோது அதற்குத் துணையாகும் காங்கிரஸ் மீதே வெறுப்புக் கொள்ளலானார்கள். இதனால் இருகட்சிகளுக்குமிடையில் பலமான மோதுதல்கள் நிகழ்ந்தன.

**பிர்மண்ணீய பித்தலாட்டங்கள்?**

இந்த மோதுதல்களிலெல்லாம்—வகுப்புத் துவேஷிகளான பார்ப்பனர்—வகுப்புரிமைக்குப் போராடியவர்களை, வகுப்பு வாதிகள், பிராமணத் துவேஷிகள், தேசத் துரோகிகள்—என்று பல வாறு, பலமான வெறுப்பை உண்டாக்கும் விதத்தில் பலத்த பிரசாரம் செய்து வந்தனர்.

அவர்களது பிரசாரப் போரோ தேசியமே கவசமாகவும், காங்கிரஸ் கட்சியே கேடயமாகவும், தேசியப் பத்திரிக்கைகளே விற்களாகவும், அதிலிருந்து வெளியாகும் செய்திகளும் தலையங்கங்களுமே கணைகளாகவும், ஆதிக்க வெறியே ஊக்கமாகவும், இன ஒற்றுமையே அணியமைப்பாகவும், மக்களின் மௌடீகமே காட்டரணாகவும், பிராமண பக்தியே அகழ் அரணாகவும், வர்ணாஸ்ரம தர்மமே மதில் அரணாகவும், வைதீகமே கோட்டைக் கதவுகளாகவும், மனு நீதியே கணைய மரமாகவும், வேதாகம இதிகாச புராணங்களே, ரதகஜ துரகபதாதிப் படைகளாகவும், தந்திரமே போர் முறையாகவும் கொண்டு, 'சமூக நீதியை' வீழ்த்துவதே வெற்றியாகக் கருதி நடத்தப்பட்டது.

வெளுத்ததெல்லாம் பால், பிராமணாள் வாயிலிருந்து வந்ததெல்லாம் வேதம், காங்கிரஸ்காரர் சொன்னதெல்லாம் காந்திவாக்கு என்று ஏண்

ணிக் கிடந்த ஏமாளிகள் — அவர்களது பிரசாரத்தை நம்பத்தான் செய்தனர். நீதிக் கட்சியினரோ, பிரசாரத்திற்கு—இவ்வளவு வாய்ப்புகளையும் வசதிகளையும் பெருததோடு, எதிர் ஆறு நீந்தவேண்டியவர்களாக ஆனதால்— காங்கிரஸ் பேரால் பார்ப்பனர் நடத்திய பொய்ப் பிரசாரத்தைப் பலனற்றதாகச் செய்ய முடியவில்லை.

என்ருலும், அரசாங்கத்தின் சமூகநீதி உத்தரவை, ஆதிக்கவாதிகளால் வீழ்த்த முடியாவிடினும், அதற்குக் காரணமாக இருந்த நீதிக்கட்சியை, சுயராஜ்யக் கட்சியின்மூலம் 1926-ல் நடந்த தேர்தலில்—தோல்வியுறச் செய்துவிட்டனர்.

ஆனுலும், காங்கிரஸ் பார்ப்பனரல்லாதாரும் கூட, வகுப்புவாதிகள் யார் என்பதை உணரவும், பார்ப்பனர்களின் தேசீய முகமூடி நீக்கப்படவும் வாய்ப்புக்கள் இதனுல் ஏற்பட்டன.

நீதிக்கட்சி தேர்தலில்—பெருவாரியாகச் சட்டசபையைக் கைப்பற்ருது தோற்ருலும், அதன் 'சமூகநீதி' இலட்சியம் தோற்றுவிடவில்லை. 1926—தேர்தலுக்குப்பின்—காங்கிரஸ் கட்சியின் மறைமுக ஆதரவோடு அமைக்கப்பட்ட டாக்டர் சுப்பராயன் அவர்களின் முதல் மந்திரிசபை நிலைக்க முடியவில்லை. டாக்டர். சுப்பராயனைத் தவிர மற்ற மந்திரிகள் இருவரும் ராஜிநாமா செய்துவிடவே, சுயேச்சைக் கட்சியினராக இருந்த திரு. எஸ். முத்தையா முதலியார் அவர்கள் இரண்டாவது அமைச்சராகவும், திரு. சேதுரத்தினம் ஐயர் மூன்ருவது அமைச்சராகவும் பொருப்பேற்றுக்கொண்ட பின்னர்தான்—மந்திரிசபை, சட்டசபையின் ஆதரவைப் பெற முடிந்தது.

## 4. கம்யூனல் ஜி. ஓ. தோற்றம்

அதுமட்டுமன்றி, திரு. முத்தையா அவர்கள் இந்த மந்திரிசபையில்இடம்பெற்ற பின்னர் தான்—நீதிக்கட்சியின் சமூகநீதி இலட்சியம், எளிதில் நிறைவேறும்படியான கம்யூனல் ஜி. ஓ. உத்தரவு, ஓர் உருவான முறையில் பிறப்பிக்கப் பட்டது.

என்றாலும், இத்தகைய அரும்பெரும் பணியாற்றிய—அறிஞர். முத்தையா அவர்களும்கூட 1931-ல் நடைபெற்ற தேர்தலில், திரு. எஸ். இராமநாதன் M.A B.L., அவர்களை எதிர்த்து நிற்கச் செய்து தோற்கடிக்கப்பட்டார். அந்தத் தோல்விக்கும் பார்ப்பனரின் இடைவிடாத கோயபல்ஸ் பிரசார வன்மையும், நீதிக்கட்சித் தலைவர்களின் ஒற்றுமைக் குறைவும், பார்ப்பனரல்லாதாரின் இனப்பற்றுக் குறைவும், பார்ப்பனரல்லாதாரின் பிரசார வசதிக் குறைவுமே காரணங்களாகும்.

இலட்சிய வளர்ச்சி

எனினும், நீதிக்கட்சியின் சமூக, சமத்துவ, சகோதரத்துவ, உரிமைக் கொள்கைகள் இன்று மாற்றுக் கட்சியினராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளதைக் காணும்போது, நீதி நிலை நாட்டப் பட்டே தீரும் என்ற உறுதி பிறக்கின்றது—நீதிக்கட்சி பிற்காலத் தேர்தலில் தோற்றாலும், உண்மையில் இலட்சியத்தில் தோற்றுவிடவில்லை என்பதும், மாறாக, அக்கட்சியை இவ்வளவு அடி ஆழத்தில் புதைத்து விட்டோம், எழுந்திருக்கமுடியாதபடி செய்துவிட்டோம் என்று கூவிய அரசியல் வெட்டியான்களாகிய சாஸ்திரிகளைத்தான், தேடுமிடம் தெரியவில்லை என்பதும் தெளிவாகின்றது.

ஒருவேளை நீதிக்கட்சியைப் புதைத்தது உண்மையானால், அதன் ஆவிதான், இன்றைய ஆள

வந்தாராக இருந்து தம்மை அச்சுறுத்துகின்றதோ என்ற சந்தேகம் அவர்களுக்குப் பிறப்பதில் அர்த்தமில்லையென்று நாம் எப்படிக்கூற முடியும்?

குறை, குமுறலாக மாறியது

1921-ம் ஆண்டிலேயே சமூக நீதிக்காக, எல்லா வகுப்பார்கட்கும் அரசாங்க உத்தியோகம் கிடைக்கும்படி நியமனங்கள் செய்யவேண்டும் என சர்க்காரால் உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருந்தும் (1928-வரையில்) ஏழாண்டு கழிந்த பின்பும்—பிற்படுத்தப்பட்ட வகுப்பாருக்குக் காட்டப்பட வேண்டிய சலுகை காட்டப்படாததால்—பொது மக்கள் எந்த விதத்தும் முன்னேற வாய்ப்பின்றி வெறுப்பும், கொதிப்புமடைந்து குமுறலானார்கள்.

இந்நிலையில் தான், 1928-ல் சுயேச்சை மந்திரி சபையில் இரண்டாவது அமைச்சராகத் திகழ்ந்த, அறிஞர். எஸ். முத்தையா முதலியார் அவர்கள் பல ஆண்டுகளாகவே, தென்னாட்டின் அறிஞர் பெருமக்களை யெல்லாம் கவலையுறச் செய்து வந்த இந்தச் சிக்கலான பிரச்சினை குறித்துத் தமது மன உறுதியாலும் அறிவு நுட்பத்தாலும், ஓர் நல் முடிவைக் கண்டார்கள்.

மாகாண உத்தியோகஸ்தர்களின் (Provincial & Sub-ordinate Services) உத்தியோக விதிகளை, சிவில் உத்தியோகஸ்தர்கள் டெலிகேஷன் விதிகளின் கீழ் (Civil Services Delegation Rules) நிர்ணயிக்கும்படி, சென்னை அரசாங்கத்தை இந்திய டொமினியன் காரியதரிசி, (Secretary of State for India) கேட்டுக்கொண்டார்.

இந்த வாய்ப்பைக் கொண்டு ஒரே வகுப்பாரின் ஆதிக்கத்தில் சிக்கியுள்ள அரசாங்க உத்தியோக மண்டல வாயிலைத் திறந்து வைத்து எல்லா வகுப்புகட்கும் சமசந்தர்ப்பம் கிடைக்கும்படியான

முறையிலும், சமூக நீதியை நடைமுறையில் நிலை நாட்டத்தக்க விதத்திலும் விதிகளை அமைத்தாக வேண்டும் என்ற முடிவிற்கு வந்தார் அமைச்சர், முத்தையா அவர்கள்.

எதிர்ப்பும் ஆதரவும்

பலப்பல வகுப்பாரின் நிலைகளையும், எண்ணங்களையும் பல மாதங்கள் வரை, ஆழ்ந்தும் சூழ்ந்தும் சிந்தித்தே முடிவிற்கு வந்தார். அம்முடிவைக் கவர்னரின் ஆட்சிக் குழு உறுப்பினர்களிலேயே சிலர், (Executive council Members) அறியாமையாலும், அகம்பாவத்தாலும் எதிர்த்தபோதிலும், இன்றளவும், பிற்படுத்தப்பட்ட மக்கள் எல்லோருடைய முன்னேற்றத்திற்கும், ஒரேவாயிலாகவும் அரணுகவும் அமைந்துள்ள 'கம்யூனல் ஜி. ஒ' வினை 1928-ல் அமைச்சர் முத்தையா அவர்கள் அரசாங்கத்தின் ஆணையாக்கினர்கள்.

முதலில் கவர்னரின் ஆட்சிக் குழுவினரிலேயே சிலர் இத்திட்டத்தை ஒப்புக்கொள்ளாததால் தமது நிர்வாகத்தில் இருந்த ஆவணப்பதிவு (Registration Dept.) இலாக்காவில் மட்டுமே, முதன் முதலில் நடைமுறையில் கொண்டு வந்தார். இது நடைமுறையில் வெற்றிகரமாக நடப்பதைக் கண்டவுடன் முதலில் இதை எதிர்த்தவர்களும் கூட, சில காலத்திற்குள்ளாகவே, தத்தமது இலாக்காவிலும் நிறைவேற்ற முன் வந்தார்கள். ஆனல் இதற்கும் எதிர்ப்பு ஏற்படாமல் இல்லை. 1928 நவம்பர், 27-ல் சென்னை மேல் சபையில், திரு. சாமி. வெங்கடாசலம் செட்டி அவர்கள் ஓர் ஒத்திவைப்புத் தீர்மானம் கொண்டுவந்தார்.

"ஆவணப் பதிவு இலாக்காவில் அண்மையில் செய்யப்பட்டுள்ள நியமனம் குறித்து அரசாங்கம் கைக்கொண்டுள்ள முறையையும், பொது நன்

மையை நோக்க மிகவும் முக்கியத்துவம் பெற்றுள்ள அத்திட்டத்தையும் "குறித்து ஆராய" என்றே அத்தீர்மானம் கொண்டுவரப்பட்டது.

அதன் மீது மேல் சபையில் நடைபெற்ற விவாதம், வகுப்புவாரி உரிமையை எதிர்ப்பது அதன் நோக்கம் அல்ல என்பதையும், வைஸ்ராய் குழுவின் அனுமதியின்றி சட்டம் செய்ய மாகாண சர்க்காருக்கு அதிகாரம் உண்டா? என்பது குறித்தும், சிறந்த ஊதியமுள்ள பதவிகளுக்கு (Selection grade) உயர்த்தப்படுவதற்கும் அத்திட்டம் செல்லுமா? என்பது குறித்தும் அறியவே கொண்டு வரப்பட்டது என்பதையும் தெளிவாக்கிற்று.

அத்தீர்மானத்தின் மீது திரு. கரந்த் அவர்கள் (கனம் பிரகாசம் மந்திரி சபையில் அமைச்சராக இருந்தவர்) பேசுகையில், "நியாயமும் தகுதியுமான அளவு அரசாங்க அலுவல்களில் தங்களுக்குப் பங்களிக்க வேண்டும் என்ற பார்ப்பனரல்லாத மக்களின் உரிமைக்கு மாறாக நான் எதைக் கூறவும் காரணமில்லை. இந்தச் சபையில் 1921-ஆகஸ்டில் நடைபெற்ற விவாதத்தையும் நான் படித்திருக்கிறேன். சிறப்பாகப் பிற்படுத்தப்பட்டவர்கள் உண்மையிலேயே அரசாங்க அலுவலில் அதிகமான அளவு இடம் பெற வேண்டும் என்பது முற்றிலும் நியாயமேயானதால் அதனோடு எவ்வித மாறுபாடும் என்க்கில்லை.' என்றும் கூறினார்.

ஒத்தி வைப்புத் தீர்மானத்தைக் கொண்டு வந்த, திரு. சாமி வெங்கடாசலம் செட்டி அவர்களே, "அரசாங்க அலுவலில் இடமே பெறாத வகுப்புக்களுக்கும், குறைந்த அளவே இடம் பெற்றுள்ள வகுப்புக்களுக்கும், நிச்சயமாக வேலை கிடைக்கும்படி இடம் ஒதுக்குவதற்காக அரசாங்

கம் எடுத்துள்ள நடவடிக்கையை எதிர்ப்பதல்ல தம் நோக்கமென்றும், அந்த வகுப்பு வாரி உத்தரவானது அரசாங்க உத்தியோகங்கள் அனைத்துக்கும் பொருந்தக்கூடிய விதத்தில், நிலைத்த உண்மைகளுக்கும் சிந்தனைக்கும் ஏற்ப அமையவேண்டும் என்பதே தம் நோக்கம் என்றும் தெரிவித்தார்.

இவ்வாறு, ஒத்திவைப்புத் தீர்மானம், விவாதத்தில் ஆதரவுத் தீர்மானமாகவே அமைந்து ஓட்டுக்கு விடப்படாமல், விவாதத்தோடு முடிவுற்றது. அதன் பின்னரே, கம்யூனல் ஜி. ஓ. சென்னை அரசாங்கத்தின் நிரந்தர உத்தரவாயிற்று.

## இதுவா வகுப்புத் துவேஷம்

இந்த வகுப்புவாரி உத்தரவின் வடிவத்தை அறிவதும் அவசியம். அரசாங்கத்தில் நியமனம் செய்ய மொத்தம் 12 உத்தியோகங்கள் உள்ளனவெனில், அவற்றை,

| | |
|---|---|
| இந்து பார்ப்பனரல்லாதாருக்கு | 5 |
| பார்ப்பனர்கட்கு | 2 |
| முகம்மதியர்கட்கு | 2 |
| கிருத்தவர்கட்கு (ஆங்கிலோ இந்தியர் உட்பட) | 2 |
| மற்றவர்கட்கு (ஆதித்திராவிடர் உட்பட) | 1 |

என்ற விகிதத்தில் பங்கிட்டளிக்க வேண்டும் என்பதே அவ்வுத்தரவு.

இவ்வுத்தரவு பிறந்தவுடன், இது வகுப்புவாத உத்தரவு, பிராமணத் துவேஷிகளின் செயல் என்று தூற்றக் காரணமுண்டா என்று எண்ணிப் பாருங்கள்.

1921—முதல் 27 வரை நீதிக்கட்சி மந்திரி சபையே முயன்றுங்கூட, ஏதோ சிறிதளவுதான் பிற்படுத்தப்பட்ட வகுப்பினர் உத்தியோகம் பெற முடிந்ததெனில்—காரணம் என்ன? பெரும்பான்மையோர் முயற்சி பாழாகின்ற அளவுக்கு, சிறுபான்மையினரின் ஆதிக்கம், அரசாங்கத துறைகளில் இறுகிப்போய் இருந்தது என்பது தானே? மற்ற இனத்தவர் நுழைய விடாதபடி, இடம் ஏற்படும் போதெல்லாம், தமது வகுபபாரையே உள்ளே இழுத்துக்கொண்டனர் என்பது தானே? சத்திரத்துச் சோத்துக்கு சாத்தையங்கார் உத்தரவா? என்பது பழமொழி. ஆனால், அரசாங்க உத்தியோகத்துக்கு அய்யர்வாள் அநுக்ரகம் இல்லாவிட்டால் ஆகாது என்ற நிலை ஏற்பட்டது. அநுக்ரகம் யாருக்கு எளிதில் கிடைக்கும்?

எனவேதான் மற்றவர்களுக்கு உரிய இடங்களையெல்லாம், பார்ப்பனரே ஆக்ரமித்துக்கொள்வதைத் தடுக்கும்பொருட்டும், மற்றவர்கள் நுழைய வழி செய்யும் பொருட்டும் இந்த உத்தரவு அவசியமாயிற்று. காலியாகும் உத்தியோகங்களில், ஆளுள்ள வரையில், கிடைத்தவரையில், தாங்களே அமர்ந்து கொள்வது என்றிருந்த நிலையை மாற்றி—பன்னிரண்டில் பத்து மற்றவர்கட்கும் உரியது என்ற திட்டத்தை இவ்வுத்தரவு ஏற்படுத்தியது.

### ஓயாத ஒப்பாரி

இதனாலேயே பார்ப்பனருக்கு ஆத்திரம் பிறந்தது. பன்னிரண்டில் ஆறுக்கு மேல் பத்து வரையில் நிரப்பிக்கொண்டுள்ள எங்களுக்கு இரண்டு தானா? நாளொன்றுக்கு எட்டு வேளை விருந்துண்ட எங்களுக்கு மூன்று வேளைதானா விருந்து? என்ற எண்ணத்தால், வேதமோதிகளின் வழிவந்தோர் வேதனையைக் கொட்டிக்கொண்டனர்.

அவர்கள் எண்ணவில்லை தங்களுக்கு நியாய மாகக் கிடைக்கவேண்டியது எவ்வளவு? கிடைத் துள்ளது எவ்வளவு? என்பதை. உண்மையில் அவர்கள், எக்காரணத்தாலோ பெற்றிருந்த எண்ணற்ற பதவிகளை யாரும் பங்கிடவில்லை, அவர் கள் உட்கார்ந்திருந்த இடத்தைக்கூட அசைக்க வில்லை; ஒருவரைக்கூட வீட்டிற்கு அனுப்பவில்லை என்றாலும் அவர்கள் ஒப்பாரி மட்டும் ஓயவில்லை

உண்மையில், மொத்த பதவிகளில் (12-ல் 2 தான்) ஆறில் ஒரு பங்குதான் அவர்கட்கு என்றா லும், அவர்களுடைய ஜனத்தொகையின் விகிதத் தின்படி பார்த்தால், அவர்களுக்கு நியாயமாக உரி யதைவிட அதிகமாக - ஆறுமடங்கு அளிக்கப்பட் டிருந்தது. தென்னாட்டு மக்கள் தொகையில் 100-க்கு 3-க்கும் குறைவான (1000-க்கு 27-பேராக உள்ள) அவ்வகுப்பாருக்கு 100-க்கு 17—உத்தி யோகங்கள் ஒதுக்கப்பட்டன. 100-க்கு 68 பேராக உள்ள இந்து பார்ப்பன ரல்லாதாருக்கோ —பன் னிரண்டிலே ஐந்து உத்தியோகங்கள்தான், அதா வது 100-க்கு 42—பதவிகள் தான். ஆனால்— பார்ப்பனரல்லாதார் இதை எதிர்க்க வில்லை.

விசித்திர நிலை

மற்ற வகுப்பாரின் மக்கள் தொகையோடு— கொடுக்கப்பட்ட பதவி விகிதத்தைக்கணக்கிட்டால்

| | | | | |
|---|---|---|---|---|
| நூற்றுக்கு | | | | |
| | 3 பேரான | பார்ப்பனருக்கு | 2—உத்தியோகம் | |
| ,, | 4 ,, | கிருஸ்தவருக்கு | 2— | ,, |
| ,, | 8 ,, | முகம்மதியருக்கு | 2— | ,, |
| ,, | 16 ,, | ஆதிதிராவிடருக்கு (மற்றவருடன் சேர்த்து) | 1— | ,, |
| ,, | 68 ,, | பார்ப்பனரல்லாதாருக்கு | 5— | ,, |
| | 91 | | 12 | |

இந்த விகிதத்தைக் கவனித்தால் இதை எதிர்த்திருக்கவேண்டியவர்கள், முறையே—ஆதித் திராவிட மக்களும், பார்ப்பனரல்லாதாருமே என்பது தெரியும். ஆனால் இதனால் யார் அதிக இலாபம் பெற்றனரோ அவர்களே எதிர்க்கும் விசித்திர நிலை பிறந்தது. 'நீதி' அவ்வளவு உருவழிந்திருந்தது. மற்ற மக்கள் கருத்துக் குருடர்களாய், வைதீகச் சேற்றில் சிக்கிச் சீரழிந்து கொண்டிருந்தனர்.

## புதிய முதலாளித்வம்

அரசாங்க உத்தியோகம் யார் வேண்டுமானாலும் பெறமுடியாது. தகுதி இல்லாதவனோ, வெளிநாட்டானோ எப்படிப்பெற முடியாதோ அதே போல—அரசாங்க உத்தியோகங்களை ஒரு நாட்டில் உள்ள ஒரு சிறு கூட்டத்தார் மட்டுமே கைப்பற்றிக் கொள்ளவும் அனுமதிக்கக்கூடாது. அப்படி அனுமதிக்கப்பட்டால், பெரும்பான்மையோரின் உரிமை புறக்கணிக்கப்படுகிறது என்றே பொருள்படும். அத்துடன் பெரும்பான்மையோர் செலுத்தும் வரிப்பணத்தின் ஒரு பகுதி அரசாங்க நடப்புச் செலவின் பெயரால் சம்பளம் மூலமாய், ஒரு சிறுபான்மை இனத்திற்கே—பங்கிட்டளிக்கப்படவும், வரிகட்டும் பெருவாரியான மக்கள் வரியிலே பங்குபெற உரிமை இருந்தும் அதை இழக்கவும் காரணமாகிறது.

அதுமட்டுமன்றிக், "கால் காசானாலும் அரண்மனைச் சேவகம்" என்ற பழமொழி தெரிவிக்கின்றபடி, அரசாங்க உத்தியோகத்தின் மூலம் பெறக் கூடிய செல்வாக்கையும் உரிமையையும் கூடப் பெருவாரியான மக்கள் இழக்கவும், அந்தச் சிறுபான்மையோரிடம் பெரும்பான்மையோர் அடிமைப்படவும், என்றென்றும் முன்னேற்ற

மின்றி வாடவும் வழியாகின்றது. அதனால் நீதியும் சாய்கின்றது, வகுப்புத் துவேஷமும் வளர இட மேற்படுகின்றது. விளக்கமாகக் கூறுவதானால் அந்நிலையை, ஒரு புது மாதிரியான—முதலாளித் துவம் தோன்றுகிறது என்றுதான் கூறவேண்டும்.

எனவே தான், சமூக சமத்துவத்தையும், பெரும்பான்மையோரின் உரிமையையும், வகுப்பு நீதியையும் நிலைநாட்ட, இந்த வகுப்புவாரி உத்த ரவு கொண்டுவரப்பட்டது.

**ஆட்சி செம்மையுற வேண்டுமானால்....?**

படித்தவர்கள் மூலந்தான் ஒவ்வொரு வகுப் பும், அரசாங்க உத்தியோகத்தில் தனக்குரிய பங் கைப்பெற முடியும். சமூகத்தின் உரிமையைப் பெற கருவிகளாக உள்ள படித்தவர்களை அதிக மாகக் கொண்ட சமூகம் அதிக உரிமையையும், அந்தக் கருவியைக் குறைவாகவே அடைந்துள்ள சமூகம் குறைந்த பங்கைப் பெற்று உரிமையை இழந்திருப்பதும் இயல்பேயாகும். ஆனால் இந்நிலை ஏற்படாதபடி எல்லாச் சமூகங்களிலுள்ளவர்களும் சமவிகிதத்தில் படித்தவர்களாகும்படிக் கவனித் துக்கொள்வதும் அரசாங்கக் கடமையாகும்.

படித்துத் தகுதி பெற்றவர்கள் எல்லோருக் குமே அரசாங்க உத்தியோகம் கிடைக்கமுடியாது. படித்தவர்களில் பாதி பேருக்கோ இன்னும் குறைந்தவர்கட்கோதான் உள்ள உத்தியோகங் களை அளிக்கமுடியும். இந் நிலையில் பல்வேறு வகுப்பினரும், முரண்பட்ட இனத்தினரும் வாழும் ஒரு நாட்டில், ஒரு கூட்டம் (சிறிது) மற்றோர் கூட் டத்தை (பெரிது) அடக்கி ஆள முனையும் ஒரு நாட்டில், ஆட்சி செம்மையாக நடைபெற வேண்டு மானால், வகுப்புகளுக்கேற்ப பதவிகளைப் பங்கிட்டுத் தான் ஆகவேண்டும்.

இதை உணர்ந்தே, நாட்டிலுள்ள வகுப்புக்களின் மக்கள் தொகை மட்டுமன்றி, அதிலுள்ள படித்தவர்களின் தொகையையும் கணக்கிட்டு, அவ்வகுப்பு முன்னதாகவே அரசாங்கத்தில் பெற்றிருந்த பதவிகளின் அளவையும், இனி படித்தவர்களில் எவ்வளவு விகிதத்தினருக்கு உத்தியோகம் அளிக்கவியலும் என்பதையும் ஒப்பு நோக்கியே, பிற்பட்ட வகுப்புகளுக்கு இடம் கிடைக்கும்படி, வகுப்புவாரி உத்தரவு பிறப்பிக்கப்பட்டது.

உதாரணமாக 1927-ஆம் ஆண்டில் 100-க்கு 8 பேர் எழுதப்படிக்கத் தெரிந்தவர் எனில், பார்ப்பனர் 100-க்கு 60-பேரும், பா. அல்லாதார் 100-க்கு 17-பேருமாகவே இருந்தனர். ஆங்கிலம் எழுதப் படிக்கத் தெரிந்தவர் எனில், பார்ப்பனர் 100-க்கு 17-பேரும் பா. அல்லாதார் 100-க்கு 1-க்கும் குறைவாக-(6) பேருமாகவே இருந்தனர். ஆதித்திராவிடரிலோ—ஆயிரத்துக்கும் ஒருவராகவோ, அல்லது இன்னும் குறைவாகவோ இருந்தனர்.

இங்கிலீஷில் படித்தவர்களில், உத்தியோகத்திற்குத் தகுதியுடையவர்களாக உள்ளவர்களைக் கணக்கிட்டால்—அதில் ஏறத்தாழ 100-க்கு 40-பேர் பார்ப்பனர்களாக இருந்தனர். உத்தியோகத் தகுதியுடையவர்கள் எல்லோருக்கும் அரசாங்கம் உத்தியோகம் அளிக்கமுடியாத நிலையும் ஏற்பட்டது. அவர்களில், 100-க்கு 50-முதல் 60 பேர் வரையில்தான் உத்தியோகம் பெறக்கூடிய வாய்ப்பு இருந்தது.

உதாரணமாக, மொத்தம் 12-உத்தியோகங்கள் உள்ளனவெனில், 22-பேர் போட்டியிட்டனர். அவர்களில் பார்ப்பனர் 10 பேராகவும், பா. அல்லாத இந்துக்கள் 6 பேராகவும், கிருத்தவர் 3 பேராகவும், முகம்மதியர் 2 பேராகவும், ஆதிதிராவிடரோ

—மற்றவரோ ஒருவராகவும், ஏறத்தாழ இந்த விகிதத்தில் இருந்தனர். உத்தியோகத் துறையில் இருந்த ஆதிக்க நிலைப்படியோ, அந்த 12உத்தியோகங்களில், 8 அல்லது 9 பார்ப்பனருக்கும், 2 கிருத்தவர்கட்கும் மற்றவர்கள் எல்லோருக்குமாக 1 அல்லது, 2-இடங்களுமே கிடைக்கும் நிலைமை இருந்தது. உத்தியோகங்கட்குப் போட்டி ஏற்பட்டுவிட்ட பிறகு, சமூகங்களின் உரிமைகளைப் புறக்கணிக்காமல், பங்கிட்டுத்தானே அளிக்கவேண்டும்?

'அவர்களுக்கு' தானம்!

ஏற்கெனவே, அரசாங்க உத்தியோகங்களில் 100-க்கு 60-க்கு மேல் 70-வரை இடம் பெற்றிருந்த பார்ப்பனருக்கு, 'அவர்களது' ஆதிக்கம் அத்துறையிலிருந்து நீங்கும்வரை — உத்தியோகம் அளிக்கப்படக்கூடாது என்றோ, அல்லது மக்கள் தொகைப்படி 36-க்கு 1- உத்தியோகந்தான் என்றோ தீர்மானித்திருக்கலாம். பங்கீட்டு வேலையும் எளிதாகி இருக்கும். படித்துத் தகுதிபெற்ற பார்ப்பனரல்லாதார் அனைவருக்கும் (12-க்கு 12) உத்தியோகங்களும் கிடைத்திருக்கும்.

என்றாலும், எப்படியோ ஏகபோக மிராசு செலுத்துபவர்கள், தமது ஆதிக்கம் திடீரெனச் சரிவதை எண்ணி ஆத்திரப்படும்படி, அடி தலையிலே விழுந்துவிடக்கூடாதே என்பதாலும், அந்தச் சமூகத்தில் உள்ள பலர் பெற்றுள்ள 'தகுதி'யையும் புறக்கணித்துவிடக்கூடாதே என்ற நல்லெண்ணத்தாலுமே-உத்தியோகங்கட்குத் தேவையானவர்கள் மற்ற சமூகங்களிலே கிடைத்தும், அவர்களுக்கு நீதியாகக்கொடுக்கவேண்டியது இருந்தும், பார்ப்பனர்கட்கு உரியதற்கு மேலும் அளிக்கப்பட்டது.

எனவேதான்—பார்ப்பனர் அல்லாத இந்துக்களுக்குக்கிடைக்கக்கூடிய 6-ல் ஒன்றையும், கிருத்

தவர்கட்குக் கிடைக்கக்கூடிய 3-ல் ஒன்றையும் எடுத்து—இரண்டையும் பார்ப்பனர்கட்குக்கொடுத் தனர். விகிதாசாரத்தில் கிருத்தவர்கள், தங்கட் குரிய இடத்தை முன்பே பெற்றிருந்ததால், அவர் கள் பெறக்கூடியவற்றில் ஒன்றை எடுக்கலா மென்றாலும்,—பா. அல்லாத இந்துக்களுக்கு உரிய வற்றிலே ஒன்றை எடுப்பது எப்படியும் நியாய மாகாது. அதிலும், அந்த இரண்டையும், பார்ப்ப னருக்களித்தது, அவர்கள் மக்கள் தொகைப் படியோ, ஏற்கனவே பெற்றுள்ள ஆதிக்கப் படியோ — நியாயமற்றதே யாகும். எனினும்— பார்ப்பனர்களில் — படித்துத் தகுதிபெற்றவர்க ளின் மிகுதியைக் கருதியே மற்றவர்கட்குரிய இடங் களாயினும் அவைகளைப் பார்ப்பனர்களுக்குத் 'தானம்' தரப்பட்டது. தானம் தரப்பட்ட மாட்டை மட்டுமல்ல, தந்தவர்களையேகூட அவர் கள் பல்பிடித்துப்பார்க்கத் தயங்கவில்லை.

இவ்வுண்மை, அன்றிருந்த நிலையைக் கண் டால் விளங்கும்,

| வகுப்பு விவரம் | மக்கள் தொகை விகிதாசாரம் (100-க்கு) | ஆங்கிலம் படிக்க எழுதத் தெரிந்த வர் விகிதாசாரம் (100-க்கு) | உத்தியோகத் தகுதிபெற்றவர் 22-எனில் ஒவ் வொருவகுப்பிற்கும் (22-க்கு) | இருந்த உத்தி யோகம் 12. எனில் C.G.O. படி அளிக்கப்பட்டது (12க்கு) | மக்கள் தொகைப்படி உரிய உத்தி யோகம் (100க்கு) |
|---|---|---|---|---|---|
| பார்ப்பனர் | 2·7% | 17% | 10 | 2 | 3-க்கு |
| கிருத்தவர் | 3·7% | 3% | 3 | 2 | (குறைவு) |
| முஸ்லீம் | 7·8% | 1% | 2 | 2 | 4 |
| ஆதித்திராவிடர் | 16 3.% | 1% | 1 குறைவு | 1 | 8 |
| பார்ப்பனரல்லாதார் (இந்து) | 67·7% | 5% | 6 | 5 | 16<br>68 |

இது தான் வகுப்புத்துவேஷமாம்! ஒரு சிறு வகுப்பாரின் ஆதிக்கத்தைத் தடுத்துப் பெரும் பான்மையோரின் உரிமையைக் காப்பது வகுப்புத் துவேஷமாம்! ஆட்சிச்சக்கரம் ஒரு சிறுபான்மை யினரால் — மற்றவர்கள்மேல் உருட்டப்படாமல் பாதுகாப்புத் தேடிக்கொள்வது, வகுப்புத் துவேஷமாம்!

ஒரே வகுப்பார், மிகச் சிறுகூட்டத்தார், பந்திக்கு முந்திக்கொள்வதைப்போலவே, பதவிக்கு முந்திக்கொண்டதும், படிப்பிற்குத் தம் இனத்திற்கு வழிசெய்து கொண்டதும், மற்றவர்களை அங்கு நுழையவிடாமல் தடுப்பதும், உளுத்துப் போன வர்ணஸ்ரமத்தை அரசாங்காஸ்ரமத்தைக் கொண்டு நிலைநாட்டிக்கொள்ளவும், மற்றவர்களை அடிமைப்படுத்தவும் முயற்சிப்பதும் — வகுப்புத் துவேஷமல்லவாம்; அது நீதியாம்!

இந் நிலை பிறந்தபின், தாழ்த்தப்பட்டவர்கட்கும், ஒடுக்கப்பட்டவர்கட்கும், வகுப்புத்துவேஷம் என்று எது கூறப்பட்டாலும், அதுதானே நீதி, நியாயம் என்று தோன்றும். அதன்பின்— 'வகுப்புவாதிகள்' என்று தாங்கள் பட்டம் பெறத்தானே விரும்புவர். திறமைசாலி என்றாலும், முழுப்பூசனியைத் திவசத்துக்குத் தந்த அரிசியிலேயா மறைத்துவிட முடியும்? எனவே தான் வரிகொடுக்கும் அத்தனை வகுப்பாருக்கும் அரசாங்க உத்தியோகத்தில் பங்கிருக்கவேண்டும் என்ற கொள்கையும், அதற்கான திட்டமும், 'வகுப்புவாதம்' என்று கூறப்பட்டாலும், அரசாங்கத்தால் ஒப்புக்கொள்ளப்பட்டது.

### நியாயமும் தெளிவும்

இந்தக் கம்யூனல் ஜி. ஓ. வின் கொள்கையில் உள்ள நியாயமும், தெளிவும், 1935-ம் ஆண்டு

இந்திய அரசியல் சட்டம்255-வது பகுதி—2-வது பிரிவிலும் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறது.

"ஒவ்வொரு மாகாணத்திலுமுள்ள பப்ளிக் சர்வீஸ் கமிஷன், (Public Service commission) அவ்வப்போது அம்மாகாண உத்தியோகங்களுக்கு (Subordinate civil & Jwdicial service) விண்ணப்பித்துள்ளவர்களிலிருந்து கவர்னரின் கருத்திற்கேற்ப அவசியமாயின் தேர்வுகள் நடத்தியபின் தகுதியுள்ளவர்களைத் தெரிந்தெடுத்து அவர்களின் பட்டியலைத் தயாரிக்கவேண்டுமென வும், அதில் உள்ளவர்களிலிருந்து, மாகாணத்தில் உள்ள பலதரப்பட்ட வகுப்புக்களையும் சார்ந்துள் ளவர்களில் எத்தனை எத்தனை பேர் எடுக்கப்பட வேண்டுமோ அந்த விகிதப்படி, நியமனங்கள் நடைபெற வேண்டும்' என்றும் அச்சட்டத்தில் கூறப்பட்டுள்ளது.

மேலும் கம்யூனல் ஜி. ஓ. சென்னை மாகாண அரசாங்க உத்தரவாக மட்டுமன்றி—இந்திய அரசியல் சட்டத்தாலும் ஏற்றுக்கொள்ளப்பட்டதாக வும் புதிய குடியரசுச் சட்டம் நிர்ணயிக்கப்பட்ட பின்பும் இன்று வரையில் நிலவி வருகின்றதாக வும் உள்ளது என்பதை எண்ணும்போது அதன் நியாயம் விளங்காமற்போகாது.

## இது எப்படி நியாயமாகும்?

1928-ம் ஆண்டில் கொண்டுவரப்பட்ட இந்தக் 'கம்யூனல் ஜி. ஓ'வினால் 'சமூக நீதி'—பிற்காலத்தில் ஏற்படுவதற்கு ஒரு வாயில் காணப்பட்டதே தவிர உடனடியாகப் பலன் விளைந்துவிடவில்லை, எதிர்பார்க்கப்படவுமில்லை. எனினும் சிறுகச் சிறுக, ஆண்டுகள் செல்லச்செல்ல, பார்ப்பனரின் அரசாங்கத்துறை ஆதிபத்தியத்தைக் குறைத்து வரலாயிற்று.

அந்த உத்தரவைப் பிறப்பித்தபோதே, அது உண்மையான பயனளிக்கத் தொடங்க இன்னும் இருபது ஆண்டுகள் கழிய நேரிடும் என்று அறிஞர் முத்தையா அவர்கள் அறிவித்துள்ளார். அது மட்டுமன்றிச் சென்னை கவர்னராக ஹோப் அவர்கள் இருந்தபோது, "கம்யூனல் ஜி ஓ" என்ற ஒன்று இருந்தபோதிலும், அதற்கு மாறான முறையில், பெரும்பாலான உத்தியோகங்களில், இன்றும் பார்ப்பனர்தானே இடம் பெற்று வருகிறார்கள், இது எப்படி நியாயமாகும்?" என்று கேட்கப் பட்டதற்கு, "அந்தந்த உத்தியோகங்களுக்கு என ஏற்படுத்தப்பட்ட தகுதிகளையுடைய மக்கள்—பிற்பட்ட வகுப்புக்களில் கிடைக்காததால், அந்த உத்தரவைச் சரிவர நிறைவேற்றக் கூடவில்லை எனவும், 1950-ல் தான் சரிவர நிறைவேற்றக் கூடிய நிலை ஏற்படுமென்றும்" பதில் தெரிவித்திருக்கின்றார்.

ஆனாலும் அதுவே ஆதிபத்தியக்காரர்களால், அவர்களின் 'நல்ல மனத்தால்' பொறுக்க முடியவில்லை. அவர்களின் கோபதாபத்திற்கும், சாபத் தீண்டுதல்கட்கும் குறைவே இல்லை.

**கம்யூனல் ஜி. ஓ. வும், கருப்புக் கண்ணாடியும்!**

1937-ல் நடைபெற்ற பொதுத் தேர்தலில் காங்கிரஸ் கட்சி பெரியதொரு வெற்றிபெற்று சட்ட சபைகளைக் கைப்பற்றியது. காங்கிரஸ் கட்சி ஆட்சியும் ஏற்பட்டது. அதன் தலைவராக, முதலமைச்சராக வந்த திரு. சக்கரவர்த்தி, இராசகோபாலாச்சாரியார் அவர்கள், ஆட்சிப் பீடம் ஏறியவுடனேயே இந்தக் கம்யூனல் ஜி. ஓ. வின் மீது தான் தனது கருத்தையும், அதை வெளிக்குக்காட்டாத கருப்புக் கண்ணாடி யணிந்த கண்களையும் திருப்பினர்.

அவரது முயற்சிக்குக் காங்கிரஸ் கட்சிக்குள்ளேயே போதுமான ஆதரவு கிடைக்காததோடு, சிலரின் பலமான எதிர்ப்பும் ஏற்பட்டது. அத்துடன், தமது மந்திரி சபை ஏற்பட்டவுடனேயே பொதுமக்கள் 'பார்ப்பன ஆட்சி' என்று கூறி வருகையில், இந்தச் சமூக நீதி உத்தரவிலேயும் கைவைத்தால், எதிர்க் கட்சிகளுக்கு ஒரு நல்ல வாய்ப்பாகவும், பார்ப்பனரல்லாதார் அனைவரும் ஒன்றுபட ஒரு தூண்டுகோலாகவும் ஆகிவிடும் என்பதையும் உணர்ந்தார்.

அந்த முன்னறிவினாலேயே 'கம்யூனல் ஜி. ஒ'வில் அவர் கைவைக்காமல் இருந்ததோடு, 'அது நியாயம்' என்று ஒப்புக்கொண்டதுபோல் காட்டிக்கொள்வதால், பார்ப்பனர் உயர்வுக்குத் தாம் செய்யும் மற்ற வழிவகைகளைப் பார்ப்பனரல்லாதார் கண்டறியமாட்டார் என எண்ணித்தான் போலும், வட்டார நீதிபதிகளை (District-Munsiffs) நியமிக்கும் அதிகாரம் முதன் முதலாக, உயர்நீதி மன்றத்திலிருந்து மந்திரி சபைக்குக் கிடைத்தவுடன், அந்த நியமனங்களும் "கம்யூனல் ஜி. ஒ."வின்படியே நடைபெற வேண்டும் என உத்தரவு பிறப்பித்தார். காரணம் எதுவானாலும் முதல் 'காங்கிரஸ்' மந்திரி சபை-முதலமைச்சராக ஆச்சாரியாரையே பெற்றிருந்த சபை, இந்த வகுப்புவாரி உத்தரவை வெளிப்படையாகவே ஏற்றுக்கொண்டிருந்தது என்பது அறிய வேண்டியதாகும்.

ஆனாலும் 'கம்யூனல், ஜி. ஒ.' உள்ளூரக் குழி பறிக்கப்பட்டே வந்தது. அவரது ஆட்சியில் பார்ப்பனர்கள் பெற்று வந்த சலுகைகளுக்கு அளவே இல்லை. வகுப்புவாரி உத்தரவின்படி எந்த ஒரு

வகுப்பாருக்கு உத்தியோகம் தரவேண்டுமோ அந்த வகுப்பிலும், அதற்கடுத்த முறையில் வரும் பிற்படுத்தப்பட்ட வகுப்புகளிலும், அதற்குத் தேவையான தகுதிகளைக்கொண்டவர்கள் கிடைக்க வில்லை என்று காட்டி அந்த உத்தியோகங்களையும் பார்ப்பன வகுப்பாருக்கேதந்து, பதவிகளில் பார்ப் பனரையே நிரப்பி வந்தனர். இப்படி மற்ற வகுப் பாரில் 'தகுதி' உள்ளவர்கள் இல்லை யென்று காட்டுவதற்காக, உத்தியோகங்கட்குத் தேவை யான தகுதிகளும் மேலும் மேலும் உயர்த்தப் பட்டே வந்தன.

பார்ப்பனர்களைப்போல் மற்றவர்கள் கல்வித் துறையில் (மூன்றில் ஒரு பங்கு அளவு கூட) முன் னேறாத காரணத்தால், உத்தியோகத்திற்கான தகுதிகளை உயர்த்தி அதன்மூலம், குழந்தை கட்கு எட்டாத உயரத்தில் உரியைக் கட்டுவது போல, மற்றவர்கள் நெருங்க முடியாமல் செய்து வந்தனர்.

கல்வி நீரோடையிலே

மேலும், கல்வித்துறையில் மற்ற இனத்தவர் களும் முன்னைவிட அதிகமாகச் சேரத் தொடங்கு வதையும், அதிகமாகத் தகுதி செய்து கொள்ள முயல்வதையும் கண்டவுடன், 'உத்தியோக மண் டல ஆதிபத்தியத்திற்கு' அதனல் ஏற்படக் கூடிய 'ஆபத்தைத்' தடுக்க, "எரிகிற கொள் ளியை இழுத்தால் கொதிக்கிறது அடங்கிவிடும்" என்ற நோக்கத்தோடு, அரசாங்கக் கல்லூரிக ளிலே மற்ற இனத்தவர்களின் நுழைவுக்கு வாயி லாக அமைந்திருந்த 'கல்லூரிக் குழு' (College committees)-வின் மீது 'கருணை' செலுத்தலானர்.

**கல்லூரிக் குழு**

கல்லூரிக்குழு என்பது, பானகல் அரசரின் மந்திரி சபை (1921-முதல் 26 வரை) காலத்தில், கல்வி ஓடையில் வைதீக முதலைகள் நிறைந்திருப்பதையும், மற்ற உயிரினங்கள் நீர்விடாயைத் தீர்த்து வாழ வழியற்றிருப்பதையும் கண்டு, முதலைகளைத் தொலைக்க வழி முறை காணவிட்டாலும், நீர்த்துறையைச் சுற்றி முள்வேலி அமைப்பதைப் போல, அரசாங்கக் கல்லூரிகளில் பல வகுப்பு மாணவர்களையும் சேர்த்துக்கொள்ளச் செய்யும் அதிகாரம் உள்ளதாக, ஏற்படுத்தப்பட்டதாகும்.

ஒவ்வொரு அரசாங்கக் கல்லூரியிலும், அதற்குரிய 'கல்லூரிக் குழு' தான் மாணவர்களைச் சேர்த்துக்கொள்ள வேண்டும். அக்குழுவினில், சமூக நீதிக் கொள்கையிலே பற்று கொண்ட டாக்டர். சி. நடேச முதலியார் போன்ற பெருமக்கள் இடம் பெற்றதால்—கல்லூரிகளில் பார்ப்பன மாணவர் பலர் இடம் பெற்றாலும், மற்ற வகுப்பார்கட்கும் இடம் கிடைக்கும்படி கவனித்துக்கொள்ளப்பட்டு வந்தது.

1920-க்கு முன் ஆசிரியப் பயிற்சி (எல். டி.) வகுப்பு, பி. ஏ. சயன்ஸ் வகுப்பு, எம். ஏ., வகுப்பு—ஆகியவற்றில், பத்து பார்ப்பன மாணவர்களோடு ஒன்றிரண்டு பார்ப்பனரல்லாத மாணவர்களே படிக்க முன் வந்ததால்—போட்டி ஏற்பட வழியில்லாமல் இருந்தது. அக்காலங்களில் கல்லூரிகளில்—பார்ப்பனரும், அல்லாதாரும்—எந்த அளவில் இடம் பெற்றிருந்தனர் என்பதைப் பக்கம் 19-ல் காணலாம்.

1920 - முதல் 30-ம் ஆண்டுவரை—பார்ப்பனரல்லாத மாணவர் விகிதம், பார்ப்பனர் பத்துக்கு

—ஒன்றிரண்டு என்பதிலிருந்து இரண்டு மூன்ருக உயர்ந்தது. பொதுவாகவே படிக்க விரும்பியவர்களின் எண்ணிக்கையும் உயர்ந்தது. இதனுல் கல்லூரிகளில் இடநெருக்கடி சிறிது ஏற்பட்டது. பார்ப்பன மாணவர்கள் எல்லோருக்கும் இடம் அளிக்க முடியவில்லை. ஆசிரியர் பயிற்சி, (எல். டி.) எம். ஏ., பி. ஏ. சயன்ஸ் போன்ற வகுப்புகளிலும், மருத்துவ, பொறி இயல் கல்லூரிகளிலும் இடம் பிடிப்பதில் ஏற்பட்ட போட்டி 1930-க்குப் பின் வளரத் தொடங்கியது.

உயர்தரக் கல்லூரிகளில், ஏறத்தாழ நிலையான அளவே இடமிருக்க—பார்ப்பனர் அல்லாத மாணவர்கள் ஒவ்வோர் ஆண்டிலும் முன் ஆண்டைவிட அதிகமாகச் சேர முன் வந்தனர் என்ருலும் அதைக்காட்டிலும் பார்ப்பன மாணவர்கள் மிகுதியாகச் சேர முயன்றதால் இடநெருக்கடியும் போட்டியும் ஏற்பட்டது என்பது தவருகாது. முதலாண்டில் மொத்த இடங்கள் 10-ல் 7-பார்ப்பனரும் 3-அல்லாதாரும் இருந்திருந்தால், அடுத்த ஆண்டில் 10-பார்ப்பனரும் 4-அல்லாதாரும் சேர முயற்சித்ததாலேயே இடநெருக்கடி ஏற்பட்டது என்பது உண்மையாகும்.

### பிராமண கைங்கரியம்

பார்ப்பனர்கள், கல்லூரிக் குழு இல்லையானுல் தம் பிள்ளைகள் இன்னும் அதிக இடம் பெறக் கூடும் என்ற ஆசையால் கல்லூரிக் குழுவைக் கண்டிக்கத் தொடங்கினர்.

கல்லூரிக் குழுவினரோ—கம்யூனல் ஜி.ஒ.வை எடுத்துக்காட்டி, அதன்படி உத்தியோகப் பயிற்சிக் கல்லூரிகளாகிய மருத்துவம், பொறியியல் கல்லூரிகளில் (Professional Colleges) மாணவர்களைச் சேர்ப்பதுதானே நியாயமென்றும், அதன்

படி, பார்ப்பனர்களுக்கு அளிக்க வேண்டிய இடத்தைவிடப் பலமடங்கு அதிகம் அளிக்கப்பட்டிருப்பதையும் எடுத்துக்காட்டினர். அதனால் இந்தக் குழுவையே ஒழித்துவிட்டால், இந்த வாதத்துக்கே இடமில்லை யல்லவா என்று எண்ணிச் செயலாற்ற முனைந்தனர் ஆதிக்க வாதிகள்.

அதன்படியே, ஆச்சாரியார் ஆட்சியில் கம்யூனல் ஜி. ஓ. வில் கைவைக்க முடியாதது கண்டவுடன்—அதன் நிரப்புக்கால் ஆக அமைந்த கல்லூரிக் குழுவை ஒழிக்கும் 'பிராம்மண கைங்கரியம்' நிறைவேற்றப்பட்டது.

கல்லூரிக் குழு கலைக்கப்பட்டபின்

கல்லூரிக் குழுக்கள் கலைந்தவுடன், கல்லூரித் தலைவர்கள் தம் விருப்பம் போல் மாணவரைச் சேர்த்துக்கொள்ளலாம் என்ற நிலை பிறந்தது. பெரும்பான்மை அரசாங்கக் கல்லூரித் தலைவர்களும் 'அவர்களாகவே' இருந்ததும், இருந்த மற்ற இனத்தவர் சிலரும், அவர்களுடைய ஆதிக்கத்திற்குக் கட்டுப்பட வேண்டியவர்களாகவே இருந்ததும்—ஆதிக்க வகுப்பார் தம் பிள்ளைகளையே உயர்தரக் கல்லூரிகளில் நிரப்பப் பெரிதும் உதவிற்று.

கல்லூரிக் குழுவைக் கலைத்ததற்கு எதிர்ப்பு ஏற்படாமல் இல்லை. இது காங்கிரஸ் ஆட்சியில் நடைபெற்றதால், இதை எதிர்க்க காங்கிரஸ் கட்சியினர் முன் வரவில்லை. நீதிக்கட்சியினர் மட்டுமே கண்டித்து வந்தனர்.

1940-ம் ஆண்டில், திருவாரூரில் நடைபெற்ற நீதிக்கட்சி மாகாண மாநாட்டில் இது குறித்துக் கண்டித்து ஒரு தீர்மானம் நிறைவேறியுள்ளது.

"உயர்தரக் கல்லூரிகளில், மாணவர்களைச் சேர்த்துக்கொள்ளும் காரியத்தில், சகல வகுப்பு

மக்களையும் சேர்த்துக்கொள்ள சௌகரியமிருக்கும்படியாக, ஜஸ்டிஸ் கட்சி மந்திரிகள் காலத்தில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த காலேஜ் கமிட்டியை காங்கிரஸ் ஆட்சி நடக்கையில் எடுத்து விட்டதை இம்மாநாடு வன்மையாகக் கண்டிப்பதோடு, இப்போது ஆட்சியில் இருந்து வரும் கவர்னர் ஆலோசகர் சர்க்காரும், அதே முறையைப் பின்பற்றி, திராவிட மக்களைக் கைவிட்டதற்காகக் கண்டிப்பதுடன், தக்கதொரு காலேஜ் கமிட்டியை உடனே ஏற்படுத்த வேண்டுமென, இம்மாநாடு வலியுறுத்துகின்றது"—என்பதே அத்தீர்மானம்.

1939 அக்டோபரில், ஆச்சாரியார் மந்திரி சபை, காங்கிரஸ் கட்சித் திட்டப்படி, இராஜிநாமா செய்து விலகிக் கொண்டதால், மாகாணத்தில், கவர்னரின் ஆலோசகர் ஆட்சி ஏற்பட்டது.

அவ்வாட்சிக் காலத்தில்தான் பார்ப்பனரல்லாதார் இயக்கத்தின் தொடர்ந்த வேண்டுகோள் —பிற்படுத்தப்பட்ட மக்களின் குறைகள், காது கொடுத்துக் கேட்கப்பட்டன. கல்லூரிக் குழுக்கள் கலைக்கப்பட்டதால் ஏற்பட்ட விளைவுகளையும் கண்டுணரலாயினர். எனவே, இழைக்கப்பட்ட அநீதியைத் துடைக்க, 1942-ம் ஆண்டில்—மருத்துவம், பொறியியல் கல்லூரித் தலைவர்களுக்கு ஒரு அரசாங்க உத்தரவு அனுப்பப்பட்டது. அதன்படி—அவ்வுயர்தரக் கல்லூரிகளில் மாணவர்கள் சேர்க்கப்படுகையில் கம்யூனல் ஜி. ஒ. வில் காணப்படும் வகுப்பு விகிதாச்சார முறையைக் கைக்கொள்ள வேண்டும் என்பது வற்புறுத்தப்பட்டது.

மற்றும் உள்ள கல்லூரிகளிலும், மாணவர் சேர்க்கையில், கைவிடப்பட்ட - இடம் பெறாத வகுப்புகளின் நலத்தைப் பாதுகாத்து இடம்

பெறும்படிச் செய்வதற்காக 'கல்லூரிக் குழுக்கள்' ஏற்படுத்தப்பட்டன ஆனல், இக்குழுக்கள் அவ்வப்பொழுதும், தேவைக்கேற்பவும் ஆதிக்கம் பெற்றவர்களின் விருப்பத்திற்கேற்பவும் நடந்து வந்துள்ளனவே தவிர, கம்யூனல் ஜி ஒ. வை கைக்கொள்ளவில்லை.

எனினும், மருத்துவம், பொறியியல் கல்லூரிகளில், இவ்வுத்தரவின்படி மாணவர்களைச் சேர்க்கத் தொடங்கிய உடனேயே பார்ப்பனர் தொடை தட்டத் தொடங்கினர்.

கொடுமைக் குள்ளாயினர் யார்?

படிப்பதற்குக் கூட பார்ப்பனருக்குத் தடையா? கல்லூரியிலே கூட வருப்புவாதமா? சரஸ்வதியிடம் கூட சாதிவித்தியாசம் காட்டுவதா? இது அடுக்குமா? நீதியா? இந்தப் படுபாவி அந்நியர் ஆட்சி ஒழியாதா? என்றெல்லாம் கோபத்திலே பொரிந்து தள்ளினர்.

உண்மையில், 'பார்ப்பனருக்குக் கல்லூரி வாயில்கள் அடைக்கப்பட்டனவா? எவ்விதத்திலேனும் கொடுமைக் குட்பட்டனரா? அவர்கள் கூவத் தொடங்கிய காலத்தில் எந்த அளவிலேனும் அதில் உண்மை இருந்ததா?' என்று, அறிய விரும்புவோர், அவ்வாண்டுகளில், சென்னை மாகாணத்தில், கல்வித் துறையில், ஒவ்வொரு தரக் கல்வி நிலையத்திலும், எவ்வளவு பார்ப்பனரும் எவ்வளவு பா. அல்லாதாரும் (திராவிடர்) இடம் பெற்றிருந்தனர் என்பதைக் கேட்டறிந்தால் போதும்.

மக்கள் தொகையின்படி, சென்னை மக்களில் பார்ப்பனர் 2.7%. சதவிகிதத்தினரே யாவர். அதா

வது மொத்த மக்களில் 37-ல் ஒரு பங்கினர். அவர்களைப் போல் மற்றவர்கள் 36 மடங்கு உள்ளனர். கணக்கிலே சிறிது வேறுபாடு இருப்பினும், பார்ப்பனர் அல்லாதார் (திராவிடர்) பார்ப்பனரைப்போல் 35 மடங்கிற்குக் குறையாதவர்கள். ஆனல், அவ்விரு வகுப்பாரும் கல்வித் துறையில், எந்த விகிதத்தில் இடம் பெற்றிருந்தனர் என்பதைக் காணுங்கள்.

### பள்ளியில் ஆதிக்கம்

1943—44-ம் ஆண்டின், சென்னை மாகாண அரசாங்கக் கல்வி இலாக்காவின் அறிக்கைப்படி, முதல் நிலைப்பள்ளிகளிலே தொடங்கும் முதல் வகுப்பிலிருந்து, நடுநிலைப் பள்ளியையும் கடந்து, உயர்நிலைப் பள்ளியின் இறுதிவகுப்பாகிய எஸ். எஸ். எல். சி. முடிய, ஒவ்வொரு வகுப்பிலும் படித்த ஒரு பார்ப்பன மாணவருக்கு எத்தனைப் பா. அல்லாத மாணவர் படித்துள்ளனர் என்ற விகிதத்தைக் கணக்கிட்டுப் பார்த்தால், மக்கள் எண்ணிக்கையில் 1-பார்ப்பனருக்கு 35, பேராக உள்ள பா. அல்லாதார், கல்வித் துறையில் என் நிலையிலுள்ளனர் என்பது தெளிவாகும்.

மொத்தத்திலே, பள்ளிகளில் படித்த மாணவர்களில் — முதல் நிலைப்பள்ளிகளின் (Primary Schools) முதல் வகுப்பில் நுழைந்த மாணவர்களில், ஒரு பா. மாணவருக்கு, 16 பா. அல்லாத மாணவர் என்ற வீதத்தில் நுழைந்தனர். ஆனல் அடுத்தடுத்த வகுப்புகளில் நிலைமை, முற்றும் மாறியது.

| வகுப்பு | சேர்ந்திருந்த பார்ப்பன மாணவர் | சேர்ந்திருந்த பார்ப்பனர் அல்லாத மாணவர் |
|---|---|---|
| முதல் நிலைப்பள்ளி:— | | |
| முதல் வகுப்பில் | 1—க்கு | 16 பேர். [15.7] |
| இரண்டாம் ,, | 1— ,, | 13 ,, [12.9] |
| மூன்றும் ,, | 1— ,, | 11 ,, [11 2] |
| நான்காம் ,, | 1— ,, | 10 ,, [ 9.8] |
| ஐந்தாம் ,, | 1— ,, | 9 ,, [ 8.9] |
| நடு நிலைப்பள்ளி:— | | |
| ஒன்றுவது பாரம் | 1— ,, | 4 ,, [ 8 7] |
| இரண்டாவது ,, | 1— ,, | 8 ,, [ 8.0] |
| மூன்றுவது ,, | 3— ,, | 8 ,, [1::1.7] |
| உயர்நிலைப் பள்ளி:— | | |
| நான்காவது பாரம் | 3— ,, | 5 ,, [1::1.7] |
| ஐந்தாவது ,, | 2— ,, | 3 ,, [1::1 5] |
| ஆறுவது ,, (S. S. L. C) | 5— ,, | 7 ,, [1::1.4] |

மக்கள் தொகையில், 36 - பா. அல்லாதாருக்கு ஒருவராக உள்ள பார்ப்பனர், முதல் நிலைப்பள்ளியின் முதல் வகுப்பிலேயே, 'அரிச்சுவடி' ஏந்துகையிலேயே' 16 - பா. அல்லாதாருக்கு ஒருவராக இடம் பிடித்துக் கொள்கின்றனர். தொடக்கப் பள்ளிகளில் உள்ள ஐந்தாம் வகுப்பு முடிய கணக்குப் பார்த்தால் பா. அல்லாதார் 12 - பேருக்குப் பார்ப்பனர் ஒருவராக இடம் பெறுகின்றனர்.

நடு நிலைப்பள்ளியின் முதல் பாரத்தில் நுழைந்தவுடனேயே 4 - பா. அல்லாதாருக்கு ஒரு பார்ப்பனராக இடம் பெற்று விடுகின்றனர். நடு நிலைப்பள்ளி வகுப்புகளாகிய முதல மூன்று பாரத்திலும் சேர்த்துப் பார்க்கையில், 3-பா. அல்

லாதாருக்கு ஒரு பார்ப்பனராக இடம் கொண்டுள்ளனர்.

உயர்நிலைப் பள்ளியின். தொடக்க வகுப்பாகிய நான்காவது பாரத்திலோ 5 - பா. அல்லாதாருக்கு 3 - பார்ப்பனராக நுழைகின்றனர் இறுதி வகுப்பு (S. S. L. C.) வரையில் மூன்று வகுப்புக்களிலும் உள்ள மொத்த மாணவர்களிலோ 3 - பா. அல்லாதாருக்கு 2 . பார்ப்பனராகப் பெருகியுள்ளனர்.

அரிச்சுவடியிலேயே 36 - மடங்காக உள்ள இனத்தினர் 16 மடங்கு இடந்தான் பெற்றுள்ளனர். பள்ளியில் நுழையவேண்டிய பாலப் பருவத்திலேயே, பா. அல்லாதாரிலே 100-க்கு 80 பேர்—நுழையவில்லை, வசதி இல்லாததால். அதற்குமேல், வகுப்பு உயர உயர, படிப்பிற்குக் கிடைக்கும் பலனும் உயர்கின்ற வகுப்புக்களில், பார்ப்பனரல்லாதார், மிக மிக வேகமாகக் குறைந்து கொண்டே வருகின்றனர். பள்ளி இறுதி (S. S. L.C) வகுப்பிலோ, பா. அல்லாதார் 3 - பேருக்குப் பார்ப்பனர் 2 - பேராகப் பெருத்து விடுகின்றனர். 'அவர்களைப்' போல் மக்கள் தொகையில் 36—மடங்குள்ள வகுப்பு, பள்ளி இறுதி வகுப்பிலேயே, அவர்களைப்போல் $1\frac{1}{2}$ மடங்குக்கும் குறைவாகத் தான் இடம் பெறுகின்றது. என்றாலும், கல்வித் துறையில்கூட சாதி வித்தியாசமா? என்று "அவர்கள்" கேட்கிறார்கள், குடிக்கும் நீரைக் கூடக் கலக்குகிறாயா? என்று கீழ்த்துறையில் நீர் குடித்த ஆட்டினைக் கேட்ட ஓநாயைப்போல.

பார்ப்பன வகுப்புப் பிள்ளைகளிலோ—முதல் வகுப்பில் நுழைபவர்களில் 100-க்கு 30 - பேர் பள்ளி இறுதி வகுப்பை அடைகின்றனர். பா. அல்லாதவரோ, முதல் வகுப்பில் நுழைபவரில் 100-க்கு 2 - பேர்கூடப் பள்ளி இறுதி வகுப்பை

எட்டிப்பார்க்கவும் முடியவில்லை. பள்ளிப் படிப்பு முறை பார்ப்பனருக்கு 'ராஜபாட்டையாக' ஆகியுள்ளது. வழிநெடுக ஆதரவளிக்க, ஆதிக்க வாதிகளே ஆசிரியராகவும் உள்ளனர். எனவேதான், 'அவர்களிலே' பத்திலே இரண்டு பழுதின்றி உயர் தகுதி பெறுகின்றது. பா. அல்லாதவர்கட்கோ, பள்ளிப் படிப்பு முறையே 'காட்டுப் பாதையாக' இருக்கின்றது. வழியிலே 'ஆதரவுக்குப்'' பதில்' ஏற்படும் ஆபத்துகள் பல. எனவேதான், பள்ளியில் அடியெடுத்து வைக்கும், பா. அல்லாத பிள்ளைகள் நூற்றிலே இரண்டு கூடப் பழுதின்றி உயர் தகுதி பெற வாய்ப்பு ஏற்படுவதில்லை.

"பிள்ளை பள்ளிக்குப் போகவும் வேண்டாம், பிரம்படி படவும் வேண்டாம்" என்று தாய் புலம்ப, "பாப்பாரப் பிள்ளையைப் பாரேண்டா, எப்படிப் படிக்கிருங்கண்ணு! உனக் கெங்கேடா, படிப்பு வரப் போவுது" என்று தகப்பன் கடிய, 'அவன் என்ன செய்வான், எல்லாம் தலை எழுத்துப்படித் தானே நடக்கும்" என்று பாட்டி சமாதானம் கூற, "போகிற போது — பிள்ளையார் கோயிலை ஒரு சுத்து சுத்திட்டுப் போடா தம்பி" என்று தமக்கை சொல்லி அனுப்ப, இவ்வளவு அர்ச்சனைகளையும் குழப்பத்தோடு ஏற்றுக்கொண்டு பள்ளிக் கூடம் செல்லும் பிள்ளை, அங்கேயும், "நீயெல்லாம் ஏண்டா, படிக்க வந்து, என் உயிரை வாங்கிறே, உங்கப்பன் மாதிரி, மாடுகண்ணை ஓட்டிக் கொண்டு வயலைப் பார்க்கப் போறது தானேடா" என்று அவனது உணர்விலேயே ஆசிரியர் கொட்டிடவும் செய்தால், இவ்வளவையும் எதிர்த்து நின்று முயற்சியோடு வெற்றி பெறும் ஆற்றல், அந்த இளம் இதயத்துக்கு எப்படித்தான் ஏற்படமுடியும். எனவேதான், பா. அல்லாத பிள்ளைகள்—கல்வித்துறையில் அனுதைகளாகி,

என்றே ஒரு நாள், முதல் வகுப்பிலே இல்லாவிடினும் பத்தாவது வகுப்பை எட்டிப் பிடிப்பதற்குள்-பள்ளிக் கூடத்தை விட்டு வெளியேறும் நிலையில் உள்ளனர். ஆம்; திராவிட மக்களில் முதல் நிலைப் பள்ளியில் புகுபவர்களில் 100-க்கு 98 பேர், வளர வேண்டிய பள்ளிவயதின் பாலப் பருவத்திலேயே 'சிசு மரணத்திற்கு' ஆளாகின்றனர். ஆனல்—பார்ப்பனப் பிள்ளைகளிலோ பலர் அத்துறையில் வாலிபப்பருவத்தையும் தாண்டிக் களிக்கின்றனர்.

நம் மாகாணத்தில் உயர்நிலைப் பள்ளிகளுக்கு ஒப்பாக, தொழிற் கல்வியும் வேறு சிறப்புப் பயிற்சியும் அளிக்கும் கல்விக் கூடங்களும் உள்ளன. ஆசிரியப் பயிற்சிப்பள்ளி, மருத்துவப் பள்ளி, தொழில் துறைப்பள்ளி, பொறி இயல்பள்ளி, வாணிபத் துறைப்பள்ளி, குருடுசெவிடு பயிற்சிப் பள்ளி ஆகியவற்றில் பயிலுகின்ற மாணவர்கள், பார்ப்பனர் 9-பேருக்குப் பா. அல்லாதார் 16 பேர் என்ற விகிதத்தில் உள்ளனர். மொத்த மாணவர்களில், 8393 பேர் பார்ப்பனர்; 14,906 பேர் பா. அல்லாதார். நாட்டு மக்களிலே கல்வித் துறையில், குருடராகவும் செவிடராகவும் ஆக்கப் பட்டுவிட்ட திராவிட சமூகம், அதைப் பிரதிபலிப்பதுபோல, குருடு செவிடு பயிற்சிப் பள்ளியிலே மட்டும் தாராளமாக இடம்பெற்றுள்ளது. அங்கே தான் பார்ப்பனர் 13-பேரும் பா. அல்லாதார் 287 பேருமாகப் [1::22] பயில்கின்றனர்.

**கல்லூரிகளில்**

அடுத்தாற் போல், கல்லூரிகளிலே பார்த்தால் தொடக்க வகுப்பாகிய, இண்டர்மீடியட்டிலே சேர்ந்துள்ளவர்களில், 20 - பார்ப்பன மாணவர் கட்கு, 21 - பா. அல்லாத மாணவர் என்ற விகிதமே காணப் படுகின்றது. ஏறத்தாழ

இரண்டு வகுப்பும்—அதாவது, ஒரேசமூகமாகிய ஒரு சிறுபான்மைக் கூட்டமும், பல சமூகங்களைக் கொண்டு நாட்டு மக்களிலே பெரும்பாலோர் (97%) ஆகிய ஒரு இனமும் ஏறத்தாழ சரிசமமாகவே இடம் பெற்றுள்ளன.

மேலும், பி.ஏ. வகுப்புக்களிலே கணக்கிட்டால், 5-பார்ப்பன மாணவர்கட்கு 4 பா. அல்லாதார் வீதமும், ஆனர்ஸ் வகுப்புகளில் 2 பா. மாணவருக்கு 1. பா. அ. மாணவர் வீதமும், பி. எஸ். சி., ஆனர்ஸ் போன்ற வகுப்புகளில் 5 பா. மாணவருக்கு 2-பா. அல்லாதார்வீதமும் இன்னும்குறைவாகவுமே இடம் பெற்றுள்ளனர். அவ்வாண்டில் கல்லூரிகளில், 9468 பா. மாணவரும் 8928 பா. அ. மாணவருமே பயின்று வந்துள்ளனர். அல்லாதாரைவிட, 'அவர்கள்' 540 பேர் அதிகம் பயின்றனர். மாகாண மக்கள் தொகையில் 37-லே ஒரு பங்கு உள்ளவர், அவர்களைப் போல் 36 மடங்கு உள்ளவர்கள் பெற்றிருந்த இடங்கள் அளவு மட்டுமேயன்றி, அதை விடக் கூடவும் பெற்றிருந்தனர், உயர்தரக் கல்லூரிகளிலே.

மற்றும், உத்தியோகத் தொழில் துறை கல்லூரிகளிலோ எனில், மொத்தத்தில் 44.5 /. சதவிகித இடங்களைப் பார்ப்பனர் அனுபவித்தனர். 1943-44-ம் ஆண்டில் பா. மாணவரும், பா. அ. மாணவரும், அக் கல்லூரிகளில் எந்த விகிதத்தில் இடம் பெற்றிருந்தனர் என்பதைக் காணுங்கள்.

| கல்லூரி விவரம் | பா. அ. மாணவர் விகிதம் | பா. மாணவர் விகிதம் |
|---|---|---|
| ஆசிரியர்க் கல்லூரி | 1-க்கு | 2 |
| டெக்னிகல் ,, | 2 ,, | 9 |
| வெட்டரினரி ,, (விலங்கு மருத்துவம்) | 3 ,, | 4 |
| விவசாயக் ,, | 5 ,, | 4 |
| சட்டக் ,, | 4 ,, | 3 |
| மருத்துவக் ,, (மெடிக்கல் காலேஜ்) | 3 ,, | 2 |
| பொறி இயல் ,, (என்ஜினியரிங் காலேஜ்) | 5 ,, | 3 |

படித்தவுடன், உத்தியோகம் அளிக்கும் பயன் மிக்க இவ்வுயர்தரக் கல்லூரிகளில் மட்டும், மொத்தத்தில், படித்தவர்களுள், பா. அ. மாணவர் 5 பேருக்குப் பா. மாணவர் 4 பேராக இடம் பெற்றிருந்தனர். என்றாலும் 'அவர்களின்' கண்கள் மற்றவர்களின் மீது 'கனல்' கக்கியபடியே இருந்தன.

## ஆதித் திராவிடர் நிலை

அதே சமயத்தில், மக்கள் தொகையில் பார்ப்பனர்களைப் போல் ஆறு மடங்கு உள்ள ஆதித் திராவிடர்களின் நிலையையும் காணுங்கள்.

1025 - பார்ப்பன மாணவர் படிக்கும் படியான, இவ்வுயர்தரத் தொழில் துறை சட்டக் கல்லூரிகளில் படிக்கும் ஆதித் திராவிட மாணவர்கள் 22 பேர்தான். மக்கள் தொகையில் 6 பங்கு உள்ள சமூகத்திற்கு 22 இடங்கள்தான் கிடைத்துள்ளன, 1 பங்கு உள்ளவருக்கு 1025 இடங்கள் செறிந்துள்ளன. கணக்கிட்டால் அத்துறைக் கல்விக்காகச் செலவழிக்கப்பட்ட பொருளில்—

அதன் பயனில் ஆதித்திராவிடர் ஒவ்வொருவரும் அனுபவித்ததைப் போல், 240 மடங்கு அதிகமாக ஆதிக்க வகுப்பினர் ஒவ்வொருவரும் அனுபவித்துள்ளனர். உயர்தரக் கல்லூரிகளில் பயின்ற ஆதித்திராவிடமாணவர்களோ—மொத்தத்தில் 326 பேர்தான். அரசாங்கத்தின் 'ஸ்காலர்ஷிப்' அளிக்கப்பட்டுங்கூட, அதற்கு மேல், அவ்வினத்தால் பிள்ளைகளைப் படிக்க வைக்க இயலவில்லை, வழியில்லை. ஆனல் பார்ப்பனரோ 9468 பேர் படித்தனர். படித்த ஆதித்திராவிடர்களைப்போல் 29 மடங்கு இடம் பிடித்திருந்தனர்.

பார்ப்பன சமூகத்தில் எந்த (விகிதம்) அளவு பிள்ளைகள் கல்லூரிகளில் பயின்றனரோ, அதே அளவு ஆதித்திராவிட சமூகத்தின் பிள்ளைகளும் பயில்வதானல், 56,808 பேர் படிக்க வேண்டும். அப்படியானல் இப்பொழுதுள்ள கல்லூரிகளைப் போல் மூன்று மடங்கு கல்லூரிகள், ஆதித்திராவிடர்கள் சேர்வதற்கு மட்டுமே வேண்டும்.

### கல்வியும் பொருளாதாரமும்

மேலும், கல்விக்காக அரசாங்கத்தால் செலவழிக்கப்படும் 'பொருள்' முழுதும் பொது மக்கள் செலுத்திய வரிப்பணத்தின் பகுதியேயாகும். பொதுமக்கள் என்ருல், எல்லா வகுப்பாரும்-ஜாதி, மத, இனவேறுபாடுடைய எல்லோரும் அடங்குவர்.

வரிப்பணமோ, எல்லா வகுப்பாராலும் செலுத்தப்படுவதால், எல்லோருக்கும் உரிமையுடையதாகும். எல்லோருக்கும் உரிமையுடைய பொருளைச் செலவழிக்கையில், எல்லோரும் பங்கு பெறும்படிக் கவனிக்க வேண்டும். பிள்ளையார் கோயிலில் உடைக்கப்படும் தேங்காயைப்

போல, சிதறியவழி வருந்தவன் பொருக்கிக்கொள்ளும்படி விட்டுவிடுவது, பொது மக்களின் வரிப் பணத்தைக் கையாளும் முறையுமல்ல, பொறுப்புள்ள அரசாங்கத்தின் அழகுமல்ல.

அது மட்டுமின்றி, கல்வித்துறையில் செலவழிக்கப்படும் பொருளால், ஒன்று பத்தாகப் பயன் விளைகின்றது. அந்தப் பெருகும் பயனில், அனைவருக்கும் பங்கிருக்க வேண்டுமானால், கல்விக் கூடங்களிலும், எல்லா சமூகத்தவரும் அவரவர் சமூக மக்கள் எண்ணிக்கை விகிதப்படி இடம் பெற்றாக வேண்டும். அவ்வாறு இடம் பெறும்படி கவனிக்காமலிருப்பது, ஊர் மக்கட்குப் பொதுவான வயலில், ஊரார் எல்லோரிடமிருந்தும் விதை நெல் கேட்டு வாங்கி, விதைத்து, விளைந்தவுடன் அவரவர் வலுவுக்கும் திறமைக்கும் ஏற்ப அறுத்துக் கொண்டும், கட்டிக் கொண்டும் போகலாம் என்று அனுமதிப்பதையே ஒக்கும். பொது வயலின் விளைவை யார் வேண்டுமானாலும் அனுபவிக்கலாம், திறமையுள்ளவர்கள் எவ்வளவு வேண்டுமானாலும் கொண்டு போகலாம் என்பதை—நீதியின் இலட்சணம் தெரிந்தவர்கள் நியாயம் என்று கூறமாட்டார்கள். ஆனால் கல்வித்துறையில் செலவாகும் பொதுப் பணத்தால் விளையும் பெரும் பயனை, ஒரே ஒரு வகுப்பைச் சேர்ந்த மக்களே அனுபவித்து வந்தும் அந்த அநீதி அனேகர் கண்களிலேயே படவில்லை. மேலும், அந்த 'அநீதியையே' நீதியென்று சாதிக்க வாய்த்திறமை காட்டுகின்றனர் ஆதிக்க வகுப்பினர்.

வரி கொடுப்போர்க்கு வாழ்வில்லை!

அதுமட்டுமின்றி, அரசாங்க வரியில் பெரும் பகுதியைக் கட்டுகின்ற மக்கள், பெரும்பான்மை

யினரே தவிர சிறுபான்மையினரல்ல. ஏறத் தாழ, மக்கள், தங்கள் சமூக எண்ணிக்கைக்கேற்ற விகிதந்தான் வரிசெலுத்துகின்றனர். நூற்றுக்கு 97 பேர்களாக உள்ள பிற்படுத்தப்பட்ட மக்களே 100-க்கு 97-பங்கு வரிப்பணத்தைச் செலுத்துபவர் களும் அதற்கு உரிமையுடையவரும் ஆவார்கள். அதுமட்டுமன்றி, பார்ப்பனரல்லாதார், நாளெல் லாம் பாடு பட்டு அதனல் கிடைக்கும் குறைந்த ஊதியத்திலிருந்தும் ஒரு பகுதியை வரியாகக் கட் டும், உழைப்பாளர் இனத்தைச் சார்ந்தோராவர். பார்ப்பனரோ, ஊரார் உழைப்பில், உரியதுக்கும் மேல் பெறும் 'சம்பாத்தியத்தில்' ஒரு பகுதி யையே வரியாகக் கட்டுவோராவர். எனவே, அவர் கள் 'செலுத்தும் வரியுங்கூடப், பார்ப்பனரல்லா தார் உழைப்பினின்று, அவர்கள் உறுஞ்சும், 'பெரும்' அளவு சம்பாத்தியத்தில், ஒரு சிறு பகுதியேயாதலினுலும் அவர்களது உழைப்பால் செலுத்தப்படாததாலும் அந்த வரிப்பணத்தில் எந்த அளவுக்கும் அவர்கட்கு உரிமை இல்லை. எனினும், அந்த இனத்தவரும் மற்றுஞ்சில தனி மனிதர்களாக உள்ள 'உலுத்தர்'களைப்போன்றே அரசாங்கத்தின் சிறப்புமிக்க குடிகளாகை யால், நியாயப்படி உரிமை இல்லாவிடினும், அவர் களின் வகுப்பு விகிதாசார அளவிற்கு அனுபவிக்க அனுமதிக்கப்படலாம். அதற்குமேல் அவர்கள் 'அடைவது'. அரசாங்கத்தைக் கருவியாகவும், திரையாகவும் கொண்டு பொதுமக்களைச் சுரண்டு வதேயாகும். அதிலும், நீதியின் பெயர்கூறி, அர சாங்கத்தின் ஆணையின் ஆதரவுகொண்டு, கல்வி யிலே ஏழைகளாக உள்ளவர்களுக்குக் கிடைக்கக் கூடிய—கிடைக்கச் செய்யவேண்டிய கல்விச் செல்

வத்தை, கல்விச்செல்வத்திலே திளைப்பவர்கள் கொள்ளையடிப்பது கொடுமையினும் கொடுமை யாகும்.

சுரண்டல் முறை காணீர்

நம் மாகாணத்தில் கல்வித்துறைக்காக அரசாங்கத்தால் செலவழிக்கப்படும் பொருளிலே, எவ்வளவு பங்கு, கல்வித்துறையிலே அவர்கள் பெறும் இடங்கள் மூலமாகப் பார்ப்பனர்களால் உறுஞ்சப்படுகிறது என்று பாருங்கள்.

1943-44-ம் ஆண்டு கணக்கின்படி முதல் நிலை, நடுநிலை, உயர்நிலைப் பள்ளிகட்காக அரசாங்கத்தால் செலவழிக்கப்பட்ட 4-கோடி 57-லட்சம் ரூபாயில், 79-லட்சம் ரூபாய், பார்ப்பனர்களால் அனுபவிக்கப்பட்டுள்ளது. மொத்த மக்கள் தொகையில் 36-ல் ஒருபங்காக உள்ளவர் அதற்காகச் செலவழிக்கப்பட்ட பொருளில் 6-ல் ஒரு பங்குக்கு மேல் அடைந்துள்ளனர். அவர்கள் பெறக்கூடியதைப் போல் 6-மடங்கு கிடைத்துள்ளது அவர்கட்கு.

கைத்தொழிற் கல்விக்காகச் செலவழிக்கப்பட்ட பொருளில் 36 சதவிகிதம் அனுபவிக்கின்றனர். அவர்கள் பெறவேண்டியதைப் போல் 13-மடங்கு பெற்றுள்ளனர். கல்லூரிக் கல்விக்காகச் செலவழிக்கப்படும் பொருளிலோ 51.5 சதவிகிதம் அவர்களே நுகர்கின்றனர். தமக்கு உரியதைப்போல் 19-மடங்கு பெறுகின்றனர்.

உயர்தர உத்தியோகத்துறை தொழிற் கல்லூரிகளிலோ, செலவழிக்கப்படும் பொருளில் 44.5 சதவிகிதம் அடைவதால்—தமக்கு உரியதைப்போல் 16-மடங்கு பெறுகின்றனர்.

கல்வித்துறையில், மொத்தத்தில் செலவழிக்கப்பட்ட 7-கோடி 22-இலட்சம் ரூபாயில், 1-கோடி

32-இலட்சம் ரூபாய் — மொத்தத்தில் 23 சதவிகிதம், (ஏறத்தாழ) பார்ப்பனரால் நுகரப்பட்டுள்ளது. இதில் ஆசிரியர்கள் ஊதியத்திற்கெனச் செலவிடுவதெல்லாம் அடங்குமே என்றால், அப்படி ஆசிரியராக இருந்து ஊதியம் பெறுபவர்களிலும், பார்ப்பனரே பெரும்பாலோர் என்பதும், அவ்வழியிலும் தங்கட்குரியதைவிடப் பல மடங்கு மிகுதியாக அனுபவித்து வருகின்றனர் என்பதும் மறுக்க முடியாததாகும்.

**கணக்கிட்டுப் பாருங்கள்**

சிறுபான்மைப் பார்ப்பன இனமும், பெரும்பான்மை பார்ப்பனரல்லாத சமுதாயமும் கல்விக்குச் செலவிடப்பட்ட வரிப்பணத்தில் அனுபவித்த விகிதாசாரத்தைக் கணக்கிட்டால், ஒவ்வொரு பார்ப்பனரல்லாதாரும் அனுபவித்துள்ளதைப் போல் 11-மடங்கு ஒவ்வொரு பார்ப்பனரும் அனுபவித்துள்ளனர்: [அதாவது—பா: பா. அ:: 1:10.7 என்ற அளவு] அதுபோலவே, உயர்தரக் கல்வியிலே பெறும் விகிதங்களைக் கணக்கிட்டால் பார்ப்பனர் அல்லாதார் ஒருவரைப்போல் பார்ப்பனர் 35-மடங்கு பற்றியுள்ளனர் [பா:பா.அ:: 1 : 35.4 என்ற அளவு] கல்வித்தரமும், பயனும் உயர உயர 'அவர்கள்' அடையும் பங்கு எவ்வளவு வளருகிறது என்பதையும், அதனால் 'அந்த வகுப்பார்' எய்தும் பலன் எத்தனை மடங்காக உயரும் என்பதையும் ஒரு கணம் எண்ணிப்பாருங்கள் அடுத்த 'கணமே' விடை கிடைக்கும் ஒரு பெருமூச்சின் வடிவிலே.

**எப்படி நியாயமாகும்?**

ஒரு நாட்டிலே உள்ள மக்களிலேயே, ஒரு சமூகத்தில் உள்ளவர்களைவிட மற்றொரு சமூகத்தில் உள்ளவர்கள் பொதுவாக கல்வித்துறையில்

11-மடங்கும், உயர்தரக் கல்வியில் 35-மடங்கும் அனுபவித்திருப்பது எப்படி நியாயமாகும், 'வர்ணாஸ்ரம தர்மக் கொடுமை' என்ற பார்ப்பன நீதி ஒன்றிலே தவிர? என்பதுதான் புரியவில்லை, நமக்கு. 'அவர்கட்கோ' அந்த அளவிலும் திருப்திகிடையாது.

அரசாங்கத்தாரோ, குடியானவனின் தெருக்கடைத் தேங்காயை எடுத்துச்சென்று, அக்ரகாரத் தெரு பிள்ளையார் கோவிலிலே, உடைக்கின்ற முறையிலேயே கல்வித்துறையை நிர்வகித்து வந்துள்ளனர்.

ஆனல், கோதானம் கொடுத்த பசு, பால் நிறையக் கறக்க வில்லையே யென்று தந்தையைப் பறி கொடுத்த மகனிடத்திலேயே குறைபட்டுக் கொண்ட பார்ப்பானைப் போலத்தான், பொருளையும் உரிமையையும் இழந்து வாழ்விலே தாழ்வுற்றிருக்கும் பொது மக்களிடம் ஆதிக்க வகுப்பினர் தமக்குக் கல்லூரிகளில் இடம் கிடைக்க வில்லை என்று கூவுகின்றனர். அவர்கள் கூவுவது, கடைத்தெருக் கூட்டத்தில் கழுத்துமணி அறுத்தவுடன், தான் அகப்படாமல் இருக்க, பக்கத்திலே போகிற ஒருவனைப் பிடித்துப் போலீசிலே ஒப்படைத்த பக்காத்திருடனின் செயலைப் போலத்தான் இருக்கிறது. பக்காத்திருடன் பல நாள் திருடனுக இருந்தாலும் ஒரு நாள் அகப்படத்தானே செய்வான்? அவனது தந்திரமும் திறமையும் 'பத்திரிக்கையிலே' கூட வெளிவரத்தானே செய்யும்? என்பதை எண்ணித்தான் நமது வேதனை சிறிது மறைகிறது.

## சதி ஆரம்பம்

பார்ப்பனருக்குப் படிக்கக்கூடத் தடையா? என்ற கேள்வி உச்ச நிலை அடைந்து, பின்னர் கொஞ்சங் கொஞ்சமாக அடங்கி வேறு வடிவைத் தேடிப்பெற்று வெளிவரத் தொடங்கிய நிலையில் தான், 1946-ல் நடைபெற்ற பொதுத் தேர்தலில், காங்கிரஸ் கட்சி வெற்றிபெற்று, சென்னை மாகாணத்தில், ஆந்திரகேசரி பிரகாசம் பந்துலுவின் மந்திரி சபை ஏற்பட்டது.

### காற்றுள்ளபோதே!

பிரகாசம் காரு, காற்றுள்ளபோதே கூட, கொஞ்சம் அவசரப்பட்டே தூற்றிக்கொள்ளும் "திறமையும்," பிராமணனுக்குச் செய்ய வேண்டிய உபகாரத்தை எப்படியோ செய்து முடிக்கும் "தகுதியும்" கொண்டவர். அவரது மந்திரி சபையையே, பிரகாசம் மந்திரி சபை என்று குறிப்பிடுவதைவிட 'தகுதி, திறமை' மந்திரி சபை என்று குறிப்பிட்டால் பொருத்தமாக இருக்கும், அவை இரண்டும் உடையவர் என்று சொல்லப்படுகிறவர்களுக்கு எப்படி அவை இல்லையோ, அப்படியே அந்த மந்திரி சபையும் இருந்த காரணத்தால். அவர் முதலமைச்சர் பீடத்தில் அமர்ந்தவுடனேயே, அவரது மனத்திலே அதுவரை உறுத்திக்கொண்டிருந்த கம்யூனல் ஜி. ஓ. வை, ஒழிப்பதற்கு, என்ன வழி என்று தீவிரமாக ஆலோசிக்கத் தொடங்கினார். ஸ்ரீமதி ருக்மணி இலட்சுமிபதி அம்மையவர்களும், மற்றும், ஸ்ரீமான்கள் தென்னேட்டி விசுவநாதம், வரதாச்சாரி, மதுரை வைத்தியநாதய்யர் முதலியவர்களும், மாணவர்களின் தகுதி, திறமை, பாழாக்கப்படுகிறதெனப் பறைசாற்றத் தொடங்கினர். இந்துவும் மித்திரனும் காகிதக் கணை தொடுக்கலாயினர். புதிய 'பிரச்சாரமும்' ஆரம்பமாயிற்று.

அந்தப் பிரச்சாரம் நடைபெறுகையில், முதல் மந்திரி பிரகாசம் அவர்கள், தமது கருத்தைச் சட்ட சபையிலேயே (1946—ஆகஸ்டு 20-ம் நாள்) கூறினர். "நான் கம்யூனல் ஜி. ஓ.வுக்கு எதிரானவன் என்பதை, வெளிப்படையாகவே ஒப்புக்கொள்கிறேன். இதனல் நான் அதை உடனே ஒழித்து விட நினைக்கிறேன் என்று கருத வேண்டாம். உங்களில் பலர் அதனை மிகவும் ஆதரிப்பதால், நான் அதனை ஒழிக்கப்போவதில்லை. ஆனல் அத்திட்டம் எவ்வாறு வேலை செய்தால் நல்லது என்றுதான் நான் சிந்தித்துக் கொண்டிருக்கிறேன்" என்பதே அவர் கூறியது ஆகும்.

இதிலிருந்து அவர் கம்யூனல் ஜி. ஓ. வின் எதிரி என்பது மட்டுமல்ல, அதனைப் பலர் ஆதரித்ததாலேயே, உடனே ஒழிக்கமுடியாமல், கொஞ்சம் கொஞ்சமாக ஒழிக்க வழி தேடிச் சிந்தித்துக் கொண்டிருந்தார் என்பதும் தெளிவாகும்.

அப்படிப்பட்ட தகுதியும் திறமையும் மிக்கவரின் மந்திரி சபை அமைந்தவுடனேதான், அதுவரையில், மருத்துவம், பொறி இயல் கல்லூரிகளில் (சில ஆண்டுகளாக) மாணவர்களைச் சேர்ப்பதில் கையாளப்பட்டு வந்த வகுப்பு விகிதாச்சார முறை காற்றிலே பறக்கவிடப்பட்டது. அக்கல்லூரிகளில் சேர்க்கப்படும் மாணவர்களில் 20-சத விகித மாணவர்கள் 'தகுதி'யின் பேரிலேயே சேர்க்கப்பட வேண்டும் என்ற உத்தரவும் பிறப்பிக்கப்பட்டது. எல்லா மாணவர்களையும் 'தகுதியின்' பேரிலேயே சேர்க்க வேண்டும் என்று கூறிவிட்டால் எதிர்ப்பு மிக வேகமாக வளர்ந்திடுமே என்பதை அறிந்த காரணத்தாலேயே அந்த அளவோடு 'தகுதி'க்கு இடம் தேடிக்கொண்டார்.

இந்தப் புது முறை தகுதி குறித்துச் சட்ட சபையில் கேள்விகள் கிளம்பியபோது, பதி

லளித்த கல்வி அமைச்சர், "தகுதி என்பதாவது மாணவன் வாங்கியுள்ள உயர்ந்த அளவு மார்க்கு களே" என்றும், 'இதுவே தகுதியை நிர்ணயிக்கும் சரியான கருவி அல்லவெனினும், வேறு தக்க அளவு கருவி (மதிப்பீடு) இல்லாதவரை, அரசாங்கம் இதையே கைக்கொள்ள வேண்டியிருக்கின்றதென்றும்", வெளியிட்டுள்ளார்.

மாணவர்களின் தகுதியையும், திறமையையும் கண்டறிய சரியான ஒரு அளவுகோலையே (கருவி) தீர்மானிப்பதற்குமுன், சந்தேகத்திற்குரிய ஒரு அளவுகோலால் அதிக 'தகுதி'யுடையவர்கள் என்று கருதப்படும் மாணவர்களுக்கென, கல்லூரிகளில் இடம் ஒதுக்குவதில் என்ன நியாயம் இருக்க முடியும்?

வகுப்புவாரியாக, வட்டாரவாரியாக மாணவர்களைச் சேர்ப்பதைக் கைவிட்டு 'தகுதி'யுள்ளவர்கள் என்பதற்காக 20-சதவிகித மாணவர்களைச் சேர்க்காவிட்டால், அத் 'தகுதி' யுடையவர்கள், வகுப்புவாரி உத்தரவின்படி சேர்க்கப்படுகையில் கைவிடப்பட்டா போகிறார்கள்? என்பதும், இத் 'தகுதியின்' பெயரால் சேர்க்கப்பட்டவர்களில் எந்தெந்த வகுப்பார் எவ்வளவு இடம் பெற்றுள்ளனர் என்பதும் கண்டறிந்தால் உண்மை விளங்கும்.

1946-ம் ஆண்டில் மருத்துவக் கல்லூரியில் சேர்க்கப்பட்டுள்ள 387-பேரில் (20 சதவிகிதத்தினர்) 67-பேர் 'தகுதி'யின் பேரால் சேர்க்கப்பட்டனர். அந்த 67-ல் 47-பேர் பார்ப்பனர். மற்றப்படி வகுப்புவீதாச்சாரப்படி சேர்க்கப்பட்டவர்கள் 267-பேர்;—அதில் 49-பேர் பார்ப்பனர்கள்.

வகுப்பு வீதாச்சாரப்படி பொறுக்குகையிலும், ஒவ்வொரு வகுப்பாரிலும் அதிக 'தகுதி'

யுடையவர்கள் எனப்படுபவர்களைப் பொறுக்குவது தான் வழக்கம். எனவே 'தகுதி'யின் பேரால் பொறுக்கப்பட்டுள்ளவர்களில் மிகப் பெரும் பான்மையோராக உள்ள சமூகத்தாராகிய (67-ல் 47) பார்ப்பனருங்கூட, அவர்களுடைய வகுப்பிற்கென பொறுக்கப்பட்ட 49-பேர்களில் அடங்குவரன்றோ? அதுமட்டுமன்றி, மருத்துவக் கல்லூரியில் உள்ள மொத்த இடங்களும் வகுப்பு வாரி முறைப்படி அளிக்கப்பட்டால் 56-பார்ப்ப னர்களுக்கு இடம் கிடைக்கும். அந்த '56'-லேயே —இந்தத் 'தகுதி யுடையோர் எனப்படும் பார்ப் பனர் '47' பேரும் 'தகுதி'யில்லாத பார்ப்பனர் '9' பேரும்கூடச் சேர்க்கப்படுவர்.

'தகுதி' பித்தலாட்டம்

ஆனல், தகுதியின் பேரால் இடம் ஒதுக்கிய தன் மூலம், 'தகுதி'யுடையவர்கள் என்றபேரால் (புதுவாயில் வழியாக) 47-பார்ப்பனரும், 'தகுதி, பெருதவர்களில் '49'-பார்ப்பனருமாக 96 பேர் சேர்க்கப்பட்டுள்ளனர். அவர்களுக்குரிய விகிதப் படி அவர்கள் பெறக்கூடிய 56-இடங்கட்குமேல் 40-இடங்கள்—மற்ற வகுப்பார்களுக்குரிய இடங் களைப் பிடித்துக் கொண்டுள்ளனர். உண்மையில் 'தகுதி'யின் பேரால், 47 பார்ப்பன மாணவர்களை நுழைத்துவிடுவது மூலம், அவர்கள் கூறுகிறபடி, 'தகுதி' பெருதவர்கள் எனப்படும் (மற்றும் ஒரு) 49-பார்ப்பனரைக் கல்லூரியில் நுழைக்கவும், மற்ற வகுப்பாருக்குக் கிடைக்க வேண்டிய 40—இடங்களையும் அவர்களே பற்றிக் கொள்ளவுமே வழி செய்யப்பட்டுள்ளது.

அது போன்றே—பொறி இயல் (என்ஜினிய ரிங்) கல்லூரியில் உள்ள 342-இடங்களில், 57-இடங் கள் மட்டுமே பார்ப்பனருக்கு உரியதாக இருக்க

வும், 'தகுதி'யின் பெயராலேயே 57-இடங்களையும் பிடித்துக்கொண்டு மேலும், மற்ற வகுப்பாருக் குரிய இடங்களில் 26-யும் அவர்களே அடைந்துள் ளனர். இவற்றை அறியும்போது 'தகுதிக்கு' இடம் அளிப்பதாகச் சொல்லிப் பார்ப்பனருக்கே இடம் பிடித்தனர் என்பது தெளிவாகும்.

'தகுதியில்' நம்பிக்கையோடு 'திறமையை'க் காப்பதற்காக இத்திட்டம் கொண்டுவரப்பட்டிருந் தால், மொத்தத்தில் ஒவ்வொரு வகுப்பாருக்கும் உரிய இடங்களில், அந்தந்த வகுப்பாரும் 'தகுதி' யின் பேரால் அடைந்ததுபோக அவர்களுக்கென மிச்சமுள்ள இடங்களைத் தான் அந்தந்த வகுப்பா ருக்கும் வீதாசாரப்படி அளிக்க வேண்டும் என்ரு வது முறை செய்திருக்க வேண்டும். 'தகுதி'யை எந்த நோக்கத்தோடு கொண்டு வந்தனரோ, அந்த நோக்கமே பாழாகிவிடுமே, அவ்வாறு செய்திருந் தால்?

அவ்வாண்டில் நடைமுறையில் இருந்த கம்யூ னல் ஜி. ஓ. படி 17 சதவிகிதமே (ஆறில் ஒன்று) இடம் பெற்று வந்த பார்ப்பனர், தகுதிக்கென 20 சதவிகிதம் ஒதுக்கப்பட்டதன் மூலம் அதிலே யும் பெரும்பகுதியை அடைவதால், மொத்தத்தில் சுமார் 30 சதவிகிதம் வரை கைப்பற்றியுள்ள னர்.

### இதோ புள்ளி விவரம்

இதனை, அவ்வாண்டு, அவ்விரு கல்லூரிகளி லும் சேர்க்கப்பட்ட மாணவர்களின் புள்ளி விவ ரத்திலிருந்து அறிந்து கொள்ளலாம்.

## (1946-ல்) மருத்துவக் கல்லூரி (மெடிகல்)

| வகுப்பு விவரம் | மொத்தம் விண்ணப்பித்தவர்கள் | தகுதியால் சேர்க்கப்பட்டோர் | வகுப்பு விகிதத்தால் சேர்க்கப்பட்டோர் | கூடுதல் |
|---|---|---|---|---|
| பார்ப்பனர் | 403 | 47 | 49 | 96 |
| பார்ப்பனரல்லாதார் (இந்து) | 470 | 14 | 122 | 136 |
| தாழ்த்தப்பட்டோர் | 2 | ... | 2 | 2 |
| இந்திய கிருஸ்தவர் | 110 | 6 | 53 | 59 |
| முஸ்லீம்கள் | 44 | ... | 43 | 43 |
| கூடுதல் | 1029 | 67 | 269 | 336 |

## 1946-ல் பொறி இயல் கல்லூரி (என்ஜினியரிங் காலேஜ்)

| வகுப்பு விவரம் | விண்ணப்பித்தவர்கள் | தகுதியால் சேர்க்கப்பட்டோர் | வகுப்பு விகிதத்தால் சேர்க்கப்பட்டோர் | மொத்தத்தில் சேர்ந்தோர் |
|---|---|---|---|---|
| பார்ப்பனர் | 609 | 57 | 26 | 83 |
| பா. அல்லாதார் (இந்து) | 343 | 8 | 179 | 187 |
| தாழ்த்தப்பட்டோர் | 8 | ... | 8 | 8 |
| இந்திய கிருஸ்தவர் | 76 | 2 | 30 | 32 |
| முஸ்லிம்கள் | 44 | 2 | 30 | 32 |
| கூடுதல் | 1080 | 69 | 273 | 342 |

### தகுதியும் திறமையும்

'தகுதியின் பெயரால் இடம் ஒதுக்கி அதைப் பார்ப்பனர்கள் பிடித்துக்கொள்கின்றனர் என்பது ஒருபுறமிருக்க, அத்'தகுதி'யேனும் உண்மையானது தானா, அனைவருக்கும், எல்லா வகுப்பினருக்கும் பொருந்தக் கூடியதுதானா என்று எண்ணிப்பாருங்கள்.

"தகுதி" என்பதே தேர்வில் (பரீட்சையில்) வாங்கும் மார்க்குகளைக் கொண்டே தீர்மானிக்கப் படுகிறது. அதிக மார்க்குகள் பெற்றவர்கள் அதிக (உயர்ந்த) தகுதியுடையவர்கள் என்பது கருத்து.

ஆனால், 'மார்க்குகள்' எப்படியெல்லாம் பெறப்படுகின்றன என்பதும், பரீட்சை எழுதியவுடனேயே, மாணவர்களும் பெற்றோரும் மார்க்குப்பெற எத்தனைவித முயற்சியிலே ஈடுபடுகின்றனர் என்பதும் நாடு நன்கறிந்ததேயாகும்.

அம்முயற்சியிலே பெரும்பாலோர் ஈடுபட வழி இல்லையென்றாலும், ஈடுபடும் மக்கள் குறிப்பிடத் தக்க அளவு (பலர்) ஆகவின், அதனால் ஏற்படும் விளைவை ஒதுக்கி விடமுடியாது.

### வறுமையால் வாழ்வில்லை

அம் முயற்சியிலே கூட, ஏழை மக்கள், வெற்றிபெற முடியாது. அதற்கான வாய்ப்போ, வசதியோ, பொருளோ அவர்கட்குக் கிடைப்பதில்லை. செல்வம் உடையவர்கட்கோ அவர்களின் செல்வாக்கு, அவர் தம் கருத்தைப் பணியாள் மூலம் தெரிவிக்கச் செய்யும் அளவிலேயே, 'மார்க்கு' கேட்டதைப்போல் இரண்டு மடங்கு கிடைத்து விடுகிறது.

அது போலவே, கல்வித்துறையில் பின் தங்கி விட்ட சமூகத்தார், யார் பரிசோதகர் (பரீட்சகர்

என்பதைக்கூட அறிய முடியாது, அறிந்தாலும் நெருங்கவும் வழி கிடைக்காது. படித்து முன்னே றிய சமூகத்தாரோ, யார் பரீட்சகர் என்பதை எளிதிலே அறிந்துகொள்ள முடிவதோடு, அவர் களைத் தங்கள் பந்துமித்திரராகவோ, பள்ளித் தோழராகவோ பெற்றிருக்கக்கூடிய நிலையில், தமது விருப்பத்தை—அன்புக் கட்டளையாகவே மாற்றவும் முடிகின்றது.

இந்நிலையில், இத்தவறான பாதை வழி நடந்து பலன் பெறுவது பணக்காரராகவோ, படித்தவ ராகவோ, செல்வாக்குக் கொண்டவராகவோ உள்ளவர்களைப் பெரும்பான்மையாகக் கொண்ட சமூகங்களுக்குத்தான், இயல்பாகவும் எளிதாக வும் பலனளிப்பதாகவும் ஆகியுள்ளது. இந்நிலை யில் தான் இன்றைய பார்ப்பன சமூகம் உள்ளது என்பதும், இத்தவறான வழியில் நடக்கவும் அத னால் பயன்பெறவும் அவர்களுக்குள்ள வாய்ப்பை விட மற்ற சமூகங்களுக்குள்ள வாய்ப்பு மிகக் குறைவு என்பதும் மறுக்க முடியாததாகும்.

**பார்ப்பனரும் இனவுணர்ச்சியும்**

மேலும், பார்ப்பனர் மிகுந்த சாதி உணர்ச்சி யும் இனப்பற்றும் கொண்டவராகவும், கல்வித் துறையில், பெரும்பான்மையினராகவும், பழைய பெருச்சாளிகளாகவும் இருப்பது அந்தச் சமூகத் தார் தங்கள் 'தகுதியை' உயர்த்திக்கொள்ள பெரி தும் உதவுகிறது. கல்வித் துறையிலே அவர்கள் தங்கள் பங்குக்குமேல் பலமடங்கு ஆதிக்கம் பெற் றுள்ளதால் 'அவர்கள்' கைக்கொள்ளும் தவறான பாதையில்கூட ஆபத்து நெருங்காமல் பாதுகாப்பு கிடைப்பதோடு வெற்றியும் கிடைக்கிறது. இந் நிலையை வேறு எந்த ஒரு சமூகமும் இன்று கனவு காணவும் வாய்ப்பில்லை எனில், (மற்ற வகுப்பாரை

விட) பார்ப்பன வகுப்பார் பெறும் 'தகுதி'க்கு அர்த்தமில்லை யன்றோ!

**தமிழாசிரியர்கள் தொண்டு!**

அன்றியும், தம் தாய் மொழியிலே உள்ள பற்றினால், அந்த 'செத்துப்போன' சமஸ்கிருத பாடையைக் கட்டியழுகின்ற பிள்ளைகளிடத்திலே அம் மொழி ஆசிரியர்களும் பரிசோதகர்களும், மிகுந்த கருணை கொண்டு, நூற்றுக்கு 80, 90 என்று மார்க்கு அளிப்பதையே தருமமாகக் கொண்டிருப்பதும், தமிழ்மொழி ஆசிரியர்களோ, கன்னித் தமிழைக் கைக்கொள்ளல் எளிதாமோ? என்ற கருத்தினராய், தமிழ்த் தேர்வு எழுதுபவர்கள், எவ்வளவு தான் சிறப்பாக விடையளித்திருப்பினும் நூற்றுக்கு 50, 60-க்கு மேல் மார்க்கு அளிக்காமல் இருப்பதையே தமது தமிழ்த் தொண்டாகக் கொண்டிருப்பதும் மாணவர்களின் உண்மைத் 'தகுதியை' மறைத்துவிடக் காரணமாகிறது. இதனாலும், பெருவாரியாக, சமஸ்கிருதம்படிக்கும் பிள்ளைகளைக் கொண்ட பார்ப்பன சமூகத்தார் மற்ற வகுப்பாரைவிட அதிக 'தகுதி' பெற்றவர்களாக காட்டிக்கொள்ள முடிகிறது. அதற்காக தமிழையோ, வேறொரு மொழியையோ தாய் மொழியாகக்கொண்ட மக்கள், தம் 'தகுதியை' உயர்த்திக்காட்ட சமஸ்கிருதத்தையா படிக்க முடியும்?

**பரம்பரைப் பண்பு**

மேலும், பரம்பரை பரம்பரையாக பல நூறு ஆண்டுகளாகப் படிப்பதையே (ஓதுவதையே) கடமையாகவும், தூது நடப்பதையே தொழிலாகவும், உத்தியோகம் பார்ப்பதையே தர்மமாகவும் கொண்டு தமது புத்திக்கு மட்டுமே வேலை ஏற்படும்படியான ஒரு தந்திர ஏற்பாட்டைச் செய்துகொண்ட சமூகத்தாருக்கொப்ப, ஏர்

பிடிப்பதையும், துணி நெய்வதையும், வாணிபம் செய்வதையும், வளம் பெருக்குவதையுமே கடமைகளாகக் கொண்டு, உடல் உழைப்பையே நம்பிக் கிடந்த நயவஞ்சகமறியாத மற்றோர் சமூகம், படிப்புத்துறையில் எப்படித் தகுதிபெறமுடியும்? தனிப்பட்டவர்களையல்ல நாம் குறிப்பிடுவது. நாம் அறிவோம் எந்தத் துறையை எடுத்துக் கொண்டாலும், அத்துறை ஒவ்வொன்றிலும் எவரேனும் ஒரு பா. அல்லாதாரே, சிறப்புற்றுத் திகழும் அறிவாற்றல் மிக்கவராக விளங்குகிறார் என்பதை. ஆனால் சமூகங்களின் தராதரத்தை, அதன் இயற்கைச் சிறப்புக்களைக் கொண்டு ஒப்பிட்டுப் பார்க்கும்போதுதான், இயல்பினால், பண்பினால் இரு வேறு துருவங்களாக உள்ள அவ்விரண்டு சமூகங்களுக்கும் ஒரே அளவு கருவி கொண்டு 'தகுதியை'த் தீர்மானிப்பது எப்படி முறையாகும் என்றும், அத்'தகுதி'யைக் கொண்டு உரிமையளிப்பது எப்படி நியாயமாகும் என்றும் கேட்க வேண்டியிருக்கின்றது.

பரம்பரை பரம்பரையாக, வேதமானாலும் எதுவானாலும், பொருள் தெரிந்தோ தெரியாமலோ நெட்டுருபோட்ட மூளையைக் கொண்ட சமூகத்தோடு, அறம் பொருள் இன்பத்தை இயல்பான வாழ்க்கையிலே கடைப்பிடித்து மனத்தினாலே பண்பட்ட சமூகம், இன்று (இந்நூற்றாண்டில்) ஏட்டுப் படிப்பைத் தொடங்கிய அளவிலே எப்படிப்போட்டி இட்டுத் தகுதிபெற முடியும்? மூளைப் பயிற்சியே மிகுந்துள்ள கூட்டம், மூளைக்கு மட்டுமே வேலை தரும் இன்றைய பரீட்சை முறையிலே பெறும் தகுதியை மற்றவர்கள் பெறவேண்டும் என்று எப்படி எதிர்பார்க்க முடியும்?

மனு நீதியின் விளைவு

அத்துடன், "பிராமணர்கள்தான் படிக்கலாம், ஓதலாம், குருவாகலாம், அது அவர்கள் கடமை. மற்றவர்கள் படிப்பதே பாபம். சூத்திரர்கள் வேதத்தைப் படித்தால் படித்த நாவை அறுக்கவேண்டும்; வேதம் படிப்பதைக் கேட்டால் கேட்ட காதிலே ஈயத்தைக் காய்ச்சி ஊற்றவேண்டும்; தவஞ் செய்தால் (சிந்தனையில் ஆழ்ந்தால்) தலையையே வெட்டிவிடவேண்டும்," என்று கூறும் வர்ணாஸ்ரம மனுநீதியை நாட்டிலே புகுத்தி, மற்றவர்களை யெல்லாம் அதை நம்பி ஏமாறும்படிச் செய்துவிட்டு, (சூதான நோக்கத்தோடு) தாம்மட்டுமே கல்விகற்ற கூட்டத்தோடு, படிப்பையே ஒரு தொழிலெனக்கொண்டு பார்ப்பனரிடத்திலே அதை ஒப்புவித்துவிட்ட பாமரர் கூட்டம் எப்படிப் போட்டியிட்டுத் 'தகுதி' பெறமுடியும், அவர்களுடைய மனக்கருத்து மாற்றமடைந்து தன்னம்பிக்கை பிறக்குமுன்.

வர்ணாஸ்ரம தர்மம், அதன் வேரோடும் விழுதோடும் சாய்க்கப்பட்டு, மண்ணோடு மண்ணாக ஆக்கப்பட்டு, சாதியின் நாற்றமோ, உயர்வு தாழ்வின் வாடையோ வீசாமல் ஒழிக்கப்பட்டு, பார்ப்பனரல்லாத வகுப்பாரின் 'தாழ்வு' மனப்பான்மை' நீக்கப்படாதவரை பார்ப்பன மாணவர்கட்கும் மற்றவர்கட்கும் ஒரே அளவைக் கொண்டு 'தகுதி'யைத் தீர்மானிப்பது எப்படி நீதியாகும்?

வசதியும் தகுதியும்

மேலும், பார்ப்பன மாணவர்கட்குப் படிப்பதற்குக் கிடைத்துள்ள வசதிமிக்க சூழ்நிலை மற்ற வகுப்பாருக்கு இல்லாமலிருக்கவும், தாழ்த்தப்பட்ட வகுப்பாருக்கோ, படிக்க எவ்வித வசதி

யுமே இல்லையாகவும். அம்மூவரும் எப்படி ஒரே 'தகுதியை'ப் பெறமுடியும்?

### தமிழர் நிலை காணீர்

அட்வகேட் அனந்தாச்சாரியின் மூன்றாவது மகன் சந்தானம் இண்டர்மீடியட் வகுப்பிலே படிக்கிறான்; அவனது பெரிய அண்ணா பட்டாபிராமன் ஒரு டாக்டர்; தமக்கை சீதாலெட்சுமி ஒரு பி.எ. பட்டதாரி; சின்ன அண்ணா ரங்கசாமி என்ஜினியரிங் காலேஜில் படிக்கிறான்.

வக்கீல் குமாஸ்தா கோவிந்தசாமிப் பிள்ளையின் இரண்டாவது மகன் சண்முகமும் இண்டர்மீடியட் வகுப்பிலே தான் படிக்கிறான். அவன் அண்ணன் ஆறுமுகம் எஸ். எஸ். எல். சி. பாஸ் செய்து விட்டு தபாலாபீஸில் கிளார்க்கு வேலையில் இருக்கிறான். அவன் தங்கை சரஸ்வதியோ, நான்காம் வகுப்போடு பள்ளிக்கூடத்தை விட்டு விட்டு, மணப்பருவத்தை எய்தி வீட்டிலே இருக்கின்றாள். இன்னும் சின்னத்தம்பியும் தங்கையும் வேறு உண்டு.

கூலி வேலை செய்து வயிறு கழுவும் குப்பன் மகன் இரத்தினமும் கூட (ஆச்சரியந்தான்) இண்டர் மீடியட் வகுப்பிலே படிக்கிறான். அவனது தாய் புல்லறுக்கப்போவதும், தமக்கை வக்கீல் வீடு கூட்டப்போவதும். தம்பியும் தங்கையும் வேளைக்கு வேளை உணவுக்கு வாடி வருந்திக்கிடப்பதும்—அவனது குடும்பத்தின் அன்றாட 'வாழ்க்கை'. தகப்பன் எப்பாடுபட்டோ தன்னைப் படிக்க வைக்க முன் வந்த காரணத்தால், அரசாங்க ஸ்காலர்ஷிப் உதவி கொண்டு, தட்டுத்தடுமாறி இண்டர் மீடியட் வகுப்பிலே படித்து வருகிறான்.

மூன்று சமூகங்களைச் சேர்ந்த மூவரும் ஒரே வகுப்பிலே, ஒரே கல்லூரியிலே படித்தபோதிலும்,

இவர்களுக்கிடையே உள்ள வேறுபாட்டை, ஒரு கணம் உங்கள் மனக் கண் முன்னல் கொண்டு வந்து பாருங்கள்.

அட்வகேட் மகன் சந்தானம் சரியாக 10-15-மணிக்குப் புறப்பட்டு ஆஸ்டின் காரிலே கல்லூரிக்குச் செல்கிறபோது, தகப்பனுரிடத்திலே தலையைச் சொரிந்து பஸ்ஸுக்கும் காபிக்கும் காசு வாங்கிக்கொண்டு 9-30 மணிக்கே வீட்டை விட்டுக் கிளம்பி, பஸ்ஸுக்குக் காத்துக்கொண்டிருக்கும் சண்முகத்தைப் பார்த்து, ஜேய் ஹிந்த்—சொல்லி விட்டுத்தான் செல்கிருன். என்றைக்கேனும் ஒரு நாள் சண்முகத்துக்கும் சந்தானம் காரில் இடம் கிடைப்பதுண்டு. அதனல் ஒவ்வொரு நாளும், கார் நிற்குமா என்று எதிர்பார்த்து சண்முகம் ஏமாறவும் காரணமாகும்.

அந்தப் பாதையிலேயே நடப்பதில்லை குப்பன் மகன் இரத்தினம். அவனது ராஜ பாட்டையே, வயல் வழி—குறுக்குப்பாதை. வீட்டிலே அரை வயிறு கால் வயிறு மட்டுமே உண்டு, அத்துடன் அவிழ்த்து வைத்திருந்த ஆடையை உடுத்திக்கொண்டு, காலை 9-மணிக்கே புறப்பட்டு 3, 4-மைல் நடந்து வந்து கல்லூரியை அடைகிருன்.

வக்கீல் மகன் — இடைவேளை உண்பது 'விருந்து'போலச் சிறக்கும்; குமாஸ்தா மகன் ஒரு வடை ஒரு காபியிலே ஆறுதல் அடைகிருன்; கூலிக்காரன் மகன், எவரேனும் நண்பர்கள் கூட்டிப்போன நாள் தவிர—புளியமரத்தடி காற்றிலே களைப்புப் போக்கிக்கொள்கிருன். பசி காதடைக்கும், வீட்டிலே உள்ள தம்பி தங்கையை எண்ணியவுடன் அது மறக்கும்.

மாலையானவுடன், வக்கீல் மகன் பீச்சு ரோட்டிலே காற்று வாங்கியபடி வீடு திரும்புவதும்,

காபி சாப்பிட்டவுடன் சிறிது ஓய்வாக ரேடியோ வைத் திருப்புவதும், மணி 7-ஆனதும்—மின்சார விளக்குடன் விசிறியும் போட்டுவிட்டுப் படிக்க உட்காருவதும், கணக்கிலே சந்தேகம் என்றால் சின்ன அண்ணாவைக் கேட்பதும், ஆங்கிலம் என்றால் அக்காவிடம் கேட்பதும், பொது அரசியல் தெரிந்துகொள்ள அப்பாவிடம் பேசுவதும், சிறிது தலைவலி என்றால், டாக்டர் அண்ணாவைக் கூப்பிடுவதும், மணிபத்து ஆனால் பால் சாப்பிட்டுப் படுக்கப்போவதும், கல்லூரியிலோ பிரின்ஸ்பால் வரையிலே தெரிந்திருப்பதும், "சமஸ்கிருதத்திலே" படிக்காமலே மார்க்கு வாங்குவதும் அவனது படிப்பிலே உற்சாகமூட்டும் கருவிகளாகின்றன. கவலையோ எந்த வடிவிலேயும் அவனை நெருங்குவதில்லை. உயர்தரத் தகுதி பெறமுடியும் என்ற நம்பிக்கைக்கோ குறைவில்லை. திடநம்பிக்கையோடு, ஆதரவும் கிடைப்பதால் அவன் அடையும் ஆநந்தத்துக்கோ அளவில்லை. அவன் 'படிப்பதற்குக் கேட்கவா வேண்டும்?

குமஸ்தாவின் மகனோ, வீடு திரும்பியவுடன் காபிக்கு' வழி இல்லையே என்றெண்ணி உணவுக்குக் காத்திருப்பதும், அரிக்கன் லைட்டைத் துடைத்து ஏற்றிவைத்துப் படிக்க உட்காருவதும், பக்கத்திலே தம்பியும் தங்கையும் சத்தம்போட ஆரம்பிப்பதால் கோபப்படுவதும், சந்தேகம் ஏற்பட்டால் யாரையும் கேட்க வழி இன்றித், திகைப்பதும், எல்லாப் புத்தகங்களுங்கூட வாங்க முடியாத நிலையில் நாம் ஏன் குடும்பத்திற்குப் பாரமாகப் படிக்கவேண்டும், படிப்பை விட்டுவிட்டு ஏதேனும் வேலைக்குப் போய்விடலாமா என்று எண்ணுவதும், நாம் அறிந்ததேதான்.

கூலிக்காரன் மகனோ, இருட்டும்போது குடிசை வந்தடைவதும், குடும்பத்தார் படும் வேத

னையைக் கண்டு துயரம் நெஞ்சை அடைக்க இரவல் புத்தகத்தைப் புரட்டுவதும், அகல் விளக்கு எரிந்தவரையிலே அதிலே படித்து அப்புறம் தெரு விளக்கிலே படிப்பதும், படுக்கப் பாய்தலையணை இன்றியும், உடுக்கப் போதுமான உடை இன்றியும், பசி நீங்கப் போதுமான உணவின்றியும், குமுறல் அடங்காத மனத்தோடும், தான் படிப்பதே கூடத் தன் குடும்பத்திற்குச் செய்யும் கொடுமையே என்றெண்ணும்போது தோன்றும் பெருமூச்சோடு கண்ணீர் விடுவதுமே அவன் படிப்பதற்குள்ள சூழ்நிலை என்பதை மனமுள்ள எவரும் அறிவர்.

அழகிய மாளிகையிலே, ஆனந்தச் சூழ்நிலையிலே, கூப்பிட்ட குரலுக்கு ஏவலர் இருக்க, அறிவாளர் நடுவிலே அனாயாசமாகப் படிக்கின்றான் ஒருவன்.

சிறியதொரு வீட்டிலே, தன்னளவு படித்தவரும் இல்லாத இடத்திலே, வீட்டிலே உள்ள பல தொல்லைகளிலேயும் பங்குகொண்டவனாகப் படிக்கின்றான் ஒருவன்.

காற்றோ, ஒளியோ புகமுடியாத ஒரு குடிசையிலே, அன்றாடம் அவதியுறும் குடும்பத்திலே, தற்குறிகள் நடுவிலே வேதனை வெள்ளத்திலே தத்தளித்தபடி—கவலைக் கடலிலே மூழ்கியபடி படிக்கின்றான், ஒருவன்.

வக்கீல் மகனுக்கோ, படிப்பு ஒரு உல்லாச ஓடம். குமாஸ்தாவின் மகனுக்கோ, படிப்பு ஒரு பாரவண்டி. கூலிக்காரன் மகனுக்கோ, படிப்பு ஒரு தலைச்சுமை பாராங்கல்.

படிப்பு, அனந்தாச்சாரியின் மகனுக்கு, ஒரு பழக்கமான பாதை. கோவிந்தசாமிப்பிள்ளையின் மகனுக்கோ ஒரு புதிய பாதை. கூலிக்கா

ரன் மகனுக்கோ ஒரு புதிய, கண்டறியாத, கரடு முரடான கடின பாதை.

செல்வருக்குப் படிப்பு ஒரு அடையாளச் சீட்டு; நடுத்தர நிலையினருக்குப் படிப்பு ஒரு வாழ்க்கைப் பிரச்சினை; தாழ்த்தப்பட்டவர்கட்கோ படிப்பு ஒரு தண்டனை, வேதனைச் சுழல்.

இந்நிலையில் உள்ள இம் மூவரும், வாழ்கின்றவரும், இருக்கின்றவரும் அழிகின்றவரும் படித்துத் தேர்விலே பெறும் 'மார்க்கு' அவர்களுடைய உண்மையான 'தகுதியை'க் காட்டும் என யார் தான் கூறமுடியும்? முதலவர் போலவே மற்றிருவரையும் வாழச்செய்துவிட்டோ, அல்லது சம நிலையிலே வைத்தோ, படிக்கச் செய்துவிட்டல்லவா, 'தகுதி' என்ற ஒன்றைத் தீர்மானிக்க முயற்சிக்கவேண்டும்? அல்லது 'தகுதி' என்பது ஆளுக்கொரு விதியின்படியல்லவா கொள்ளப்பட வேண்டும்?

இக்காரணங்களால் 'தகுதி'பெற்றவர்கள் எனப்படுவோரைவிட, மற்றவர்கள் புத்திக் கூர்மை, அறிவாற்றல் குறைந்தவர்கள் என்று கருத இடமில்லை.

## இன்றைய தேர்வு முறை

மேலும் இன்றைய தேர்வு முறையே பெரிதும் ஒருவரது அறிவாற்றலை—புத்தி கூர்மையை அளவிடுவதைவிட ஒருவரின் ஞாபகசக்தியை—புத்தகத்திலே படித்ததை அப்படியே ஒப்புவிக்கும் ஆற்றலை, அளவிடுவதாகவே அமைந்துள்ளது. அந்த ஞாபகசக்தியையும் கூடச் சரியாக அளவிட முடியாது இத் தேர்வு முறையால்.

சிலருக்குச் சில நாள் வரையிலே நல்ல நினைவு இருக்கும், சிலருக்கு ஆண்டுகள் பலவானாலும்

மறவாத வன்மையிருக்கும். ஆனல் இரண்டு பேரும் தேர்வில் ஒரே தகுதியைப் பெறும்படித் தான் விடையளிக்க முடியும். தேர்வுக்குச் சில நாட்கள் முன்பே எட்டைப் பிரித்தவன், பல மாதங்களாகப் பயின்றுள்ளவனுக்கு ஒப்பத் தேர்வு எழுதி, மறுநாளே மறந்தும்விடுகிருன். மேலும் கவலைகட்கு ஆட்படுகின்றவன் படித்த வற்றை மறக்க நேரிடுவதாலும், மன நிம்மதியுடையவன், படித்ததை மறவாமல் இருக்க முடிவதாலும், வாழ்க்கையிலே, சமூக நிலையிலே உள்ள ஏற்றத்தாழ்வும் ஒவ்வொருவரும் பெறக்கூடிய 'தகுதி'யைப் பெரிதும் பாதிக்கிறது.

மற்றும், அறிவுக்கே சிறிதும் வேலை இன்றி எந்தப்பொருள் குறித்த தேர்வானலும், அதற்காக வெளியிடப்படும் குறிப்பு ஏடுகளில் (Notes) உள்ள கேள்வி விடைகளை மட்டுமே படித்து—புரிந்தோ புரியாமலோ — மனப்பாடம் செய்து தேர்வு எழுதும் நிலைமையில், 'உண்மைத் தகுதி'யைத் தேர்வைக் கொண்டு எப்படி அறியமுடியும்?

இப்படிப்பட்ட வாய்ப்பினல்தான், பரம்பரையாக ஓதுவதும் நெட்டுரு செய்வதும் தொழிலாகக் கொண்ட பார்ப்பன வகுப்பார், உயர்தரக் கல்லூரிப் படிப்பு முடியும்வரையிலும் பெரிதும் 'தகுதி' மிக்கவர்களாகவே காட்சியளித்த போதிலும், அதன் பின்னர், வாழ்க்கையில், பார்ப்பனர்களின் கட்டுப்பாட்டையும் சாதி மனப்பான்மையையும் கூடத் துளைத்து உயரும் அளவுக்கு, மற்ற வகுப்பாரிலே உள்ள கூர்த்தமதிபடைத்த நல்லறிஞர்களை, அவர்களால் எட்டிப் பிடிக்கவும் முடியவில்லை என்பது நன்ருக விளங்கும். இந்நிலையில் உண்மைத் தகுதியைத் தேர்வு காட்டுகின்றதா என்று எண்ணிப்பாருங்கள்.

விடைத்தாள் மதிப்பீடு

மற்றும், தேர்வுக்கு எழுதப்பட்ட விடைத் தாள்களை மதிப்பீடு செய்கையிலும், பல காரணங் களால் உண்மைத் தகுதி மறைந்தே போகிறது. நியாயமாகவே ஒரு பரிசோதகர் மதிப்பீடு செய்ய முயன்றாலும், அவருடைய மதக் கருத்துக்கள், அரசியல் சமூக இயல் கொள்கைகள் காரணமாகத் தன்னையும் அறியாமல் கொள்ள நேரிடும் விருப்பு வெறுப்புக்களால் ஒவ்வொரு விடைத்தாளின் மதிப்பும் மாற்றமடைந்து விடுகிறது.

ஒரு விடைத்தாளை மதிப்பீடு செய்கையில் பரி சோதகரின் மன நிலை மகிழ்ச்சியாகவோ, கவலை யாகவோ இருப்பதைப் பொருத்தும், அந்த விடைத்தாளின் உண்மை மதிப்பு உயர்ந்தோ தாழ்ந்தோ போய்விடுகிறது. அதற்காகத்தான் தேர்வு எழுதியவர்களிற் சிலர் பரிசோதகரை அறிந்தால், மகிழ்ச்சியூட்டும்படி எதையேனும் அனுப்பிவைக்கிறார்கள் போலும்.

மேலும், பலருடைய விடைத்தாள்களைத் திருத் தும் பரிசோதகர், வரிசையாக மதிப்பீடு செய்து வருகையில் முதலில் ஒரு சிறந்த விடைத்தாளை மதிப்பிட்டுவிட்டு, அடுத்தாற்போல் ஒரு நடுத்தர விடைத்தாளை மதிப்பிட நேர்கையில், அதற்குரிய மதிப்பினும் குறைந்த மதிப்பே அளிக்க நேருவ தும், மிகவும் தாழ்ந்ததொரு விடைத்தாளைத் திருத் தியபின்—ஒரு நடுத்தர விடைத்தாளை மதிப்பிட நேர்கையில், அதற்குரிய மதிப்பினும் உயர்ந்த மதிப்பே அளிக்க நேர்வதும் உண்மையாகும். நூற்றுக்கணக்கான விடைத்தாள்களைத் திருத்து கின்றபோது இது ஒரு தொடர் கதையாகும்.

ஒரே நிலையிலே உள்ள விடைத்தாள்கள் எப் படி இரண்டுவிதமாக மதிப்பீடு பெற முடியும்

என்று சிலர் நினைக்கலாம். மதிப்பீடு செய்வது என்பதே--ஓரளவு கற்பனை கலந்த அறிவுப் பணியேயாகும். இன்னதன் மதிப்பு இன்னதுதான் என்று வரையறுத்துக் கூற முடியாத நிலையில், ஏறத்தாழ இவ்வளவுதான் என்று தீர்மானிக்கப்படுவதே மதிப்பீடாகும். அறிவு, முடிவிற்கு வரத்தாமதிக்கும் போதெல்லாம் இதில் ஒருவித கற்பனை மதிப்பே நிகழ்கிறது என்பதைப் பரிசோதகர் எவரும் உணர்வர். உண்மையில் 'மதிப்பை' அளத்தற்கு இன்னதுதான் 'கருவி' என்று எதுவும் இல்லை. பரிசோதகரின் அறிவு ஆராய்ச்சித் திறன் நோக்கம் மனநிலை முதலியவற்றோடு, மாணவனின் விடைத்தாள் மோதிக்கொள்ளுகிற போது ஏற்படுகிற ஒரு குழப்பமான முடிவே அதன் மதிப்பாக வெளிப்படுகிறது.

### பரிசோதகர் மன நிலை

இந்த உண்மையை, சூடான நீரில் ஒன்றும், குளிர்ந்த நீரில் ஒன்றுமாகத் தன் இரு கைகளையும் சில நிமிடங்கள்வரை ஆழ்த்தி இருந்த ஒருவன், பின்னர் வெதுவெதுப்பான (நடுத்தரச் சூடுள்ள) நீரில் இரு கைகளையும் தோய்ப்பானானால், குளிர் நீரில் இருந்தகைக்கு அது மிகச் சூடாகவும், வெந்நீரில் இருந்த கைக்கு குளிர்ந்ததாகவும் தெரிவதிலிருந்து உணர்ந்துகொள்ளலாம். ஒரே கோப்பையில் உள்ள தண்ணீர்—கைக்கு ஒருவித உணர்ச்சியைத் தருவதைப் போலத்தான், ஒரே தகுதியுள்ள விடைத்தாள்களும்—பரிசோதகரிடம் —அது திருத்தப்படும் சூழ்நிலைக் கேற்ப வெவ்வேறு மதிப்பைப் பெறுகின்றன.

இந்நிலையில், குறிப்பான விடைகளை எதிர் பார்க்கும் கணக்குப்போன்ற தேர்விலே தவிர, மற்றப் பாடத் தேர்வுகளில் முழு உண்மையான

மதிப்பைப் பரிசோதகரே அறிய முடிவதில்லை. இவ்வுண்மையை, ஒரே விடைத்தாளை, ஒருவரே மதிப்பீடு செய்த நினைவின்றி, மறுமுறையும் மதிப்பீடு செய்வாரானால், இரு வெவ்வேறு மதிப்பைப் பெறுவதைக் கொண்டு கண்டுகொள்ளலாம். மதிப்பு சிறிதே வேறுபட்டாலும் இவ்வுண்மை மறுக்க முடியாததாகும்.

மற்றும்—பரிசோதகருக்கேற்பவே, விடைத்தாளும் மதிப்புப் பெறுகிறது என்பதை ஒரே விடைத்தாளை, இருவேறு பரிசோதகர் மதிப்பீடு செய்கையில் இரு வேறு மதிப்புக்கள் பெறுவது கொண்டு அறியலாம். இதனை, ஆனர்ஸ் தேர்வுகளில், ஒவ்வொரு தாளையும் இருவர் மதிப்பீடு செய்துவருகையில், சில விடைத்தாள்களுக்கு இருவரிடமும் கிடைத்த மதிப்பு ஒன்றுக்கொன்று இரண்டு மூன்று மடங்காக இருந்ததால் (ஒருவர் 30 சதவிகிதம் எனவும் மற்றவர் 80 சதவிகிதம் எனவும் மதிப்பீடு செய்திருந்தமையால்) யாரேனும் ஒருவர் செய்திருக்கக் கூடிய அநீதியைத் தவிர்க்க. ஒன்றுக்கொன்று நூற்றுக்குப் பத்து மார்க்குகளுக்கு மேல் வித்தியாசமின்றி மதிப்பீடு ஒத்திருக்க வேண்டுமென அண்மையில், சென்னைப் பல்கலைக் கழகத்திலேயே முடிவு செய்யப்பட்டுள்ளது.

மேலும், ஒரு பரிசோதகரிடம், பல மாவட்டங்களைச் சேர்ந்த பல கல்லூரி மாணவர்களின் விடைத் தாள்களும் மதிப்பீட்டிற்குப் போகின்ற போது ஒரு கல்லூரி மாணவரின், (ஒரு வட்டார மாணவரின்) சராசரி தகுதியையே மனத்தில் கொண்டு மதிப்பீடு செய்ய நேருவதாலும் மற்றொரு வட்டாரக் கல்லூரி மாணவர்கள் அக் கல்லூரியில் அளிக்கப்படும் பயிற்சியின் தரத்திற்கேற்ப, தம் உண்மைத் தகுதியை-மதிப்பீட்டைப் பெற முடியாமல் போகிறது.

இன்னும் ஒரு கல்லூரியைக் குறித்து வளர்ந்துள்ள கருத்துக்களுங்கூட, சில சமயங்களில் அக்கல்லூரி மாணவர்களின் பொதுத் தகுதியை உயர்த்தவோ; குறைக்கவோ காரணமாகிவிடுகிறது.

இவை யாவற்றினும் தேர்வு எழுதுகின்றவர்களில் மிகமிகச் சிலருக்கேனும், தேர்விலே வரக்கூடிய கேள்விகளோ, அதன் குறிப்புக்களோ எந்த விதமாகவோ கிடைக்கச் சந்தர்ப்பங்கள் உள்ளன என்பதைக் கண்ட பின்பும்—'மதிப்பீட்டைக்' கொண்டு தகுதியை எப்படித் தீர்மானிக்க முடியும்?

இப்படிக் கேள்விகளைப் பெறவும்கூட எந்த வகுப்பிற்கு அதிக வாய்ப்பு உள்ளதோ அந்த வகுப்புத்தானே, அதிக 'தகுதி'பெற்றவர்களைப் பெற்றிருக்கவும், அதன் பலனை அனுபவிக்கவும் முடியும்?

மதிப்பீடும் தகுதியும்

இனி, இந்த மதிப்பீடு சரியானபடியே தீர்மானிக்கப்பட்டது என்று ஒப்புக்கொண்டாலும், இதுமட்டும் எப்படி ஒருவருடைய தகுதியை—முழுத் தகுதியைக் காட்டுவதாகும்? எப்படித் திறமையை வெளிப்படுத்தும்?

எழுதுவதிலே விரைவும் திறனும் பெறாத சிலர், நேரடியாகப் பதில் சொல்வதில் வல்லவராகவும்; சொற்களினாலே கருத்தை நன்றாக வெளியிட முடியாத சிலர், நேர் முகப் பயிற்சியிலே (Practice) திறன்மிக்கவராக இருப்பதையும் அறிவோம். சுறுசுறுப்புக் குறைவால் தேர்வில் 'தகுதி' பெற முடியாத சிலர், அமைதியோடு கூடிய விடா முயற்சியால், உண்மையில் தகுதி மிக்கவராக இருப்பதையும் காண்கிறோம்.

ஒரு துறையிலே பயில்கின்றவர் அத்துறையிலே பயின்றுள்ளதைக் கொண்டு மட்டும் 'தகுதி'யைத் தீர்மானிப்பதுங்கூடத் தவறாகும். ஏனெனில் அறிவால் பயின்றுள்ளதைக் கைக்கொள்ளும் திறமும் பயன்படுத்தும் ஊக்கமும் கொண்டுள்ள அளவைப் பொருத்தே உண்மைத் தகுதி அமைகிறது. ஒரு துறையிலே சிறப்பறிவு பெற்றிருந்தாலும், மற்றுமுள்ள வாழ்க்கைத் துறைகளைப்பற்றி அறிந்துள்ள அளவிற்கே, ஒருவன் உண்மைத் தகுதி பெற்றவனாவான். இவைகளையெல்லாம் மதிப்பிடாமல், தேர்விலே பெறும் மதிப்பீட்டுத் 'தகுதி' மட்டும், ஒருவரின் தகுதி திறமையை எப்படிக் காட்ட முடியும்?

## மேல் நாடுகளில்

எனவேதான், மேல்நாடுகளில், (எழுதப்படும்) தேர்வுக்குள்ள முக்கியத்துவத்தைக் குறைத்து, மாணவரின் தகுதியையும், திறமையையும் தீர்மானிக்கும் முறையையே மாற்றிக்கொண்டுள்ளனர். ஒருவன் எழுதும் தேர்வைக்கொண்டு, ஒருவனது தகுதியில், நான்கில்—ஐந்தில், ஒரு பங்கைத்தான் தீர்மானிக்கின்றனர். மற்றப்படி ஒவ்வொரு மாணவரிடத்திலும் பழகிய பேராசிரியர்கள் அவர்களது, கடமையுணர்ச்சி, அறிவுத்திறன், உள்ளப்பாங்கு, உடற்கட்டு 'ஆகியவற்றைக்' கொண்டு அவர்களது 'தகுதி'யைத் தீர்மானிக்கிறார்கள்.

எக்காரணத்தாலோ, அம்முறை இங்கு கைக்கொள்ளப்படவில்லை. இங்கு கைக்கொள்ளப்பட்டாலும், இங்குள்ள சாதி வெறி, வகுப்பு வாதம், ஆதிக்க உணர்ச்சி, சுயநலம், குறுகிய மனப்பான்மை, பழமை போதை ஆகியவை காரணமாக, பெரும்பாலான மாணவர்கள், தமது உண்மைத் தகுதியைப் பெறத்தான் மாட்டார்கள்

அம்முறையைக் கைக் கொள்வதற்கு ஏற்ற சூழ் நிலை இங்கில்லை. இந்நிலையில் தேர்வைக்கொண்டு, —அதில் பெறும் 'மதிப்பீட்டை'க் கொண்டு, தகுதியைத் தீர்மானித்து அதற்கென கல்லூரிகளில் இடமும் ஒதுக்கினர், பிரகாசம் மந்திரி சபையினர்.

தேவைக்கேற்ற தகுதி

மேலும், எத்துறைக் கல்லூரியில் சேர்க்க இத் 'தகுதி' கேட்கப்பட்டதோ, அந்த மருத்துவம், பொறி இயல் கல்லூரிகளில் பயின்று வெளிவருபவர்கள், அத்துறையில் முழுத்தகுதியும் பெற்று நாட்டிற்குப் பயன்படவேண்டுமேயானல், இந்தத் தேர்வுத் தகுதி எவ்வளவு தேவையோ அவ்வளவு, உடல் வலிவும் உள்ளக் கிளர்ச்சியும் உயர்ந்த நோக்கமும் ஆகிய ஒவ்வொன்றும் தேவையாகும்.

நாளெல்லாம், வெய்யிலில் நின்றபடி பணியாற்றவும், நோயாளிகளையே பரிசோதித்தபடியும், அறுவை முதலிய வைத்தியம் செய்தபடியும் இருக்க, மூளைமட்டும் போதாது; உடல் வலிவும், அன்புள்ளமும், சகிப்புத்தன்மையும், பொது நலத்திலே ஆர்வமும் வேண்டும். இவை யாவற்றினையும் மதிப்பீடு செய்யும்படி ஒருமுறை காணக்கூடுமானல், அப்பொழுதே 'உண்மைத் தகுதி'யைக் கண்டறியமுடியும். அப்படியின்றி, இப்பொழுதுள்ள முறைப்படி, 'தகுதி' என்று ஏதோ ஒன்றைக் காட்டி, அதற்கு இடமளிப்பதே திறமையைக் காக்கும் வழி என்று கூறுவது, கண் தெரியாதவனிடம் 'வெண்ணெய்' என்று 'சுண்ணாம்பைத்' தந்து, உடல் வலிவுக்கு அதையே விழுங்கச் சொன்னதைப்போன்ற கொடுமையேயாகும். ஒரு நாட்டிற்கு இன்றியமையாத 'தகுதியும் திறமையும்' பாழாக விடக்கூடாது" என்பதற்காகவே, கம்

யூனல் ஜீ. ஒ. வை எதிர்ப்பதாகக் கூறுவது உண்மையிலே இல்லாத ஆற்றிலே, ஓடாத தண்ணீரைத் தேக்காதது குற்றம் என்று பேசும் பித்தலாட்டமேயாகும்.

இனி, 'அவர்கள்' கூறுகிறபடி இத்தகுதியும் திறமையும் உண்மையானல், அவர்களுக்குக் கல்லூரியில் இடம் கிடைக்காததனுலேயே எப்படி வீணுகிவிடமுடியும்? அதுகாறும் பெற்றுள்ள தகுதி கல்வியில் பெற்றுள்ள பொதுத் தகுதி தானே? தகுதியும், திறமையும் தேவைப்படும் துறைகள் இன்னும் எவ்வளவோ உள்ளனவே? டாக்டராகவோ, இன்ஜினியராகவோ படித்தால் தவிர அவர்கள் திறமையை வேறு எத்துறையிலும் பயன்படுத்த முடியாதா? அவ்வளவுதானு அவர்களின் தகுதி, திறமை யெல்லாம்? பொதுத் தொண்டரிலிருந்து பொருளாதார நிபுணர் ஆகும் வரை, பத்திரிகாசிரியரிலிருந்து பாங்கி நிர்வாகம்வரை, ஆசிரியர் வேலையிலிருந்து அமைச்சராவது வரை, எவ்வளவோ துறைகள், பணிகள் உள்ளனவே? இவற்றில் 'அவர்களின்' திறமையைப் பயன்படுத்தினுல் பாபமா வந்து விடும்?

ஆனல், அதே சமயத்தில் அவர்களே, சங்கராச்சாரியாக, மகந்துவாக, ஜீயராக, புரோகிதராக, அர்ச்சகராக இருந்து நடத்தும் அந்த உயர்ந்த தொண்டுக்கு மட்டும், எந்தத் 'தகுதியும்' 'திறமையும்' கவனிக்கப்படுவதில்லையே ஏன் என்று கேட்கத் தோன்றுகின்றது. அதற்குத்தான் 'ஜாதி'த் தகுதியும், 'ஏமாற்று'த் திறமையும் இருக்கவேண்டுமே என்று 'அவர்கள்' பதில் சொன்னுல் நாம் ஆச்சரியப்படுவதற்கில்லை.

### தகுதியும் உரிமையும்

ஒரு நாடு, முன்னேற எப்படித் தகுதியும் திறமையும் (அறியக்கூடுமானுல்) பாழாகாது காப்

பாற்றியாகவேண்டுமோ, அதைவிட முக்கியமாக எந்த ஒரு வகுப்பாரும், சமூகத்தாரும் தம் உரிமையை இழக்காமல் காத்தாகவேண்டும். தகுதி, திறமை உண்மையாகவே இருப்பினும், அதைக் காப்பதற்காக, எந்த ஒரு சமூகமும் மற்றொரு சமூகத்திடம் அடிமைப்பட இடம் கொடுப்பதோ, சம சந்தர்ப்பம் இன்றி வாழ்வை இழக்க இடம் தருவதோ நீதியும் நியாயமும் ஆகாது.

நீதி நிலைக்காமல், தகுதியும் திறமையுமே ஆதிக்கம் பெறுவது, நீதிமன்றமும் போலீஸும் இல்லாத நாட்டில், தடியெடுத்தவனே தண்டல்காரன் ஆகின்ற நிலையையே தோற்றுவிக்கும்.

**சம சந்தர்ப்பம்**

ஒரு நாடு நல்வாழ்வு பெற அந்நாட்டிலுள்ள எல்லாச் சமூகங்களும் நல்வாழ்வு பெறவேண்டும். "வாழ்ந்தால் முப்பது கோடி மக்களும் வாழ்வோம்" என்றார் பாரதியார். ஆனால், முப்பது வித வகுப்பாரும் வாழ்ந்தால்தான் நாடு வாழ முடியும் என்பது மட்டும் முழு உண்மையாகும். இல்லையாயின், அரசாங்கம் முன்னேறாது என்பதுமட்டுமல்ல, தாழ்த்தப்பட்ட, பிற்படுத்தப்பட்ட மக்களின் உரிமை எழுச்சி காரணமாகப்—பலத்த குழப்பத்திற்கும், பிற்போக்கிற்குமே வழி தேடிக்கொண்டதாகும்.

வியாபாரி—கள்ள மார்க்கெட்டிலே கொள்ளை இலாபம் அடிக்கிறார். முதலாளி—மூலதனம் போட்டதாலேயே தொழிலாளரின் முதுகெலும்பை முறித்துப் பொருளைக் குவிக்கிறார். மிட்டாதாரர், உழவர் உழைப்பிலே கிடைத்த உணவுப் பொருளைப் பதுக்கி வைத்துப் பெரும் பொருள் திரட்டுகிறார். 'ஆபீசர்' இலஞ்சம் வாங்கியே சுக போக வாழ்வு நடத்துகிறார். அர்ச்சகர், ஆண்டவ

னுக்கென்று சொல்லி வாங்கும் பொருள்களைக் கொண்டுதான் 'தாசி'யையும் திருப்திப்படுத்துகிறார். மடாதிபதி, மக்கள் கண்ணிலும் கருத்திலும் விபூதியைத் தூவியே, அர்த்த நாரீசுவர வடிவை அர்த்தராத்திரியிலே எய்துகிறார். இவ்வளவும், இன்னும் பலவும் அவர்கள் பெற்றுள்ள தகுதியாலும், திறமையாலுமே நடைபெறுகின்றன. 'தகுதி திறமை' என்பதற்காகவே இவைகளை அனுமதித்துக்கொண்டிருப்பதாக எந்த அரசாங்கமும் சொல்ல முடியாது. அப்படிச் சொன்னாலோ அந்த அரசாங்கம் பின்னும் நெடுநாள் நிலைக்க முடியாது. எனவேதான், பல சமூகங்கள் தாழவும் சில சமூகங்களே உயரவுமான நிலைமை எதன் பெயரால் நிலைநாட்டப்பட்டாலும் அதைத் தகர்த்தெறிந்து **சம சந்தர்ப்பம்** கிடைக்கும்படிச் செய்வதே, அரசாங்கத்தின் முக்கியவான முதல் கடமையாகின்றது.

இத் தகுதியும் திறமையும் கவனிக்கப்படாமல், சமசந்தர்ப்பம் தந்து நம்யூனல் ஜி. ஓ. படி மாணவர்களைச்சேர்த்ததால், என்ஜினியரோ, டாக்டரோ ஆனபின்பு, அவர்கள் கூறும் '**தகுதி**' இல்லாததால், எத்தனை பேர் தமது கடமையைச் செய்யவில்லை என்றாவது கூறமுடியுமா? அதன்படி வந்த என்ஜினியர் கட்டிய பாலங்களிலே எத்தனை பழுதாகிவிட்டன? அந்த டாக்டர்கள் கொடுத்த மருந்திலே எத்தனை பேர் பிழைக்கவில்லை? என்றாவது அத்திறமைசாலிகள் கணக்குக் காட்டுவார்களா?

**சக்தியும் சூழ்நிலையும்**

மற்றும் 'சமசந்தர்ப்பம்' என்றால் ஏன் சாதியைப் பார்க்கவேண்டும்? மார்க்கைப் பார்த்தால் தானே ஒவ்வொருவருக்கும் சமசந்தர்ப்பந் தந்தது ஆகும் என்றும் வாதிடுகின்றனர் சிலர்.

சமசந்தர்ப்பம் என்றால், ஆளுக்கு ஆள் என்றுமட்டும் அர்த்தமல்ல. ஓட்டப் பந்தயமானாலும் குதிரைப் பந்தயமானாலும்கூட, ஆளுக்குத் தக்கபடி, குதிரைக்குத் தக்கபடி, பலஹீனம் உடையவர்கட்குச் சலுகை காட்டி, சற்று முன்னே நிறுத்துவதுதான் வழக்கம். அதற்குப் பெயர் தான் சந்தர்ப்பம். அதைப் போன்றேதான், சமூகத்திற்குச் சமூகம் வேறுபாடு உள்ள காரணத்தால் பிற்பட்ட சமூகங்களைச் சார்ந்தவர்கட்கு, அந்தச் சமூகங்களின் பலமற்றதன்மை அவர்களைப் பாதிக்காமல் சலுகை காட்டவேண்டியது அவசியமாகிறது. இல்லையானால் அவர்களுக்கு உயர் வகுப்பாரோடு சமசந்தர்ப்பம் கிடைப்பதில்லை.

இன்றைய சமூகத்தில் எந்த ஒரு மனிதனும், அவனுடைய வகுப்பை சாதியைவிட்டு அறவே நீங்கியவனாக இல்லை. எவனும் மனத்தால் நீங்கினாலும்கூடச் சூழ்நிலைக்கு ஆட்பட்டே தீருகிறான். அதிலும் 'தகுதி' பெற்றவர்களோ, அந்த சாதி, வகுப்பின் உருவாகவே உலவித்தான் அத்தகுதியைப் பெற்றுள்ளனர். மற்றவர்களும், அவரவர் பிறந்து வளர்ந்த சாதி—சூழ்நிலையை ஒட்டியே தான் அந்தந்தத் தகுதியைப் பெற்றுள்ளனர். எவருமே அவரவர் சாதியை, சூழ்நிலையை ஒட்டியல்லாது தனியாக மனிதர்கள் என்ற முறையிலே மட்டுமல்ல, 'தகுதி'—'திறமை' பெற்றிருப்பது. இந்நாட்டில்தான் மக்கள் (மனிதர்களாக) இல்லையே; சாதிகளாகத்தானே உள்ளனர். எனில் சாதிகளுக்கிடையில் தானே சமசந்தர்ப்பம் கிடைக்கச் செய்யவேண்டும், உண்மையில் சமசந்தர்ப்பம் நிலவவேண்டுமானால்.

இங்கு இத்தகுதியைப் பெறக் காரணமாக இருப்பது, தனிப்பட்ட ஆட்களின் திறமையை

விட, சாதிகளின், சூழ்நிலையின் ஏற்றத்தாழ்வைப் பொருத்தே அமைகின்ற காரணத்தால், ஒரு நாட்டார் என்பதற்காகச் சமசந்தர்ப்பம் ஆட்களிடை வழங்குவது, ஒரே காட்டில் உள்ளவை என்பதற்காகப் புலியையும் மானையும், ஒரே நீர்த்துறையில் தண்ணீர் குடிக்க விடுவதைப் போலவே யாகும். புலியும் மானும் ஒரே நீர்த் துறையிலும் பருகி, வலிவற்ற விலங்காகிய மானும் கரையேற வேண்டுமானால், இடையே உயரமான இருப்புவேலி போடுவது அவசியமாவதைப் போலத்தான் வகுப்பு வீதாச்சாரம் செய்யப்பட்டுள்ளது

உண்மையில் சமசந்தர்ப்பம் என்பது தனிப்பட்டவர்களுக் கிடையில் சமசந்தர்ப்பம், சூழ்நிலையால் வேறுபட்ட வகுப்புக்களுக் கிடையில் சமசந்தர்ப்பம், தராதரத்தில் வேறுபட்ட மாவட்டங்களுக்கிடையில் சமசந்தர்ப்பம் என்று எல்லாவற்றையும் சேர்த்துக் குறிப்பிடுவதேயாகும்.

ஒவ்வொரு வட்டாரத்திலிருந்தும் வருகின்ற பல வகுப்பாருக்கும், அந்தந்த வகுப்பில் அதிக தகுதியுடையவர்கட்கு இடம் கிடைக்கும்படிச் செய்வதே சமசந்தர்ப்பமளிப்பதாகும்.

இவ்வாறு கவனிக்காவிடில்—சென்னை மாகாணத்திலேயே தஞ்சை திருச்சி மாவட்டத்தினர் பெறுகின்ற இடத்தில் நான்கிலே ஒரு பங்குகூட, இராயலசீமா, இராமநாதபுரம் போன்ற பிற்போக்கு நிலைக்கு ஆளாகிவிட்ட மாவட்டத்தினர் பெறமுடியாதநிலை, மேலும் பின்னால் தள்ளப்படும் நிலை ஏற்படும் என்பதை யாரும் மறுக்கத் துணியார்.

இனி, சமசந்தர்ப்பம் அளிப்பது என்பது இப்படிக் கட்டுப்பாடுகள் செய்வதல்ல என்றும், தகுதி

யுடையவரே தழைக்க (Survival of the fittest) இடம் தருவதே முறையென்றும் சொல்லப்படு மானல், யார் யார் எங்கெந்த விதத்தில் 'தகுதி' பெற்றுள்ளனரோ அந்தந்த முறையைக் கொண்டு வாழ வழிதேடிக்கொள்ள முயல்வர். மூளையினல் 'தகுதி' பெற்றுள்ளவர்கள் வாழ்வு பெறுவது உரிமையாதல் போலவே, உடலினல் 'தகுதி' பெற்றுள்ளவர்கள் அதைக் காட்டிலும் வாழ்வு பெறுவதும் உரிமையேயாகும், அறிவு பலம் சிலருக்கு என்ருல் ஆள்பலம் சிலருக்கு; தந்திரத் 'தகுதி' சிலருக்கு என்ருல் தோள் வலி பலருக்கு என்ற எண்ணமும், அதைக் கொண்டு வாழ்வு தேடும் முறையும் பிறக்கும். அந்நிலை, ஜனநாயகத்திற்கு, குடியரசுக்குப் பொருந்தாது. எனவேதான் 'சம சந்தர்ப்பம்' என்ற சொல்லைக் கொண்டு சமூக நீதியை வீழ்த்துவது ஆபத்து என்பதை 'அவர்கள்' உட்பட அனைவரும் உணர வேண்டுகிருேம்.

**காரணம் என்ன ?**

மற்றும், இன்றுள்ள நிலைப்படி, 'தகுதியை' மட்டுமே பார்த்தால், அதில் உயர் தகுதி பெற்றுள்ளவர்களில், நூற்றுக்கு மூன்றுக்கும் குறைவாக உள்ள பார்ப்பாரே நூற்றுக்கு அறுபது எழுபது பேர்களாக இருப்பதற்குத்தான் காரணம் என்ன?

எப்படி இந்த ஒரே வகுப்பார் மட்டும் அவ்வளவு அதிக 'தகுதி' பெற முடிந்தது ?

பிரம்மனின் முகத்தில் தோன்றியவர் என்பதாலா? பூதேவர் வர்க்கம் என்பதாலா? வியாசர், வசிஷ்டர், வால்மீகி பரம்பரை என்பதாலா? முப்புரி தரித்த மார்பினர் என்பதாலா? மஞ்சள் நிற மேனியினர் என்பதாலா? நான்கு வேதங்களைப்

பெற்றவர் என்பதாலா? பதினெண் புராணங்களைக் கட்டியவர் என்பதாலா? பாரத இராமாயணத்தைப் போற்றுபவர் என்பதாலா? சமஸ்கிருதத்தைத் தாய்மொழியாகக் கொண்டவர் என்பதாலா? புரோகிதத்தைத் தொழிலாகக் கொண்டவர் என்பதாலா? வர்ணாஸ்ரம (அ) தர்மத்தைத் தோற்றுவித்து, சாதிக்கொரு தொழிலென மக்களை ஒப்புக்கொள்ள வைத்து, அதை ஒப்பாமல் மக்கள் புரட்சி எண்ணம் கொள்ளாமல் இருக்க மூடநம்பிக்கைகளையும் பொய்க்கதைகளையும் புகுத்தி அறிவை அடிமைப் படுத்தி, எவரேனும் அதற்கு மாறாகப் புரட்சிசெய்தால் அடியோடு ஒழிக்க மனு (அ) நீதியை வகுத்து அதை அரசுகளெல்லாம் ஏற்று நடக்கச் செய்த காரணத்தாலல்லவா, அந்நாள் எதையோ நெட்டுரு செய்யக் கிடைத்த வாய்ப்பும் வசதியும் இன்றளவும் தொடர்ந்து பெருகி, அவர்களின் தகுதியை உயர்த்தக் காரணமாகியுள்ளது.

இந்தப் பரம்பரை வாய்ப்பும் காரணமல்ல, இன்றுள்ள சூழ்நிலையும் காரணமல்ல வெனில், பிராமணர்களின்—பொதுவான 'தகுதி' எப்படி உயர முடிந்தது? "பிராமண சாதியின் மகத்துவம்" என்று பதில் சொல்ல 'அவர்கள்' முன்வந்தால்—நமக்குத் தெரியுமே—உணவு விடுதியில் தட்டுக் கழுவும் பார்ப்பனர் முதல் பைத்தியம் பிடித்துத் திரியும் பார்ப்பனர் வரை பலரை. அவர்களுக்கு ஏன் "அந்த பிராமண ஜாதியில் பிறந்த தால் உள்ள மகத்துவம்" இல்லாமற் போயிற்று? எனவே அவர்களின் 'தகுதி' பிராமணப் பிறவியாலல்ல என்பதும், பரம்பரையாக அனுபவித்த வாய்ப்புக்களாலும் இன்று பெற்றுள்ள வாய்ப்புக்களாலுமே அமைகிறது என்பதும் மறுக்கமுடியாதனவாகும்.

அப்படியானல், மற்றவர்களுக்கு இன்று வாய்ப்பளிக்க மறுக்கிருர்கள் என்பது மட்டுமல்ல, பரம்பரையாகவே, 'அவர்களின்' தர்மத்தின் பெயரால் நீதியின் பெயரால், மறுத்து வந்திருக்கிருர்கள். மற்ற வகுப்பார்கட்கு அறிவுக்குச் சிறிதேனும் வேலையுள்ள படிப்புத் துறையில்—சமசந்தர்ப்பம் அளிக்காமல் செய்திருக்கிருர்கள் என்பது மட்டுமல்ல, சந்தர்ப்பமே இல்லாமல், இடமே வைக்காமல் செய்துவந்துதான் இன்று 'இத் தகுதியைப்' பெற்றுள்ளனர். இதை நிறைவேற்றித் தந்த சமூகச் சட்டத்துக்குப் பெயர்தான் வர்ணஸ்ரமம்; நிலநாட்டிய நீதிக்குப் பெயர்தான் மனுதர்மம்; அதைத் தாங்கி நின்ற இனத்திற்குப் பெயர்தான் 'ஆரியம்'; அதன் பலனை உறுஞ்சியவர்கட்குப் பெயர்தான் 'பிராமணர்கள்.' அதனுல் வஞ்சிக்கப்பட்டு துரோக மிழைக்கப் பட்டவர்கள்தான், 'இதராள்' (சூத்திரர் முதலியோர்.)

சமூகத் துரோகம் இவ்விதம் கல்வி மணம் கூட மற்றவர்கள் நுகராதபடி கவனித்துக் கொண்ட உத்தமர்களின் வழிவந்தவர்கள்தான், மக்கட் சமுதாயத்துக்குப் பெருந் துரோகம் இழைத்தவர்கள்தான், அந்த வரலாற்றை மக்கள் அறியாத காரணத்தால், அந்தப் பெருங் கொடுமைக்கு எந்தச் சிறு தண்டனையும் பெறுமுன்பே 'சமசந்தர்ப்பம்' குறித்து வாய்கிழியக் கத்துகின்றனர்.

'அவர்கள்' செய்த சமூக துரோகத்தை விசாரித்துத் தீர்ப்பு வழங்கக் கூடிய மக்கள் 'நீதி மன்றம்' ஏதேனும் இருக்குமானல், "இன்னும் நூறு ஆண்டுகளுக்கேனும் பார்ப்பனர்கள், எந்தப் புத்தகத்தையும் கையினுல் கூடத் தொடக் கூடாது. தொட்டால் தண்டனை. மனுநீதியில் சூத்திரருக்கு வழங்கப்பட்டிருப்பதை ஒப்ப வழங்கப்படும்."

என்றுதான் தீர்ப்பளிக்கும் என எதிர்பார்க்க இடமுண்டு.

ஆனல், 'அவர்கள்' பெற்ற இலாபமும் பயனும், மற்றவர்கள் அடைந்த கொடுமையும் பயமும் ஒரு புறமிருக்க, அக் கொடுமை இன்னும் களையப் படாமல் இருக்கும் போதே, அடிபட்டு மூர்ச்சித்தவன் முகத்தில் தண்ணீர் தெளித்துக் கொண்டிருக்கும் போதே, 'ஆண்டவன் கட்டளை' என்று சொல்லி அவனை அடித்து வீழ்த்தியவன், மறுபடியும் 'தகுதி' என்று சொல்லித் தலையிலே கல்லைத் தூக்கிப் போட்டதைப் போன்றுள்ளது இன்றைய நிலை.

அதுமட்டுமன்றி, 'திறமையும் தகுதியும்' மட்டுமே கவனித்திருந்தால், இன்று ஆளவந்தார்கள் அமர்ந்துள்ள ஆட்சிப் பீடத்திலேயெல்லாம் கூட, ஆங்கிலேயரேதான் இருக்க வேண்டும். இது நமது ஆசையல்ல, ஆனல் உண்மை. உரிமையை மதிக்கும் மாண்பு சிறிதேனும் ஆங்கிலேயர்களிடத்தில் இருந்ததால்தான், "ஆயிரம் உண்டிங்கு சாதி எனில், அந்நியர் வந்து புகுவதுதானே நீதி" என்று பதிலுக்குக் கூடக் கேட்காமல், "ஆகஸ்டு 15 ஆட்டம்" நடத்த இடம் தந்து விடைபெற்றுக் கொண்டனர். அவர்கள் விவேகிகளானதால்.

அதுபோன்றே, சகல துறைகளிலும் இடம் பெற்று வாழும் உரிமை, உண்மையிலேயே "தகுதியும் திறமையும்" குறைந்தவர்களானலும், தனித் தனி வகுப்பாக, பிரிவாக, இனமாக உள்ளவரையில், அவர்கள் எவரானலும் அவர்களுக்கு உண்டு. அந்த உரிமையை ஆளவந்தார் யாரானலும் புறக்கணிக்க முடியாது.

ஆப்பிரிக்காவிலே உள்ள இந்தியருக்கும், மலேயாவிலே உள்ள தமிழருக்குங்கூட நீதியின்

படி பார்த்தால் அவ்வுரிமை உண்டு என்றால், தமிழ் நாட்டிலே உள்ள தமிழருக்கு, திராவிடத்திலே உள்ள திராவிடருக்குத், தாய்நாட்டிலே உள்ள சொந்த மக்களுக்கு எப்படி அந்த உரிமை இல்லாமற் போய்விடும்? வேண்டுமானால், அதன் னாட்டிற்கு உரியரல்லாதாராக, எங்கெங்கிருந்தோ வந்தவர்களாக வரலாற்றால் தெரிவிக்கப்படுகின்றவர்கட்கு அந்த உரிமை இல்லாமற் போகலாம்.

அதற்கு வேண்டுமானால் உதாரணமும் காட்டலாகும்.



அந்தநிலை இங்கு வேண்டாம்

ஒரு காலத்தில் 'யூதர்கள்' என்ற ஒரு கூட்டத்தார் ஐரோப்பாவில் உள்ள ஒவ்வொரு நாட்டிலேயும் பரவலாயினர். ஆதிக்கமும் செலுத்தத் தொடங்கினர். பல துறைகளையும் கைப்பற்றிக் கொண்டனர். இந்நிலை ஜெர்மன் நாட்டிலே உச்ச நிலை யடைந்தது.

புகழ் மிக்க டாக்டரானாலும், வக்கீலானாலும், பெரும் பொருள் படைத்த வியாபாரியானாலும், பாங்கரானாலும், மிக்க சம்பளம் பெறும் பேராசிரியரானாலும் உத்தியோகஸ்தரானாலும், எப்பக்கம் திரும்பினாலும், எவரிடம் தயவுக்குச் செல்ல நேரிட்டாலும் — எல்லாம் யூதர்களாகவே இருந்தனர். ஏதோ ஒருவித தகுதியும் திறமையும் 'இன' ஒற்றுமையும் கொண்டே அவர்கள் அந்த உயர்நிலை பெற்றிருந்தனர். ஆனால் அந்தத் தகுதியேதான் அவர்கள் ஆதிக்கம் பெறக் காரணமானதுபோலவே, அந் நாட்டிலே ஒரு ஹிட்லரைத் தோற்றுவிக்கவும், மக்கள் உரிமை உணர்வு பெற்றவுடன், யூதர்களை அந்நாட்டைவிட்டே விரட்டியடிக்கவும் காரணமாயிற்று.

இதைப் போன்றே இன்னுஞ் சில நாடுகளிலும் நிகழ்ந்துள்ளன என்பது மட்டுமல்ல, ஆரிய இனத்தின் தகுதியிலும் திறமையிலும் உயர்விலுமே நம்பிக்கை கொண்டு உலகையே நடுங்க வைத்த 'ஹிட்லரும்'கூட கூண்டோடு அழியத்தான் நேரிட்டது என்பதைத் தகுதியும் திறமையும் கொண்டோர் மறந்திருக்க முடியாது.

ஆனல் விரட்டப்பட்ட யூதர்கள்கூட, அந்நாட்டிலே செய்யாத அளவு 'தகுதி-திறமை' வாதம் இங்கு செய்யப்படுகின்றது. ஆனல் அதுவேதான், நீறுபூத்த நெருப்பைப்போலிருந்த மற்ற வகுப்பாரின் உரிமை உணர்வை ஊதிவைப்பதாகவே முடியும் என்பதை 'அவர்கள்' உணரவேண்டும். தங்களுடைய நாடு எது, எங்கிருந்து வந்தோம் என்பதைத் தேடவேண்டிய தொல்லை ஏற்படக்கூடாது என்ருல், சமூக நிலையை ஒப்புக்கொண்டு சமசந்தர்ப்பம் வழங்கவும், தாழ்ந்தவர்களை உயர்த்தவும், தாங்களும் மற்றவர்களைப் போல பாடுபடவும், 'சாதி' எண்ணத்தை மனத்திலிருந்து நீக்கவும், தமிழ்ப் பண்பினராக மாறவும் முன்வரவேண்டும். அதுதான் காலத்தின் வேகத்தை உணரும் தகுதியும் மக்களின் உள்ளத்தை உணரும் திறமையும் 'அவர்களிடம்' சிறிதேனும் இருக்கின்றது என்பதற்கு அடையாளமாகும்.

கல்விக்கூடம், உரிமைப்பயிர் வளரும் வயல் அறிவுக் கழனி, அனைவருக்கும் பொதுவானது என்ற உண்மையை மறந்து, அதில் இடம்பெற அடிப்படையான தகுதி, குறைந்த அளவினதாக இருந்தால் போதும் என்பதைப் புறக்கணித்து உயர் 'தகுதி'யுடையவர்கள் என்று சொல்லப்படுபவர்கட்கு இடம் பிடித்துத் தருவதாகச் சொல்லிப், பார்ப்பனருக்கு மேலும் இடங்கிடைக்க வழி

செய்தனர். அதனால், அக்கல்லூரிகளைப் போட்டிப் பந்தயக் கூடமாக, சகுனியின் சூது மண்டபமாக மாற்றினர்.

## ஜனநாயக வெற்றி

நல்லவேளையாக அடுத்த ஆண்டு நடைபெற்ற காங்கிரஸ் சட்டசபைக் கட்சித் தேர்தலில், பிரகாசம் காரு தோல்வியடைந்தார். அவரோடு 'தகுதி-திறமை' வாதமும் தோல்வியடைந்து ஜனநாயகம், வெற்றி பெற்றது. காங்கிரஸ் பார்ப்பனரல்லாதாரும் பிரகாசம் மந்திரிசபையின் நடவடிக்கைகளினால்தான், கம்யூனல் ஜி. ஓ. வைக் குறித்தும், அதன் பயன் குறித்தும் ஓரளவேனும் தெரிந்துகொண்டு அதை ஆதரிக்க முன் வரலாயினர். எனவேதான், எதிர்பாராத விதத்தில் அதுவரையில் பதவி ஆசையின்றி ஒதுங்கி இருந்த ஓமாந்தூர் இராமசாமி (ரெட்டியார்) அவர்கள் தெரிந்தெடுக்கப்பட்டார்.

அதற்கு மாறாகப் பிரகாசம் மட்டும் மறுபடியும் வந்திருந்தால், அவரே சட்டசபையில் சொல்லியுள்ளபடி "கம்யூனல் ஜி. ஓ."வைக் கொஞ்சம் கொஞ்சமாக ஒழிக்கும் முயற்சியில் இன்னும் பலவற்றைச் செய்ய முயன்றிருப்பார் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை.

1945-ம் ஆண்டில் இருந்தே, பார்ப்பனரல்லாத மக்களிலும் பின்னணியிலுள்ள வகுப்பார் தங்களுடைய உரிமைகளை உணர்ந்து அவைகள் காக்கப்படவேண்டும் எனக் கிளர்ச்சி செய்து வருவாராயினர். பார்ப்பனரல்லாதவருள் சரிபாதி அளவுள்ள பின்னணி பார்ப்பனரல்லாதார் (Backward Non-Brahmins) அரசாங்க உத்தியோக மண்டலம், முதலியகல்வித் துறை, யாவற்றிலும் தங்க

ளுக்கு நியாயமாக உரியபங்கினும் மிகக் குறைந்த அளவே இடம்பெற்றிருந்தனர். 'கம்யூனல் ஜி. ஓ' வின்படி — பார்ப்பனரல்லாதாருக்கு ஒதுக்கப் பட்ட இடங்களில், முன்னணி பார்ப்பனரல்லா தாரே இடம் பெறவும் பின்னணியிலுள்ள வகுப் பார் கைவிடவுமே நேர்ந்தது. இதனாலேயே அவர் கள், கம்யூனல் ஜி. ஒ. வைத் திருத்தி, தங்களுக் கென இடம் ஒதுக்கும்படிக் கேட்டு வந்தனர்.

பிரகாசம் முதல் மந்திரியாக இருந்தபோது, கம்யூனல் ஜி. ஒ. வை, (நாளடைவில் கொல்லும் விதத்தில்) திருத்த முயற்சிப்பதாக அவர் கூறி யது, பின்னணி வகுப்பாரின் கிளர்ச்சிக்கு மேலும் ஆக்கந்தந்தது.

பார்ப்பனர்கள்--பிராமண சேவா சங்க மாநாடு கள் மூலம், இந்தக் கம்யூனல் ஜி. ஒ. வை எப்படி யேனும் ஒழித்துக்கட்ட வேண்டும் என்பதை, வெளிப்படையாகப் பேசியும், தந்திரமாகச் செயல் புரியத் தூண்டியும் வருவாராயினர்.

திராவிடர் கழகம் முதலிய பார்ப்பனரல்லாத இயக்கத்தார், பார்ப்பனரல்லாதாருக்கும், பின் னணி பார்ப்பனரல்லாதாருக்கும் மக்கள்தொகைப் படியே உத்தியோகங்களில் இடம் கிடைக்கச் செய்யவேண்டும் எனவும், 'தகுதி-திறமை' பேரால், பொறிஇயல், மருத்துவக் கல்லூரிகளில் இடம் ஒதுக்கும் சூழ்ச்சியை நீக்கவேண்டும் எனவும் அர சாங்கத்தை வற்புறுத்தி வந்தனர்.

பின்னணி வகுப்பாரோ, வன்னிய குலத்தினர் முதலியோர் ஆங்காங்கே ஒன்று திரண்டு— பலம் பெற்று, எந்த அரசியல் கட்சியானாலும், தமது வகுப்புரிமைக்காக அதனை எதிர்த்துத் தேர் தலிலே போட்டியிடுமளவுக்குமுன் வந்தனர். பல வெற்றிகளையும் பெற்றனர்.

## ஓமந்தூரார் ஆட்சியில்

இந்நிலையில்தான் ஓமந்தூர் இராமசாமிரெட்டியார் அவர்களின் மந்திரிசபை (1947-ல்) ஏற்பட்டது. அதற்கு முன்பிருந்த மந்திரிசபை செய்துவிட்டும்-செய்யத் தொடங்விட்டும் போன செயல்களால் ஏற்பட்ட பாதகத்தைத் திருத்த வேண்டிய கடமையும் புதிய மந்திரிசபைக்கே ஏற்பட்டது. காங்கிரஸ் இயக்கப் பார்ப்பனரல்லாதாரும்—கம்யூனல் ஜி. ஒ. வின் பயனை உணர்ந்து ஆதரிப்பாராயினர். 'தகுதி—திறமை' என்ற பேச்சு யாருக்காக என்பதையும் கண்டுகொண்டனர். எனவேதான், ஓமந்தூர் மந்திரிசபை காலத்தில் 'தகுதி'க்காக என மருத்துவப் பொறி இயல் கல்லூரிகளில் 20% இடம் ஒதுக்கிய முறை கைவிடப்பட்டது. மேலும் கம்யூனல் ஜி. ஒ. வினல் அளிக்கப்பட்ட வகுப்பு விகிதாசாரத்தில் பின்னணி பார்ப்பனர் அல்லாத வகுப்பாருக்கும் உரிமை இருக்கும்படி திருத்த முன் வந்தார்.

## அறிஞர் முத்தையா அறிக்கை.

அவ்வமயத்தில், ஆளவந்தாரும் ஆளப்படுவாரும் ஒரு தெளிவான நல்ல முடிவிற்கு வரும் பொருட்டு, கம்யூனல் ஜி. ஒ. விற்குத் தோற்றமளித்த பெரியார் எஸ். முத்தையா அவர்கள், ஓர் அறிக்கை வெளியிட்டார்கள்.

அவ்வறிக்கையே இது :—

முன்னாள் முதலமைச்சர் சட்டசபையில் தெரிவித்த வண்ணம் வகுப்புவாரி உத்தியோக நியமன உத்தரவை ரத்து செய்து விடும் எண்ணத்தைக் கைவிட்டுப் பல திறப்பட்ட வகுப்பினருக்கும் (சர்விஸ்களிலுள்ள) சர்க்கார் உத்தியோகங்களிலுள்ள விகிதாசாரத்தைத் திருத்தமைக்க இன்றைய சர்க்

கார் திட்டமிட்டிருப்பது கண்டு, மகிழ்ச்சியடைகிறேன், எல்லா வகுப்பினருக்கும் சர்க்கார் சர்விஸ்களில் தகுந்த பிரதி நிதித்துவம் அளிக்கப்பட வேண்டுமென்பது நீண்டகாலமாகவே உணரப்பட்டு வந்திருக்கிறது. சென்னையில் அவ்வுணர்ச்சிக்கு உருவங் கொடுக்கப்பட்டது. அவ்வுத்தரவு முக்கிய வகுப்புகளுக்கான பதவி எண்ணிக்கையையும், வரிசை முறையையும் நிர்ணயித்தது. இந்திய சர்க்காரும் இதனைப் பின்பற்றி இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கு மிடையே விகிதாசாரத்தை நிர்ணயித்தனர். திருவாங்கூர், கொச்சி சமஸ்தானங்களும் இதனை ஏற்று நடத்தின.

இந்திய சர்க்கார் ஆக்டிலுள்ள இவ்வுத்தரவின் தத்துவத்தை பார்லிமெண்டும் ஏற்றுக்கொண்டது. 255 (2) 266 (4) செக்ஷன் பிரிவுகளும், சர்க்கார் பொது சர்விஸ் கமிஷன்களும் இவ்வுத்தரவை அமுலுக்குக் கொண்டு வரும்படியாகப் பணிக்கப்பட்டுள்ளன.

1928-ல் நிர்ணயித்த விகிதாச்சார வரிசை முறையும் முடிவானவையல்ல. காலப்போக்குக் கேற்ப அவ்வப்போது மாற்றிக்கொள்ளும் வகையிலேயே அமைக்கப்பட்டன. முந்திய வகுப்புகளின் மக்கள் தொகைக்கேற்பவே விகிதாசாரத்தை நிர்ணயிக்கவேண்டியது முறையாகும். ஆனல், பல காரணங்களை முன்னிட்டு இம்முறை 1928-ல் கண்டிதமாகப் பின்பற்றப்படவில்லை. மிக மிகக் குறைவான பிரதிநிதித்துவம் பெற்றுள்ள வகுப்புகளுக்கே முக்கியத்துவம் கொடுக்கப்பட வேண்டுமெனக் கருதப்பட்டது.

போதுமான எண்ணிக்கையுள்ள தேர்ச்சி பெற்றோர் இல்லாத வகுப்புக்களுக்கு (மக்கள் தொகையைப் பார்த்து) பிரதிநிதித்துவம் அளித்து

விடுவதில் அர்த்தமில்லையென உணரப்பட்டது. உத்தரவுகளிலேயே இப்பிரதிநிதித்துவமிருக்குமே தவிர அமுலுக்குக் கொண்டுவர வாய்ப்பிருக்காது என உணரப்பட்டது. சர்க்கார் சர்விஸ்களில் நிறைந்த ஆதிக்கம் செலுத்தி அனுபவித்து வந்த வகுப்பொன்றின் விகிதாச்சாரத்தைக் கட்டுப் படுத்தி அதற்குத் திடீர் தாக்குதல் ஏற்படுத்திவிடக் கூடாதென்றும் கருதப் பட்டது. மற்ற வகுப்பி னர் தங்கள் தங்கள் விகிதாச்சாரத்தைப் பெற்று சமநிலைக்குவரும் அந்த,—ஆதிக்கம் செலுத்திய வகுப்புக்கு சர்விஸ்களில் பங்கு கொடுக்கக் கூடா தென்ற தீவிர எண்ணமுடையோருமிருந்த கைகளி லேயே ஏற்பட்ட சமரசத் தன்மை அது. இன் றைய நிலை 1928-க்குப் பிறகு இப்பொழுது நிலை மையில் மாற்றமேற்பட்டிருக்கிறது. தற்போதைய சந்தர்ப்பத்துக்கேற்ப மாறுதல் செய்யவேண்டிய அவசிய மேற்பட்டிருக்கிறது.

பார்ப்பனரல்லாதார், தாழ்த்தப் பட்டோர், முஸ்லிம்கள், பார்ப்பனர், ஆங்கிலோ—இந்தியர் உள்ளிட்ட கிறிஸ்துவர்கள் தொகை விகிதாச்சா ரம் சுமாராக 17:4:2:1:1 ஆகும்.

பார்ப்பனரல்லாதா ரென்போரில் தாழ்த்தப் பட்டோரைத் தவிர்த்து பிற்பட்ட வகுப்பினரனை வரும் அடங்குவர். பிற்பட்ட வகுப்பினர் பிராமணரல்லா தார் என உட்பிரிவு வகுக்கவேண்டியது முறையேயாகும். இது வரை அளிக்கப்பட்டுவந்த முக்கியத்துவங்கள் ரத்து செய்யப்பட்டு, ஒவ்வொரு வகுப்பும் தனது மக்கள் தொகைக்கேற்ப விகிதாச்சாரம் பெற்றுக் கொள்ளும் வகையில் மாற்றங்கள் செய்யவேண் டிய காலம் நெருங்கிவிட்டது. இந்திய சர்க்கார் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு இப்போதுள்ள 8 1/3 சத விகித விகிதாச்சாரத்துக்குப் பதிலாக

$12\frac{1}{2}$ சதமாக்கியுள்ளனர்; ஏற்றுக்கொள்ள வேண்டியதே. எல்லா அம்சங்களையும் நன்கு சீர்தூக்கிப் பார்த்து, பரிசீலனை செய்து அதன் பின்னரே விகிதாச்சாரத்தையும் வரிசை முறையினையும் நிர்ணயிக்கவேண்டும். தேவையானல். வகுப்புக்கள் பெற்றுள்ள விகிதாச்சார நிலைமைக்கேற்ப, பலதிறப்பட்ட சர்விஸ்களுக்கும் பல்வகையான விகிதாசாரத்தை நிர்ணயித்துக் கொள்ளலாம்.

மேற்கூறிய விகிதாசாரத்துக்குப் பொருத்தமாக, எண்ணிக்கையை 24-க்குப் பதிலாக 25 ஆக்கிக்கொள்ளலாம். விகிதாசாரத்தையும் வரிசை முறையினையும் ஐந்தாண்டுக் கொருதடவை பரிசீலனை செய்து மாற்றலாம். ஆனல் இதர வகுப்புகளின் நியாயமான உரிமைகளை நிராகரித்துவிட்டுப் பிறிதொரு வகுப்புக்கு அதற்கான விகிதாச்சாரத்துக்கு மேல் அதிகமான சலுமையை அவசியமின்றிக் காட்டுதல் கூடாது.

இந்நாட்களில் ‘சுதந்தரா’ போன்ற பார்ப்பன ஏடுகள், ‘தகுதி, திறமை’ என்ற பெயரால் நடைபெற்று வந்த சூழ்ச்சியை ஒழித்துக் கட்டிய ஓமந்தூர் இராமசாமியின் மந்திரிசபை மீது விதவிதமாக உறுமத் தொடங்கின. பார்ப்பனப் பிரமுகர்கள், இந்த மந்திரி சபையைத் தூற்றுவதையே, தமது ‘சந்தியா வந்தனமாக’—‘காயத்திரியாகக்’ கொண்டனர். இதனல்தான், ஓமந்தூர் மந்திரி சபையுங்கூட, இந்தக் கம்யூனல் ஜி.ஓ. வை, நியாயம் என்றுதாம் கருதிய அளவுக்குத் திருத்தி அமைக்க இயலாது போயிற்று.

எனினும், பின்னணிப் பார்ப்பனரல்லாதாருக்குப் பாதுகாப்பு அளிக்கவும், பெரும்பான்மையான மக்களின் குறையைச் திறிதளவேனும் களை

யவும், 'கம்யூனல் ஜி. ஒ.'வின் வகுப்பு விகிதாச் சாரம் தவிர்க்கமுடியாத நிலையில் திருத்தியமைக் கப்பட்டது.

திருத்தத்தில், மொத்த பதவிகள் 12 என்பதற் குப் பதில் 14 என்று கொள்ளப்பட்டு அந்த 14 பதவிகளும்,

| | |
|---|---|
| பார்ப்பனரல்லாதாருக்கு | 6 |
| பின்னனிப் பார்பனரல்லாதாருக்கு | 2 |
| பார்ப்பனர்கட்கு | 2 |
| ஆதித் திராவிடர்கட்கு | 2 |
| முஸ்லீம்களுக்கு | 1 |
| கிருஸ்தவர்கட்கு (ஆங்கிலோ இந்தியர் உள்பட) | 1 |

என்ற விகிதத்தில் பங்கிட்டு அளிக்கப் பட்டன.

இந்த விகிதாச்சாரமும் பல வகுப்புக்களையும் சார்ந்த மக்கள் தொகை விகிதப்படி அமைய வில்லை. பார்ப்பனர்கள் தங்கள் உரிமைக்கு மேல் பல பல மடங்காகப் பெற்றிருந்த விகிதத்தைக் குறைத்து அவர்கள் ஆதிக்கம் மேலும் வளரு வதைத் தடுக்கவும் இதில் வழிசெய்யப்படவில்லை.

இத்திருத்தம், வகுப்பு விகிதாச்சார முறை யைச் சிறிது மாற்றியமைத்த போதிலும், 'கம்யூ னல்ஜி. ஓ'வின் அடிப்படைக் கொள்கையைக்கூட அதுவரை ஏற்றுக்கொள்ளாத காங்கிரஸ் கட்சி, கட்சிக்குள்ளேயே பார்ப்பனர்களின் பலமான எதிர்ப்பு இருந்தபோதிலும், அதனை ஏற்றுக் கொண்டு விட்டதற்குச் சான்ருக அமைந்தது.

பல சமூகங்களின் முன்னேற்றத்திற்கும், உரிமைக்குக்கு ஏற்ற, 'கம்யூனல் ஜி. ஓ.'வினை அவசியமான அளவு திருத்தியமைக்க வேண்டுமென நாட்டின் பெருங்குடி மக்கள் வற்புறுத்தி வந்ததாலேயே, காங்கிரஸ் கட்சி மந்திரி சபை, இந்த முற்போக்குத் திருத்தத்தை எதிர்ப்புக்களுக்கிடையிலேயும் நிறைவேற்ற முன் வந்தது.

**பார்ப்பனரின் பதைப்பு!**

ஆனல் ஆதிக்கவாதிகளோ, இத் திருத்தத்தை முழு பலத்தோடும் எதிர்க்கலானார்கள். 'பிராமண சேவா சங்கங்களும்' அவர்தம் மாநாடுகளும் விரிந்து கட்டித் தோள் தட்டித் தொடைதட்டும் வாயாடிகளின் வம்புமடங்களாயின.

இத்திருத்தம் வருவதற்கு முன்பே, "பழைய ஜஸ்டிஸ் கட்சி"யின் ஆத்மா இன்றைய காங்கிரஸ் மந்திரி சபைக்குள் புகுந்து கொண்டுவிட்டது. என்று 'சுதந்தரா'வும், "வகுப்புவாரி நியாயமான முறையால், திறமையற்றவர்கள் பதவிக்கு வந்துவிடுகின்றனர்' என்று மற்றொரு ஏடும் ஓலமிட்டன. இப்பொழுதோ, தூற்றல் துந்துபி வானளாவிற்று..

"பிராமணர்களுக்கு மட்டும் உத்தியோகமில்லையா? அவர்கள் தகுதி, திறமை பாழாவதா? இது தான் காங்கிரஸ் ஆட்சியா?" என்ற முகாரியில் தொடங்கி, "இந்தக் காங்கிரஸ் ஆட்சியைவிட ஜஸ்டிஸ் கட்சி ஆட்சியியே மேல்," "ஆளுகின்ற இராமசாமிக்கு தாடி ஒன்றுதான் குறைச்சல்" 'வகுப்புச்துவேஷிகளா மந்திரிகளாக இருப்பது?' என்று சபித்திடும் அளவுக்குக் கொக்கரித்தனர்.

1948 மே மாதத்தில் நடைபெற்ற "முற்போக்குப் பார்ப்பனர்கள் மாநாட்டிலே"யே பலர், கடுவிஷம் கக்கினர் "புல்லேந்தும் மரபில் வந்த நாம், சமயம் நேர்ந்தால் வாள் ஏந்தும் திறமையுடையவர்கள் என்பதை நிரூபித்துக் காட்டவேண்டும்" என்றும், "சமயம் நேர்ந்தால் அராபியாவில் 'யூதர்கள்' நடத்தும் செயலை, பிராமணர்கள் இங்கு நடத்திக் காண்பிக்கலாம்" என்றும் தமது இயல்புக்கு மாருக பேசித்தீர்த்தனர். தம்மைத் தாமே—புல்லேந்தும் மரபு என்று ஒப்புக்கொண்டு அதன் பின்னர் 'வாளேந்துவோம்' என்று கூறுவது, 'எப்படியெல்லாம் வாளேந்துவர், என்னவெல்லாம் செய்வர் என்று எண்ணிப் பார்ப்பவர்கட்கு விலா நோகச் சிரிப்புத்தான் வரும். 'யூதர்களைப்போல் இருக்கிறார்களே' என்று மற்றவர்கள் இவர்களை பயத்தோடு காணும் நேரத்தில், தம்மைத்தாமே 'யூதர்' என்று அவர்கள் அழைத்துக்கொண்ட தெளிவற்ற தன்மை, நம்மைக் கைகொட்டி சிரிக்கத்தான் செய்கிறது. என்ருலும், அவர்களின் எதிர்ப்புணர்ச்சி, அந்த அளவு, கரைபுரண்டு வழிந்தோடிக் கொண்டிருந்தது என்பது இதிலிருந்து தெளிவாகின்றது.

உண்மையில், 'கம்யூனல் ஜி ஓ.' வில் செய்யப்பட்ட திருத்தத்தால், பார்ப்பனர் உரிமை ஏதேனும் பறிக்கப்பட்டதா? அநீதி ஏதேனும் இழைக்கப் பட்டதா? என்று எண்ணிப் பாருங்கள்.

'கம்யூனல் ஜி. ஓ.' திருத்தப்படு முன்பும் பின்பும் ஒவ்வொரு வகுப்பும் பெற்ற விகிதாச்சாரப் பங்கு இதுவாகும்.

| வகுப்புக்கள் (பெயர்) | வகுப்பு மக்கள் தொகை விகிதம் (100 க்கு) | கம்யூனல் ஜி. ஒ. திருத்தப்படுமுன் | | கம்யூனல் ஜி. ஒ. திருத்தப்பட்ட பின் | | மக்கள் தொகைப்படி அளிப்பதானல் மொத்தம் 109 (109) பதவிகளில் |
|---|---|---|---|---|---|---|
| | | மொத்தம் 12 பதவிகளில் | நூற்றுக்கு விகிதாசாரம் | மொத்தம் 14 பதவிகளில் | நூற்றுக்கு விகிதாசாரம் | |
| பார்ப்பனர் | 27 | 2 | 17 | 2 | 14 | 3 |
| பா. அல்லாதார் } பின்னணி பா. அ. } | 67.7 | } 5 | 42 | 6 } 8<br>2 } | 43 } 57<br>14 } | 40? } 75<br>35? } |
| ஆதித்திராவிடர் | 16.3 | 1 | 8 | 2 | 14 | 18 |
| முஸ்லீம்கள் | 7.8 | 2 | 17 | 1 | 7 | 9 |
| கிருஸ்தவர்கள் (ஆ. கி. உட்பட) | 3.7 | 2 | 17 | 1 | 7 | 4 |

திருத்தத்திற்குப் பின்பும் மொத்த பதவி களில் 100-க்கு 3-க்கும் குறைவாகவே பெற உரிமையுடைய பார்ப்பனர், 100-க்கு 14-பதவி கள், (உரியதைப்போல் 5-மடங்கு) அளிக்கப்பட்ட னர். திருத்தத்திற்கு முன்போ உரியதைப்போல் 6-மடங்கு அடைந்து வந்தனர். இந்த ஒரு பங்கு குறைக்கப்பட்டதற்கே, ஓயாமல் அழலானுர்கள். உரியதைப்போல் 5-மடங்கு அதிகமாக அளித்தும் வாய்மூடியபாடில்லை.

மற்ற வகுப்பார்களுக்கு அளிக்கப்பட்ட பங்கோ, பார்ப்பனர்களுக்கு அளிக்கப்பட்டதை நோக்க மிகமிகக் குறைவாகவே இருந்தது. பார்ப் பனர்களைவிட மிகுந்த எண்ணிக்கையுள்ள கிருத்த வர்களுக்கோ—பார்ப்பனர்களுக்கு அளிக்கப்பட் டதில் சரிபாதி பங்குதான் அளிக்கப்பட்டது. பார்ப்பனர்களைப்போல் மூன்று மடங்கு எண் ணிக்கையுள்ள முஸ்லீம்களுக்கும் பார்ப்பனர்க ளுக்கு அளித்ததில் பாதிதான். பார்ப்பனர்களைப் போல் ஆறுமடங்கு எண்ணிக்கையுள்ள ஆதித் திராவிடருக்கோ, பார்ப்பனர்களுக்கு அளிக்கப் பட்ட அதே அளவுதான். பார்ப்பனரைப்போல் இருபத்தைந்து மடங்குள்ள பார்ப்பனரல்லாதா ருக்கோ அவர்களுக்கு அளிக்கப்பட்டதைப்போல் நான்கு மடங்குதான் அளிக்கப்பட்டது.

மக்கள் எண்ணிக்கையை அடிப்படையாகக் கொண்டு, பார்ப்பனர் பெற்ற பங்கொடு, மற்ற வகுப்பார் பெற்ற பங்கை ஒப்பிட்டுப் பார்த்தால், ஒவ்வொரு பார்ப்பனரும் மற்ற வகுப்பார் ஒவ் வொருவரையும்விட எவ்வளவுமடங்கு பதவிபெறும் வாய்ப்புப் பெற்றுள்ளனர் என்பது தெளிவாகும்.

பார்ப்பனர் ஒவ்வொருவரும், கிருத்தவரைப் போல் 3-மடங்கும், முஸ்லீம்கள், ஆதித் திராவிடர்

கள், பார்ப்பனரல்லாதார் ஆகியோரைப் போல் 6-மடங்கும் பதவி பெறும் வாய்ப்பு (சந்தர்ப்பம்) அளிக்கப் பட்டனர். பின்னணிப் பார்ப்பனரல்லாதாரோடு மட்டும் ஒப்பிட்டால், ஏறத்தாழ 12-மடங்கு பதவி பெறும் வாய்ப்பு அளிக்கப் பட்டனர்.

இவ்வளவும் எந்நிலையில்? இதற்கு முன்பே அரசாங்க அலுவலகங்களிலெல்லாம் ஆதிக்கம் செலுத்தி வருவதோடு, மற்ற வகுப்பார்கட்கு இடமில்லாமலும், இடம் கிடைத்தாலும் நிலைக்க முடியாமலும் செய்து வருகின்றனர் என்று பொதுமக்கள் உணர்ந்துகொண்ட நிலையில்தான் வழங்கப்பட்டது.

ஆரியச் சிரேட்டர்களுக்கு மட்டும் சத்திரத்துக் கதவு திறக்கப்படுவதைப் போலத்தான், அரசாங்கப் பதவிகட்கான வாயிலும், மற்ற வகுப்பார்கட்குத் திறக்கப்பட்டதைவிட, ஆறுமடங்கு அகலமாகத் திறந்து வைக்கப்பட்டது.

என்றாலும், விருந்துண்ட தடியன், தன் கை வலிவை விருந்தளித்தவரிடத்திலேயே காட்டி மிரட்டுவதைப் போன்ற செயலில், சலுகை பெற்றவர்கள், முறையின்றி நடந்து கொள்ளலானார்கள். "பேராசைக் காரனடா பார்ப்பான்." என்று பாரதி பாடினாரே—அந்தப் பரம்பரைப் பண்பாட்டை இழந்துவிட அவர்கள் என்ன ஏமாளிகளா?

பின்னணியினர் நிலை

மற்றும் இத் திருத்தத்தால், பின்னணிப் பார்ப்பனரல்லாதாருக்குப் போதுமான பயன் விளையவில்லை என்பதற்குச் சட்டசபை நிகழ்ச்சியே சான்று தருகின்றது.

28-2-48 அன்று கூடிய சென்னை சட்டசபையில் "வகுப்பு விகிதாச் சார உத்தரவில்" செய்யப்பட்ட திருத்தத்தைப் பற்றிய கேள்வியைத் தொடங்கிய தோழர். ஆர். வி. சாமிநாதன், எம். எல். ஏ. அவர்கள்,

"பிற்போக்கு வகுப்புக்களுக்கென்று 14-ல் 2 இடங்கள் மட்டும் ஒதுக்கியிருப்பது போதுமானதாகுமா?" என்று கேட்டுள்ளார்.

பதிலளித்த அமைச்சர் சுப்பராயன் அவர்கள், "இடங்கள் ஒதுக்குவதில், கல்வித் தகுதி உட்பட பலவற்றைப் பற்றி ஆலோசனை செய்யப்பட்டன." என்று கூறியுள்ளார். அதை ஒட்டி, தோழர் பரமாநந்த ராயர் எம். எல். ஏ. அவர்கள், "பிற்போக்கு வகுப்பு என்ற பிரிவில் சேர்க்கப்பட்டுள்ள. 147-வகுப்புக்களுக்கு 2 இடங்கள் மட்டுந்தானே ஒதுக்கப்பட்டுள்ளன?' என்று கடாவியுள்ளார்.

அடுத்தாற்போல் தோழர் எம். ஏ. சலாம் எம். எல். ஏ. அவர்கள், 100க்கு 3-பேராக உள்ள பார்ப்பனருக்கு 2-இடங்களும், 100க்கு 8-பேராக உள்ள முஸ்லீம்களுக்கு 1-இடமும் அளிக்கப்பட்டிருப்பது ஏன்? என்று கேட்டுள்ளார்.

"பார்ப்பனர்கள் பரந்த இந்து சமுதாயத்திலுள்ளவர்கள், அத்துடன் தகுதி மிக்க திறமைசாலிகள்" என்று, தம் கட்சியின் தவறை மறந்து, தாம் யார் என்பதையும் மறந்து பதிலத்துள்ளார் அமைச்சர் சுப்பராயன். 'பரந்த சமுதாயத்திலுள்ளவர்கள்' என்று குறிப்பிட்டபோது, அந்தப் பரந்த சமுதாயத்தில் அவர்கள் தனித்தே வாழ்கின்றனர் என்பதையும், மற்ற மக்களை எதன் பெயராலோ அடிமைப் படுத்தி

யுள்ள ஆண்டகைகள் என்பதையும் அவர் மறந்தோ அல்லது மறைத்தோ பேசியிருக்கிறார். என்றாலும் இந்தச் சட்டசபை விவாதத்திலிருந்து, பிற்போக்கு வகுப்பினரின் பரிதாபகரமான நிலைமைக்கு இந்தத் திருத்தத்திலும் பரிகாரம் செய்யப்படவில்லை என்பதையும், மற்ற மக்கள் ஏமாந்த காலத்தில் ஏற்றங்கொண்ட ஆதிக்க வாதிகள், அவர்களின் "தகுதிமிக்க திறமைக்"காகப் பலமடங்கு அதிகமாகப் பதவிபெறும் வாய்ப்பு அளிக்கப்பட்டனர் என்பதையும் கருத்துக் குருடருங்கூடக் கண்டு கொள்ளலாம்.

இந்தத் திருத்தப் பட்ட வடிவில்தான் இன்றையக் 'கம்யூனல் ஜி. ஓ.'—வகுப்பு விகிதாச்சார உத்தரவு உள்ளது. இதன்படியே அரசாங்கப் பதவி அளிக்கும் முறையும், அரசாங்க மருத்துவப் பொறியியல் கல்லூரிகளில் மாணவர்களைச் சேர்க்கும் முறையும் கைக்கொள்ளப் பட்டன.

காங்கிரஸ் பார்ப்பனரல்லாதார் இதை நிலை நாட்டுவதில் உறுதிகொண்டதைப் போலவே, காங்கிரஸ் பார்ப்பனர்கள் இதை ஒழித்துக் கட்டும் துறையில் தீவிரமாக ஈடுபட்டார்கள்.

### தென்னேட்டியார் முயற்சி

1947 ஜூலையிலேயே சென்னை சட்டசபை உறுப்பினரான, ஆந்திர பார்ப்பனர் திரு. தென்னேட்டி விசுவநாதன், எம். எல். ஏ. என்பவர், கம்யூனல் ஜி. ஓ. வினை ஒழித்துவிட ஒரு தீர்மானம் கொண்டு வந்தார்.

" அரசாங்க உத்தியோகங்கள், பள்ளிக்கூடங்கள், கல்லூரிகளில் மாணவர்களைச் சேர்த்துக் கொள்ளல் ஆகியவற்றில் கைக்கொள்ளப்பட்டு வரும் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவ உத்தரவை

ரத்துசெய்ய வேண்டுமென்று சர்க்காரை வற்புறுத்துகிறது" என்பதே அத் தீர்மானம்.

இத் தீர்மானம் காங்கிரஸ் பார்ப்பனரல்லாதாரின் எதிர்ப்பினாலேயே, மண் கவ்வச் செய்யப்பட்டது. அதிலிருந்தே, இனி மாகாணச் சட்டசபையை நம்பினால் பயனில்லை, மத்திய சட்டசபை டில்லி சர்க்கார் ஆகியவற்றின் மூலமே தம் நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ளவேண்டும் என்ற முடிவிற்கு வந்தார்கள் பார்ப்பனர்கள்.

மேலும், மாகாண மந்திரி சபையே பார்ப்பனரல்லாதாரின் பெரும்பான்மை பலத்தோடு திகழ்ந்ததால், பார்ப்பனருக்கு டில்லிக்குக் காவடி எடுப்பதைத் தவிர, தம் சூழ்ச்சிக்கு வேறு வழி இல்லாது போயிற்று. அவர்களது, சுயநலக் காவடியும் பலனளிக்காமற் போகவில்லை.

## டில்லி தாக்கீது

1948 மே திங்களில் இந்திய சர்க்கார், எல்லா மாகாண மந்திரிசபைகளுக்கும் ஒரு சுற்றறிக்கை வெளியிட்டது.

**அரசாங்க உத்தியோக நியமனங்களில், இந்து மதத்தின் கிளைகளுக்குள் (சாதிப் பிரிவுகளுக்குள்) பேதங்காட்டுவது தற்போதைய அரசாங்கக் கொள்கைக்கு மாறாக வேற்றுமையைத் தோற்றுவிப்பதாகும். மாகாண அரசாங்கங்கள், உத்தியோக நியமனங்களில் சாதிப் பாகுபாடுகளை இதுவரை கைக்கொண்டிருந்து வந்தாலும், இனி, செய்யப்படும் நியமனங்களில் எந்த மாகாணமும் சாதிப்பாகுபாடுகள் காட்டக்கூடாது என்பதோடு, தாழ்த்தப்பட்ட மக்களுக்கு என ஒதுக்கப்பட்டுள்ள இடங்கள் தவிர்த்து மற்றவற்றை எல்லா இந்துக்களுக்கும் பொதுவாகவே வழங்க வேண்டும்**" என்று அவ்வறிக்கை கூறிற்று.

இவ்வறிக்கை—மாகாண அரசாங்கத்திற்கு வந்திருப்பதாகக் கேள்விப்பட்டவுடனேயே, திரா

விடர் கழகமும், மற்றும் சில பொது நலக் கழகங்களும், இதை எதிர்த்துத் தீர்மானங்கள் நிறைவேற்றியதோடு, சமூக நீதியை நிலை நாட்டுவதில் மாகாண அரசாங்கம் உறுதியோடு பணியாற்ற வேண்டும் என வற்புறுத்தலாயின.

ஓமந்தூராரைக் கவிழ்க்கும் முயற்சி

அவ்வமயம், மாகாண முதலமைச்சராக விளங்கிய ஓமந்தூர் இராமசாமி அவர்கள், இது குறித்து மிகத் தெளிவோடும் உறுதியோடும் நடந்து கொண்டது பாராட்டத் தக்கதாகும்.

“இவ்வறிக்கை குறித்து நாம் மிகவும் முன்னெச்சரிக்கையோடு நடந்து கொள்ள வேண்டும்; இல்லாவிடில் ஆபத்து ஏற்படும்” என்று அவ்வமயம் அவர் தெரிவித்தார். மேலும், தென்னாட்டின் சமூக நிலையில் உள்ள உயர்வு தாழ்வு வேறுபாடுகள் காரணமாகச் சென்னை அரசாங்கம், இந்த வகுப்புவாரி உத்தரவைக் கைவிடுவதற்கில்லை என்ற உண்மையை மத்திய அரசாங்கத்திற்கு எடுத்துக்கூறித் தெளிவு படுத்தவும் ஓமந்தூராரும் அவரது மந்திரி சபையினரும் தவறவில்லை.

எனவேதான், மத்திய சர்க்காரையே, தம் தந்திரத் திட்டத்துக்குத் தாளம்போடச் செய்தாலும், மாகாண மந்திரிசபையைத் தம் மனம் போன வண்ணம் ஆட்டிப்படைக்க முடியாததைக் கண்ட பார்ப்பனத் தலைகள், இந்த மந்திரி சபையையே, எப்படியேனும் ஒழித்துக் கட்டியாக வேண்டும் என்று தீவிரமாக முனையலானார்கள். அதிலும் முக்கியமாக, உள்ளத் தூய்மையும் உறுதியும் கொண்ட உத்தமர் ஓமந்தூராரை முதலமைச்சராக வரமுடியாதபடி—தலைவர் தேர்தலிலேயே ஒழித்துக்கட்டக் கங்கணம் கட்டிக்கொண்டனர்.

"வாளை வில்லாக வளைக்கவும், மண்ணைக் கயிருகத் திரிக்கவும்'' தந்திர மந்திரம் (இயந்திரமல்ல) கற்ற கூட்டம், எப்படியோ வெற்றி பெற்றது 1949-ல்! ஓமந்தூர். இராமசாமி தலைமைப் பதவியினின்றும் விலகிக்கொள்ள வேண்டிய நெருக்கடி ஏற்படுத்தப்பட்டது. திருவாளர் குமாரசாமி ராஜா அவர்கள் தலைவராகிப் புதுமந்திரி சபையை அமைத்தார்.

அத்துடன் பார்ப்பனர்கள் ஓய்ந்துவிடவில்லை. அவர்கள் இயல்பல்லவே அது!

திருவாளர் ராஜா முதல்மந்திரியாக வீற்றிருக்கும் இக்காலத்தில்தான், பார்ப்பனர்களின் நெடுநாளைய எண்ணம், அபிலாஷை, அவர்தம் கூட்டுமுயற்சியில் உருவான புதிய அரசியல் சட்டத்தை அடிப்படையாகக் கொண்டு, வழக்கு வடிவெடுத்து, உயர் நீதிமன்றத்தில் நுழைந்து வெற்றிக் களிப்போடு வெளிவந்த 'காட்சியை' நாம் காண நேரிட்டது.

## வழக்கு விவரம்.

சென்னை — மருத்துவக் கல்லூரியிலேயும், (Medical college) பொறியியல் கல்லூரியிலேயும் (Engineering college) தம்மைச் சேர்ப்பதில், சென்னை அரசாங்க வகுப்புவாரி உத்தரவு குறுக்கிடக் கூடாதென்று, முறையே திருமதி செம்பகம் துரைசாமி, திரு. சி. ஆர். சீனிவாசன் ஆகிய இருவரும் சென்னை உயர் நீதி மன்றத்தில் (Mandamus pettitions) மனுச்செய்து கொண்டனர். தாம் பார்ப்பனர்களாக் இருப்பதால் தமக்கு அக் கல்லூரிகளில் இடம் கிடைக்காமற் போகலாமென்றும், எனவே, வகுப்புவாரி உத்தரவு குறுக்கிட

லாகாதென்றும், அவ் விண்ணப்பங்களில் குறிப்பிட்டிருந்தனர்.

அவர்கள் சார்பில் முறையே முன்னாள் நீதிபதி. திரு. வி. வி. சீனிவாச ஐயங்காரும், முன்னாள் அட்வகேட் ஜெனரல் திரு. அல்லாடி. கிருஷ்ணசாமி ஐயரும் வாதிட்டார்கள். சர்க்கார் சார்பில், அட்வகேட் ஜெனரல் திரு. குட்டி கிருஷ்ண மேனன் வாதிட்டார்.

தலைமை நீதிபதி திரு. பி. வி. இராசமன்னார், நீதிபதிகள், திரு. விஸ்வநாத சாஸ்திரி, திரு சோமசுந்தரம் ஆகிய மூவர் முன்னிலையிலுமே (Full Bench) இம்மனுக்கள் விசாரிக்கப் பட்டன.

விண்ணப்பதாரர்கள்,

1950-ஜனவரி 26-ல் புது இந்திய அரசியல் சட்டம் நடைமுறைக்கு வந்துவிட்டபின், அந்தச் சட்டத்தில், குடிமக்களுக்கு அளிக்கப்பட்டிருக்கும் உரிமைகளுக்கு சென்னை அரசாங்கத்தின் வகுப்பு வாரி உத்தரவு முரணாக இருக்கிறதென்றும், கல்லூரியில் சேர்வதற்குத் தாங்கள் செய்துள்ள விண்ணப்பங்கள் அவற்றின் தகுதிகளின்மீதே கவனிக்கப்படவேண்டும் என்றும், தங்கள் மனுக்களில் குறிப்பிட்டிருந்தனர்.

**அவற்றின் மீது தீர்ப்பளித்த தலைமை நீதிபதி திரு. இராசமன்னார் அவர்கள் கூறிய தீர்ப்பின் சுருக்கம் இதுவாகும் :**

"மெடிக்கல் கல்லூரியில் 330 இடங்களும், இன்ஜினீயரிங் கல்லூரியில் 359-இடங்களும் உள்ளன. அவற்றுள், வெளி அரசாங்கங்களிலிருந்து வருபவர்கட்கும், சென்னை அரசாங்கத்தால் தெரிந்தெடுக்கப் படுபவர்கட்கும் ஒதுக்கப்பட்ட இடங்கள் போக மிச்சம் உள்ள இடங்கள் வகுப்பு

வாரிப் பிரதிநிதித்துவத்தின்படி அளிக்கப்படு கின்றன.

**இவ்விதம், வகுப்புவாரியாக மாணவர்களைக் கல்லூரியில் சேர்ப்பது தனிப்பட்டவர்களின் உரிமையைப் பாதிக்கிறதென்று வாதிப்பதை நான் ஒப்புக்கொள்கிறேன்.**

ஒருவர், இந்த அரசாங்கத்தின் குடிகளுள் ஒரு வராகவே கொண்டு உரிமையளிக்கப்பட வேண்டு மேயொழிய, அவர் ஒரு குறிப்பிட்ட வகுப்பைச் சேர்ந்தவர் என்பதற்காக அவருடைய தனிஉரிமை பாதிக்கப்படலாகாது.

இந்திய அரசியலின் 15-வது கட்டளைப்படி, இந்த வகுப்புவாரி உத்தரவு-ஒருகுறிப்பிட்ட வகுப் புக்குப் பாதகமாகவே வேற்றுமை செய்கிறது. ஒரே கல்லூரியில் இடம்பெறுவதற்கு ஒரு அரிஜன மாணவரைவிட ஒரு பார்ப்பன மாணவர் அதிக மார்க்கு (தகுதி)பெறவேண்டுமென்று ஏற்படுவது ஒரு வகுப்புக்கும் மற்றொரு வகுப்புக்கும் ஏற்றத் தாழ்வு காட்டுவதும், வித்தியாசம் புகுத்துவது மாகத்தான் முடியும். எனவே விண்ணப்பதார ருக்குச் சாதகமாகத் தீர்ப்பளிப்பதுதான் நியாய மாகப் படுகிறது.

அரசாங்கக் குடிகளுள் முன்னேற்ற மடைய சக்தியற்றவர்கள் பொருட்டு அரசாங்கம் கவலை (முயற்சி) எடுத்துக்கொள்ளவேண்டும் என்று கூறும் 46-வது கட்டளை, சர்க்கார் அறிவிக்கும் கொள்கையேதவிர கட்டாயம் கடைப்பிடிக்கவேண் டிய சட்டவிதியல்ல. குடிகளுக்குச் சமத்துவமளிக் கப்பட வேண்டுமென்று அரசியலில் பல இடங் களில் வற்புறுத்தப் பட்டிருக்கிறது. சில இடங் களில் பிற்போக்கு வகுப்பினருக்குத் தனிச் சலு கைகள் காட்டியும் கட்டளைகள் வகுக்கப்பட்டிருக்

கின்றன. அவற்றின்படி, உத்தியோகங்களில், ஆதி திராவிடர்கட்கும், பிற்போக்கு வகுப்பினருக்கும் சலுகைகள் அளிக்கலாம். ஆனல் கல்வித் துறையில், யாருக்கும் எவ்வித வேறுபாடும் காட்டலாகாது. அரசியல் நிர்ணய சபை உறுப்பினர்கள், 29-வது கட்டளையைத் தனியாக வகுத்திருக்கின்றனர். 46-வது கட்டளை 15-வது, 29-வது கட்டளைகளின் உரிமைகளில் தலையிடவே முடியாது.

சமூக அநீதியிலிருந்து சக்தியற்ற வகுப்பினருக்குப் பாதுகாப்பு அளிக்க, இந்த வகுப்புவாரி உத்தரவை வகுத்திருப்பதாகச் சொல்லப்படுகிறது. அதிக மார்க்குகள் பெற்றிருந்தும், ஒரு குறிப்பிட்ட வகுப்பினர் என்பதற்காக ஒருவரைக் கல்லூரியில் சேர்க்காமல் இருப்பது நீதியாகுமா? அரசியலின் படி, குடிமக்கள் ஒவ்வொருவரும் சமசந்தர்ப்பம் அளிக்கப்பட வேண்டும்.

எனவே, விண்ணப்பதாரர்கள், கல்லூரியில் சேரக்கொடுத்துள்ள விண்ணப்பங்களை அவற்றின் தகுதிகளின் பேரிலேயே பரிசீலனை செய்யவேண்டும் என்றும், மத, இன, சாதி, மொழி வேற்றுமைகள் அதில் காட்டக்கூடா தென்றும் நான் முடிவு செய்கிறேன். அந்தத் 'தகுதி' எப்படி இருக்கவேண்டுமென்றோ, அதை எவ்வாறு கவனிக்கவேண்டுமென்றோ சொல்வது நம்மைச் சார்ந்ததல்ல"

அடுத்துத் தீர்ப்பளித்த, நீதிபதி திரு. விசுவநாத சாத்திரியின் தீர்ப்பின் சுருக்கம் இதுவாகும்:

"குறிப்பிடப்பட்ட, வகுப்புவாரி பிரதிநிதித்துவ உத்தரவு வகுப்புத் துவேஷத்தை வளர்க்கக் கூடியதாக இருக்கிறது. தனிப்பட்டவர்களின் உரிமையில் அரசாங்கம் தலையிட்டு ஏதாவது செய்யாமல் இருக்க வேண்டும் என்றே, அரசியலை

வகுத்தவர்கள், அதற்குப் போதுமான பாதுகாப்பு அளித்திருக்கிருர்கள்.

சமத்துவம் என்று எவ்வளவோ பேசலாம். அதை நடைமுறையில் கைக்கொள்வது மிகவும் கடினமாகும். பார்ப்பனரல்லாதாரே முன்னேற்ற சக்தியற்றவர்கள் என்று எடுத்துக் கொள்ளக் கூடாது. சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந் தரும், சென்னையிலுள்ள பெரும்பாலான ஆலை உரிமையாளரும், சென்னை அரசாங்க மந்திரிகள் 12 பேரில் 11 பேரும் பார்ப்பனரல்லாதார். எனவே —பார்ப்பனரல்லாதார் எல்லாரும் 'சக்தியற்ற வகுப்பினர்' என்று எப்படிச் சொல்ல முடியும்? எனவே, வகுப்புவாரிப் பிரதிநிதித்துவ உத்தரவு அரசியலின் 15 வது கட்டளைக்கு முரணனது. அர சாங்கம், குடிகளுக்குள் வேற்றுமை பாராட்டக் கூடாதென்பது தான், அந்தக் கட்டளையின் அடிப்படை நோக்கமாகும்.

அரசியலின் 15-வது கட்டளை மறுக்க முடியா தது. கைக்கொண்டே ஆகவேண்டியது. இதிலும் இந்த வகுப்புவாத உத்தரவு குறுக்கிடுகிறது. சாதி வாரியாக மக்களைப் பிரிக்கிறது. எனவே, இந்த வகுப்புவாத உத்தரவு அரசியலின் அடிப்படைக் கொள்கையையே தகர்ப்பதாக இருக்கிறது. 15-வது கட்டளைக்கே முரணுக இருக்கிறது.

தலைமை நீதிபதியின் தீர்ப்பை நான் ஒப்புக் கொள்கிறேன்.

**அடுத்துத் தீர்ப்பளித்த நீதிபதி. திரு. சோமசுந்தரம் அயர் கள் தீர்ப்பின் சுருக்கம் இதுவாகும்:**

"அரசாங்கத்தின் சார்பில் வாதிட்ட அட்வ கேட் ஜெனரல் 15, 29—ஆகிய கட்டளைகளிலுள்ள 'ஒன்லி' (only) என்ற சொல்லை மிகவும் வற்புறுத்

தினர். அது கவனிக்கப்பட வேண்டியதும், நியாய மானதுமாகும் அதாவது குறிப்பிட்ட, (மதம் இனம், சாதி, மொழி) சிலவற்றின் காரணமாக மட்டுமே (குடிகளுக்குள்) வேற்றுமை காட்டக்கூடா தென்று அரசியல் சட்டத்தின் கட்டளை தெரிவிப் பதாக அவர் கூறுகிறார். அரசியல் சட்டத்தை வகுத்தவர்களும் அதன் அவசியத்தைத் தெரிந்தே வகுத்துள்ளனர். மக்களுக்குச் சமத்துவமளிப்பது எப்படி என்பதை ஒரு ஆட்சியை நடத்துபவர்கள் தான் தீர்மானிக்க முடியும். அரசியல் திட்டத்தின் அடிப்படை உரிமைகளைப் பற்றிப் பேசுகையில், (அரசாங்க நடைமுறை) கொள்கைக் கட்டளைகளை முற்றிலும் புறக்கணித்துவிட வேண்டுமென்பதில்லை.

46-வது கட்டளைக்குப் பின்னர்தான் 29-வது கட்டளை நிறைவேற்றப் பட்டிருக்கிறது. 46-வது கட்டளைக்கும் மதிப்புக் கொடுக்க வேண்டியது அவசியந்தான்.

தலைமை நீதிபதியும், சகோதர நீதிபதியும் கூறிய தீர்ப்புக்களைக் கேட்டேன். அவைகளைக் கேட்ட பிறகு, அவர்களின் தீர்ப்பை நான் ஒப்புக் கொள்கிறேன்."

இந்தத் தீர்ப்புக்கள் வழங்கப் பட்டவுடன், இதில் பல சட்டப் பிரச்னைகள் ஏற்படுவதால், சர்வநீதி மன்றத்துக்கு (Supreme Court) எதிர் விண்ணப்பம் (அப்பீல்) செய்ய அனுமதி வேண்டு மென்று அட்வகேட் ஜெனரல் கேட்டுக் கொண்ட படி, தலைமை நீதிபதி அனுமதியளித்தார்.

### திராவிடத்தின் துயர்

இந்தத் தீர்ப்பினைக் கேட்டுத்தான், வெந்த புண்ணிலே வேலெனத் துடித்துத் துவண்டது திராவிடம். நாம், துவக்கத்தில் விளக்கியுள்ள

நிலைமைக்குக் காரணமாக விளங்கியது இத்தீர்ப்புத்தான்.

இந்தத் தீர்ப்பு—சட்டத்தின்படி அமையவில்லை என்றே, நீதிபதிகள் தவறு இழைத்துவிட்டார்கள் என்றே கருதியதால் அல்ல, நாட்டு மக்களும், மாணவ இளஞ்சிங்கங்களும் பெரியதொரு போராட்டத்தைத் தொடங்கியது. ஆனல் நாட்டு மக்களின் உரிமை, பறிக்கப்படுகிறது அரசியல் சட்டப்படி கிடைத்த இத்தீர்ப்பினுல் என்பதையும், அதனுல் ஏற்படும் விளைவையும் எண்ணிப் பார்த்ததால் தான், "கிளம்பிற்றுக்காண் தமிழ்ச் சிங்கக் கூட்டம்" என்ற பாராட்டுக்குரியவராயினர்.

உண்மையிலேயே ஒரு தீர்ப்பு சட்டத்தின் படி சரியே என்று கொண்டாலும், அந்தத் தீர்ப்பு, சமூக நீதிக்கு, மக்கள் வாழ்வுககுக் கேடு பயக்கு மானுல், அறிவும் எழுச்சியும் கொண்ட மக்கள், அந்தத் தீர்ப்பை வழங்கக் காரணமான சட்டத்தை மாற்றியமைத்துத் தங்கள் உரிமையைக் காத்துக் கொள்ளக் கிளர்ந்தெழுவது இயல்பேயாகும்.

பொதுமக்கள் சட்டத்தின் நுணுக்கத்தையோ அதன் இடைவெளிகளையோ உயர்சிகரங்களையோ உணர முடியாது, ஆனல் சட்டத்தினுல சமூகத்தில் ஏற்படும் விளைவுகளை மட்டுமே அவர்களால் உணர முடியும். எனவே விளைவை எண்ணித்தான், பொது மக்கள் எந்தச் சட்டத்தையும் ஏற்கவோ அல்லது மறுப்பதன் மூலம் மாற்றக் கேட்கவோ முனவரக கூடும்.

அம்முறைப்படியே-தீர்ப்பினுல் ஏற்பட்ட பரிதாபகரமான நிலைமையை மாற்றியமைக்கத்தக்க நடவடிக்கைகளையெல்லாம் எடுத்துக்கொள்ள வேண்டுமெனத் தமிழகமே திரண்டெழுந்து அரசாங்கத்தை வற்புறுத்திக் கேட்கலாயிற்று.

மாணவர் கூட்டமே, தமிழர் பெரும்படையின் முன்னணியாகத் திகழ்ந்தது. சென்னை, பச்சையப்பன் கல்லூரிக்காளைகள் ஊதிய அபாயச் சங்கொலி கேட்டு, குமரிமுனை வரையிலுமுள்ள கல்லூரிகளிலும், உயர் நிலைப் பள்ளிகளிலும் எதிரொலி கிளம்பிற்று. பள்ளிமறுப்பு, ஊர்வலம், பொதுக் கூட்டம் முதலியன நடத்திச் செய்வதறியாது திகைத்திருந்த அமைச்சர்களுக்கே கூட கடமையுணர்ச்சியும் கருத்திலே தெளிவும் தோன்றச் செய்தனர்.

வகுப்புரிமைச் சட்டத்தின் தந்தை, அறிஞர் எஸ். முத்தையா அவர்களும், திராவிட முன்னேற்றக் கழகப் பொதுச் செயலாளர். அறிஞர் அண்ணாத்துரை அவர்களும், திராவிடக் கழகத் தலைவர் பெரியார் இராமசாமி அவர்களும், மற்றும் பல திராவிடர் இயக்கத் தலைவர்களும் தீர்ப்பில் கூறப்பட்டுள்ள விளக்கப்படி இந்தியக் குடியரசின் புது அரசியல் சட்டம், தென்னாட்டுப் பெருங்குடி மக்களுக்கு இழைத்துள்ள கொடுமையையும், வகுப்புரிமைச் சட்டத்தின் அவசியத்தையும் விளக்கி வெளியிட்ட அறிக்கைகளும், நிகழ்த்திய விரிவுரைகளுமே, மக்களின் விழிப்புக்கும், உரிமை எழுச்சிக்கும் காரணமாயின.

நகரங்களில் மட்டுமன்றிப் பட்டி தொட்டிகளிலும் நடைபெற்ற மாபெரும் ஊர்வலங்களும், கடையடைப்புக்களும் மக்களின் மனக் கொதிப்பை உலகிற்கு உணர்த்தலாயின.

'கம்யூனல் ஜி. ஓ.'வைக் கல்வித் துறையிலும் கைவிடக் கூடாது. தீர்ப்புக்குறித்து சுப்ரீம் கோர்ட்க்கு அப்பீல் செய்யவேண்டும். அப்பீல் பயனளிக்காவிடில், 'கம்யூனல்-ஜி ஓ.'விற்குப் பாதகமான அரசியல் சட்டப் பிரிவைத் திருத்த முயற்சி மேற்கொள்ள வேண்டும் என்ப

வையே மாணவர், பொதுமக்கள் ஆகியோரின் வேண்டுகோளாகும்.

"சுப்ரீம் கோர்ட்டுக்கு அப்பீல் செய்வது குறித்து, அமைச்சர் குழு இன்னும் ஆலோசித்துக் கொண்டுதான் உள்ளது" என்று ஒரு அமைச்சர் தெரிவித்ததனாலேயே, "அப்பீல்செய்" என வற்புறுத்துவதும் அவசியமாகிவிட்டது. ஆனால் அவர்களின் முழக்கம் வீண்போகவில்லை.

சென்னை அரசாங்கத்தின் உறுதிமொழி.

அந்த முழக்கத்தின் பயனாகவே, அமைச்சர் குழு, ஒரு நல்ல முடிவுக்கும் வந்தது.

1950—51-ம் ஆண்டு, சென்னைச் சட்டசபை தொடக்கத்தில் கவர்னர் நிகழ்த்திய சொற்பொழிவின் மீது எழுந்த விவாதத்திற்கு நிதிமந்திரி திரு. கோபால் ரெட்டியார், பதிலளித்துப் பேசுகையில்,

"கம்யூனல் ஜி. ஓ. பற்றி உயர்நீதி மன்றம் அளித்த தீர்ப்புக்கு எதிராக சுப்ரீம் கோர்ட்டில், அப்பீல் செய்து கொள்வதென்ற முடிவிற்கு சென்னை சர்க்கார் வந்து விட்டது" என்றும்,

"மற்றும், இந்த மாகாணத்தில் உள்ள பிற்பட்ட வகுப்பினரின் உரிமைகளைப் பாதுகாக்கச் சாத்தியமான நடவடிக்கைகள் அனைத்தும் சர்க்கார் எடுத்துக் கொள்ளும்" என்றும்,

"இந்திய அரசியல் சட்டத்தைத் திருத்த வேண்டிய கட்டாயம் ஏற்பட்டால், அதற்கான முயற்சிகளும் எடுத்துக் கொள்ளப்படும்" என்றும் மந்திரி சபையின் முடிவைத் தெளிவாகக் கூறினார்

மற்றும், கல்வி அமைச்சர் திரு. மாதவ மேனன் அவர்களும் இந்த முடிவையே ஆணித்

தரமாக வெளியிட்டார். இவையே சென்னை சர்க்கார், உரிமைப் போருக்குக் கிளர்ந்தெழுந்த பொது மக்களுக்கும், மாணவர்களுக்கும் அளித்த உறுதிமொழிகளாகும்.

இந்த உறுதி மொழிகள் கிடைக்க, காங்கிரஸ் இயக்கத்தவரிலும் பலர் காரணமாயினர். காங்கிரஸ் சட்டசபை உறுப்பினர்களான, தோழர்கள், கோசல் ராம், பட்டாபிராமன், கக்கன் ஆகியோர், கம்யூனல் ஜி. ஓ. வை நிலை நிறுத்துவதற்கான எல்லா முயற்சிகளையும் எடுத்துக் கொள்வதற்காக, சட்டசபை காங்கிரஸ் கட்சியை உடனே கூட்டவேண்டுமெனத் தலைவருக்கு வேண்டுகோளும், தீர்மானங்களும் அனுப்பிவைத்தனர், சட்டசபை காங்கிரஸ் கட்சிக்குள்ளேயே, தோழர்கள் கன்னியப்பன், சேலம் சுப்பிரமணியம் போன்ற பலர் இதில் உறுதிகொண்டிருந்ததோடு, பெரும்பாலோரின் ஆதரவும் இதற்கு ஏராளமாக இருந்தது.

காங்கிரஸ் தலைவர் திரு. காமராசரும், மற்றும் பலரும் கூட இதை ஆதரித்துப் பேசலானார்கள்.

பார்ப்பனர்களின் சூழ்ச்சியால், தாங்கள் ஏமாற நேரிட்டது என்ற எண்ணம் காங்கிரஸ் தோழர்களின் உள்ளத்தைச் சுட்டதால், அவர்கள் பேச்சு 'கனல் கக்குவதாகவே' இருந்தது. திராவிட இயக்கத்தாரும் பேசாத முறையிலும் வகையிலும், காங்கிரஸ் தோழர்கள்—பார்ப்பனர்களைக் குறித்துப் பேசவேண்டிய விசித்திரமான நிலைமை ஏற்பட்டது.

காங்கிரஸ் ஏடுகளான 'தினசரி'—'காண்டீபம்' 'பிரசண்டவிகடன்' போன்றவைகளும் 'கம்யூனல் ஜி. ஓ'வின் அவசியத்திற்கு ஆதாரங்களுக்குமேல்

ஆதாரங்கள் வெளியிடலாயின. பார்ப்பன ஏடுகள் அத்தனையும் தமது "இருட்டடைப்பு" வேலையைக் கவனமாகச் செய்தன.

உண்மையில், பார்ப்பனர்கள் எல்லோரும், கட்சி வேறுபாடின்றி, எந்நிலையினராலும், கம்யூனல் ஜி. ஓ.வை ஒழித்துவிடுவதில் எப்படி ஒன்றுபட்ட மனமுடையவர்களாக இருக்கின்றார்களோ, அப்படியே திராவிடப் பெருங்குடி மக்களான பிற்பட்ட வகுப்பினர் எல்லோருமே, தம்மைப் பிரித்துவைத்துப் பேதப்படுத்தும், சாதி, மதம், குலம், கட்சி மாறுபாடு ஆகிய எந்த வேற்றுமையையும் பாராட்டாது, ஒன்றுபட்ட உள்ளத்தோடு, உரிமைப் போரில் தோளோடு தோளிணைத்து நின்று, வகுப்புரிமையை நிலைநாட்டச் செய்ய முன் வந்தனர். தமிழர்களிடையேஒரு எழுச்சி, திராவிடத்திலே ஒரு புதுமை, உரிமை வேட்கை கொண்டவர்களின் ஒரு பெரும்அணிவகுப்பு அமைந்தது அந்தத் தீர்ப்பினால்.

ஆம்! 'அந்தத் தீர்ப்பைப்' பெற்றுத் தரக் காரணமாக விளங்கிய பூசுரர் குலத்தவருக்கும், அதன் ஆதிகாரணமாகத் திகழ்ந்த ஸ்ரீமான் அல்லாடி கிருஷ்ணசாமி ஐயருக்கும், எழுச்சியுற்ற தமிழகம், நன்றி செலுத்தத்தான் வேண்டும்.

## தீர்ப்பும், அரசியல் சட்டமும்

உயர்நீதிமன்றம் தந்த அந்தத் தீர்ப்பைக் கூர்ந்து நோக்கினாலோ, நீதிபதிகள் தனித்தனியே வழங்கிய தீர்ப்புரைகளிலே, முடிக்கப்படும் வாக்கியங்கள் ஒன்றேயானாலும், தனித்தனி நீரோட்டங்

கள்—வர்ண வேறுபாடுகள் காணப்படுவதை உண ரலாம்.

'கல்வித்துறையைப் பொருத்தவரையில் வகுப்புரிமைச் சட்டம், புதிய அரசியல் சட்டத்தின் படி செல்லாது'—என்ற தீர்ப்பை நீதிபதிகள் மூவரும் வழங்கியிருக்கிறார்கள். அவரவர் தீர்ப்பி லும் உள்ள வாசக வேறுபாடுகள், அவரவர் உள் ளக் கருத்தினைப் படம்பிடித்துக் காட்டுவதாகவே அமைந்துள்ளன.

தலைமை நீதிபதி, புது இந்திய அரசியல் சட் டம் என்ன சொல்லுகிறது என்று மட்டுமே பேசு கிறார். நீதிபதி விசுவநாதசாத்திரி, கம்யூனல் ஜி. ஓ. எப்படியெல்லாம் சட்டத்திற்கு முரணாகும் என்று விளக்குகின்றார். நீதிபதி சோமசுந்தரம் அவர்களோ, கம்யூனல் ஜி. ஓ. அரசியல் சட்டத் திற்கு முரணானதல்ல என்று சொல்லவும் இட முண்டு எனக் குறிப்பிட்டுவிட்டு சகோதர நீதிபதி களின் முடிவைத் தாமும் ஏற்பதாகத் தெரிவித் துள்ளார்.

மேலும், அரசியல் சட்டத்திற்குத் தரப்படும் விளக்கத்தில் மாறுபாட்டுக்கு இடமிருப்பதாலேயே அட்வகேட் ஜெனரல் கேட்டுக்கொண்டபடி, டில்லி தலைமை நீதிமன்றத்துக்கு அப்பீல் செய்யவும் அனுமதியளிக்கப்பட்டது, தலைமை நீதிமன்றத்தின் கருத்துதான், அரசியல் சட்டத்திற்கு முடிவான விளக்கமாகும்.

இந்திய அரசியல் சட்டத்தின் மூன்றாவது பாகத்தில் கூறப்பட்டுள்ள அடிப்படை உரிமை களை (Fundamental Rights) விளக்கும் கட்டளை களே நீதிபதிகளின் கருத்துக்கள் மாறுபடுவதற் குக் காரணமாகும்.

இந்திய அரசியல் சட்டம் கட்டளை 15 பிரிவு 1 (ல்) "இந்தியக்குடி எவலரையும், அவரது மதம், இனம், சாதி, பால், பிறப்பிடம் ஆகியவற்றிற்காகவோ, அவற்றுள் எந்த ஒன்றிற்காகவோ மட்டும் அரசாங்கம் வேற்றுமையாக நடத்தக் கூடாது" என்றும், கட்டளை 29, பிரிவு 2-ல், அரசாங்கத்தினலோ, அதன் பொருளுதவியாலோ நடைபெறும் எந்தக் கல்வி நிலையத்திலும், குடிமக்கள் எவரும், அவரது மதம், இனம், சாதி, மொழி ஆகியவற்றிற்காகவோ, அவற்றுள் எந்த ஒன்றிற்காகவோ மட்டும் அநுமதி மறுக்கப்படக் கூடாது" என்றும் கூறப்பட்டுள்ளன. இவ்வாறு கூறப்பட்டுள்ள இந்தக் கட்டளைகளால் உணர்த்தப்படும் குறிக்கோள் குறித்துதான் மாறுபாடுகள் தோன்றுகின்றன.

## அடிப்படை உரிமைகள்

இந்தக் கட்டளைகளைத் தாங்கி நிற்கும் 'அடிப்படை உரிமைகள்' என்பவை குறித்தே வேறுபட்ட கருத்துரைகள் வழங்கப்படுகின்றன.

"'உரிமை' (Right) என்பது விடுதலை, சலுகை (Liberty & Previlege) என்பவை போன்று, எந்தப் பொறுப்பும் இல்லாதது அல்ல" என்றும், 'கடமை' என்பது இன்றி சட்டப்படியான 'உரிமை' என்பதும் இல்லை" என்றும், "அடிப்படை உரிமைகள் என்பவை சில கடமைகளையும் கொண்டவையே" என்றும், "புது அரசியல் சட்டங்களில் அமைந்துள்ள அடிப்படை உரிமைகள், அப்படியே முழு வடிவில் அமைந்த சட்டங்களாகிவிட மாட்டா" என்றும், அரசியல் சட்டப் பேரறிஞர் சிலர், கருத்துரை வழங்கியுள்ளனர். அவற்றை நோக்கினல், 'அடிப்படை உரிமைகளை அப்படியே சொல்லுக்குச் சொல் பொருள்கொண்டு செலுத்தக் கூடுமா

என்ற ஐயம் எழத்தான் செய்கிறது. சட்டத்தின்படி வழங்கும் 'உரிமை' என்றசொல், பொதுவாகக் கருதப்படும் பொருளிலிருந்து சிறிது வேறான பொருளையே குறிப்பிடுகிறது என்பதும் உண்மையாகும்.

அரசியல் சட்டத்தில், 'அடிப்படை உரிமைகளைக்' கூறும் 3-வது பகுதியும், 'அரசாங்க நிர்வாகத் திட்டத்தைக் கொண்டு செலுத்தும் கொள்கைகளைக் கூறும் 4-வது பகுதியும் ஒன்றாகச் சேர்த்தே (வேறு படுத்திப் பிரிக்காமல், தொடர்ந்தே) படிக்கப்பட வேண்டும் என்பது பல சட்ட வல்லுனர்களின் கருத்தாகும். அப்படிச் சேர்த்துப் படிக்கப்பட்டால்தான், அடிப்படை உரிமைகள் என்ற சொற்றொடரின் முழுப் பொருளையும் நாம் தெரிந்து கொள்ளமுடியும்.

அப்படி, 3-வது 4-வது பகுதிகள் தொடர்ந்து படிக்கப்பட்டால்தான், எந்த அரசியல் சட்டத்திலும் அமைய வேண்டிய ஒழுங்கிற்கேற்ப ஒரு கட்டளை—மற்றொரு கட்டளையால் மறுக்கப்படுவதற்கு இடமின்றிச் சட்டத்தை விளங்கிக் கொள்ள முடியும்.

> அரசியல் சட்டத்தின் கட்டளை 46-ல் "குடிமக்களில் வலிவற்ற வகுப்பினரையும், சிறப்பாகத் தாழ்த்தப்பட்ட சாதியினரையும், தாழ்த்தப்பட்ட கூட்டத்தாரையும், பொருளாதாரக் கல்வித் துறைகளில் முன்னேற்றத்திற்குக் கொண்டுவர அரசாங்கம் தனிமுயற்சி எடுத்துக்கொள்வதோடு, எல்லா விதச் சுரண்டல்களிலிருந்தும், சமூகக் கொடுமைகளினின்றும் அவர்களைக் காப்பாற்ற முற்பட வேண்டும்" என்று கூறப்பட்டிருக்கிறது.

இந்தக் கட்டளை 46-ம், கட்டளை 29-ல் பிரிவு 2-ம் ஒன்ருகச் சேர்த்துப் படிக்கப்பட்டால், கருத்து தெளிவாக விளங்கக் கூடும். அவ்வாறு பொருள் கொண்டு, பிற்படுத்தப்பட்ட மக்களின் கல்வி நிலையை உயர்த்துவதற்காகக் கல்வி நிலையங்களில் உள்ள இடங்களை வகுப்புக்களுக்கிடையே பிரித்தளிப்பது தவறல்ல என்று சொல்லப்பட்டால் தான், அடிப்படை உரிமைகள் கட்டளை 16 பிரிவு 1-கூறுகின்றபடி "அரசாங்கத்தின் கீழே உள்ள எந்த உத்தியோக நியமனத்திலும் குடிமக்கள் எல்லோருக்கும் சமசந்தர்ப்பம் (ஒத்த வாய்ப்பு) வழங்கப்படும்" என்பது நடைமுறை உண்மையாகும்.

அரசியல் சட்டம் கட்டளை 15 பிரிவு 1, எந்த உரிமையையும் தெளிவாகக் குறிக்கவில்லை என்பதோடு, எந்த ஒரு கட்டளையையும் மறுக்கவுமில்லை. அது கூறும் உரிமைகளை உணர அதனேடு தொடர்புள்ள மற்றக் கட்டளைகளையே நோக்கவேண்டியிருக்கிறது.

கட்டளை 15-பிரிவு 2-என்பது, "(அ) கடைகள், பொது உணவுச்சாலைகள், சிற்றுண்டி விடுதிகள், பொதுக்களியாட்டம் நிகழும் இடங்கள் ஆகியவற்றிற்குச் செல்லவும் (ஆ) பொதுமக்களுக்கு என அளிக்கப்பட்டனவும், அரசாங்கத்தாலோ அதன் பொருளுதவியாலோ காக்கப்படுவனவுமான, கிணறுகள், குளங்கள், குளிக்குமிடங்கள், சாலைகள், பொதுமக்கள் தங்குமிடங்கள் ஆகியவற்றைப் பயன்படுத்தவும் எந்த ஒரு குடிமகனும், மதம், இனம், சாதி, பால், பிறப்பிடம் ஆகியவை காரணமாகவோ, அவற்றுள் எதன் காரணமாகவோ மட்டும், எந்த விதமான தகுதியின்மைக்கோ, தண்டனைக்கோ, தடைக்கோ, கட்டுப்பாடுகட்கோ உட்படுத்தப் படக்கூடாது" என்று கூறுகிறது.

கட்டளை 16—பிரிவு 2-என்பதோ, அரசாங்கத்தின் கீழுள்ள எந்த உத்தியோகம் அல்லது வேலையானாலும், அதைப் பொருத்து, எந்தக் குடிமகனும், மதம், இனம், சாதி, பால், குடிவழி பிறப்பிடம் ஆகியவற்றிற்காகவோ, அவற்றுள் எந்த ஒன்றிற்காகவோ மட்டும் தகுதியில்லை என்றோ வேற்றுமைப்படுத்தியோ கொள்ளப்படக்கூடாது" என்று கூறுகின்றது.

கட்டளை 15-பிரிவு 1-என்பது உரிமையை விரிவான கருத்தில் விளக்கி நிற்கிறது என்பது உண்மையானால், அதற்குள் அடங்கிவிடக்கூடிய அதே 'உரிமை'யின் ஒரு பகுதியைமட்டும் விளக்கி கட்டளை 16-பிரிவு 2, நிறைவேற்றப்பட்டுள்ளது ஏன்?

சட்டம், மறுமுறையும் கூறப்படுவதில்லை என்பது ஒப்புக்கொள்ளப்பட்டால், கட்டளை 15-பிரிவு 1-என்பது கட்டளை 16-பிரிவு 2-என்பதில் கூறப்பட்டுள்ளவற்றை உள்ளடக்கி நிற்கவில்லை என்று தானே கொள்ளவேண்டும். அதன்படி, கட்டளை 15-பிரிவு 1-ல், கட்டளை 16-அடங்கி நிற்கவில்லை என்பது உண்மையானால், மற்றும் பலவற்றை அதே கட்டளை அடக்கி நிற்பதாகக் கூறுவது எப்படி நியாயமாகும்?

மேலும், கட்டளை 16-பிரிவு 2-ஐக் கூர்ந்து நோக்கினால், அது அரசாங்கத்தின் கீழுள்ள உத்தியோகத்தைக் குறித்தே வரையறுத்துக் கூறியுள்ளதென்பதும், அதுபோன்றே, 'அவசியமென்று கருதப்பட்டிருந்தால் அரசியல் சட்டத்தில் வேறு எதையும் வரையறுத்துக் கூறியிருக்கலாம் என்பதும் தோன்றாமற் போகாது. இந்தக் கட்டளை 16-பிரிவு 2-க்கும் விதிவிலக்காகக் கட்டளை 16-பிரிவு 4 நிறைவேற்றப்பட்டுள்ளது.

"அரசாங்கப் பணிகளில், நியாயமான அளவு இடம் பெறவில்லை என்று அரசாங்கத்தால் கருதப்படும் எந்தப் பின்னணி வகுப்புக் குடிகளுக்கும் அரசாங்கப் பதவிகளையும், வேலைகளையும், அரசாங்கம் ஒதுக்கி (Reserve) வைப்பதற்கான ஏற்பாடு செய்வதை இக் கட்டளையிலுள்ள எதுவும் தடை செய்யாது"—என்பதே அது. அதன்படி கட்டளை 15-பிரிவு 1-ம், கட்டளை 16-பிரிவு 2-ம் கூறும் உரிமைகள், அந்த அளவில் மாற்றப்படுகின்றன என்பதுமட்டுமன்றி, அப்படி மறுக்கும் கட்டளை 16-பிரிவு 4-ம் அடிப்படை உரிமைகளிலேயே கூறப்பட்டுள்ளது கவனித்தற்குரியது. இந்நிலையில் 'கம்யூனல் ஜி. ஒ.' அதன் தத்துவத்தால், அடிப்படை உரிமைகளோடு எப்படி மாறுபடக்கூடும்? என்ற கேள்வியும் எழுகின்றது.

இனி கட்டளை 29-பிரிவு 2-ஐ நோக்கினாலோ, சிறுபான்மையினரின் நலன்களைக் காத்துநிற்கும் கட்டளை 29-பிரிவு 1-க்கும், சிறுபான்மையினர் தம் விருப்பம்போல் கல்வி நிலையங்களை நிறுவவும் நடத்தவும் செய்யலாம் என்று கூறும் கட்டளை 30 பிரிவு 1-க்கும் இடையில், ஒருவாறு தொடர்பும் பொருத்தமும் அற்றுக் காணப்படுகின்றது என்பதோடு, முன்னும்பின்னும் உள்ளகட்டளைகள் முழுப் பயன் தருவதற்கும் தடையாகுமோ என்ற ஐயத்தை எழுப்புகின்றது. மேலும் அக்கட்டளை எந்த ஒரு மதம், இனம், சாதி, மொழி ஆகிய எதைச் சேர்ந்தவர்களும் (சிறுபான்மையினரும்) கல்வி நிலையங்களில் அடியோடு தடுக்கப்பட்டுவிடக் கூடாது (Total Exclusion of minorities) என்ற கருத்தையே கொண்டுள்ளதாகவும் பலரால் கருதப் படுகின்றது.

மற்றும், கட்டளை 15-பிரிவு 1. கட்டளை 29, பிரிவு 2- ஆகியவற்றில் வழங்கப்பட்டுள்ள 'ஒன்லி'

(ONLY) என்ற சொல்லிற்கு இடம் நோக்கிக் கொள்ளவேண்டிய பொருளிலும் மாறுபாடு எழுகின்றது. ஆனாலும், மிகவும் பொருத்தமாகத் தோன்றுகின்றபடி "குடிமக்களில் எவரும் அவரது மதம், இனம், சாதி மொழி ஆகியவற்றுள் எதற்காகவோ, அல்லது எல்லாவற்றுக்காகவோ மட்டும் வேறுபடுத்தப்படக் கூடாது" என்று கொள்ளப் படும் பொருள் சரியானால், 'கம்யூனல், ஜி. ஓ.' வும் குற்றமுடையதாகாது.

'கம்யூனல் ஜி. ஓ.'வின்படி எந்த மாணவரும் அவரது மதம், இனம், சாதி, மொழி ஆகியவற்றிற்காக மட்டும் வேற்றுமைப் படுத்தப்படவில்லை. அந்தந்த வகுப்பும் கல்வித்துறையில் அடைந்துள்ள முன்னேற்றம் அல்லது பிற்போக்கு ஆகிய சூழ்நிலையில் அவரவரும் பெறக்கூடிய 'தகுதிகள்' வேறுபடுகின்ற காரணத்தால், விண்ணப்பித்துக் கொள்ளும் மாணவர்கள் எல்லோரையும் சேர்த்துக் கொள்ள கல்லூரிகளில் இடமில்லாத நிலையில் ஒவ்வொரு வகுப்பிலும் அதிகத் தகுதி பெற்றவர்கள் (தகுதி வரிசையில் முன்நிற்பவர்கள்) சேர்க்கப் படுகிறார்கள். ஒருவரின் மதம் சாதி மட்டுமன்றி அந்த வகுப்பின் முன்னேற்ற நிலையும், அதில் அவர் அடைந்துள்ள தகுதியின் வரிசையுமே, அவரைச் சேர்க்கவும் மறுக்கவும் காரணமாகிறது. மற்றும் விண்ணப்பிக்கும் அனைவருக்கும், ஒரே தகுதியைக் கைக்கொண்டால் உயர் தகுதிகளைப் பெறமுடியாத ஆதிதிராவிடர், பிற்படுத்தப்பட்டவர் போன்ற சில வகுப்பார், இடமே பெறாது அடியோடு புறக்கணிக்கப் பட்டுவிடவும் நேரலாம். ஒவ்வொரு வகுப்பிலிருந்தும் சிலரையேனும் சேர்த்துக்கொள்ளவும் மதம் சாதி முதலிய காரணங்களினாலேயே ஏற்பட்டுள்ள நிலைமைகளின் உண்மைக்கு மாறாக எவரும் வேற்றுமைப்படுத்தப் படாமல் தடுக்கவும், நிலைத்துப்

போன பழமையின் பரிசான வேற்றுமைகளைக் குறைக்கவும் காரணமாகும் 'கம்யூனல் ஜி. ஓ.' குடிமக்களை வேறுபடுத்துவதாவது எங்ஙனம்? அப்படி வேறுபடுத்தினும், அது மதம், இனம், சாதி; மொழி காரணங்களால் அல்ல என்பதும் அந்தந்த வகுப்பின் கல்வித் தகுதியில் காணப்படும் வேறுபாடுகள் காரணமாகவே என்பதும் கருதத் தக்கதாகும்.

மற்றும், குடிமக்கள் எல்லோரையும், அவரவர் தம் நிலை வேறுபாடுகளைக் கொள்ளாது ஒன்றாகவே கருத வேண்டும் என்பதே கட்டளைகள் 15-(1), 29-, (2), 16-(2) ஆகியவற்றின் நோக்கம் எனில், கட்டளைகள் 16-(4), 46, ஆகியவை முரண்பட்டே நிற்கின்றன.

எனவே கட்டளைகள் 16-(4), 46, ஆகியவற்றின் கருத்துக்கள் நிறைவேறும் வகையில் அடிப்படை உரிமைகள் அமைந்துள்ளன எனில் அதற்கேற்பவே கட்டளைகள் 15 (1), 29 (2) ஆகியவற்றிற்கு விளக்கம் செய்துகொள்ளவேண்டும்.

மற்றும் உத்தியோகத்தில், பிற்படுத்தப்பட்டவர்களுக்கென இடம் ஒதுக்கலாம் என்பதை ஒப்புக்கொண்டுள்ள அதே அரசியல், சட்டம் கல்வித் துறையில் இடம் ஒதுக்குவதற்கு மட்டும் இடமளிக்காமலிருப்பது எப்படி நியாயமாகும் என்பதும் சிந்திக்கற்பாலது.

**கம்யூனல் ஜி. ஓ. வேறுபடுத்துகிறதா?**

"கம்யூனல் ஜி. ஓ." மதம், சாதி, முதலியவை காரணமாகக் குடிகளை வேறுபடுத்துகிறதா? என்பது குறித்தும், சென்னை உயர்நீதி மன்றம் அளித்துள்ள தீர்ப்பினால் நிர்வாகத்தில் ஏற்படக்கூடிய தொல்லைகளைக் குறித்தும், அறிஞர் எஸ். முத்

தையா முதலியார் அவர்கள் 1-8-50-ல் வெளியிட்ட அறிக்கையின் பகுதிகள் விளக்கம் தருவனவாகும். அவற்றைக் காண்க.

'கம்யூனல் ஜி. ஒ.'வின்படி, 14-பதவிகள் காலியாகுமானல், அவற்றில்,

| | |
|---|---|
| பார்ப்பனரல்லாதாருக்கு | 6 |
| பின்னணிப் ,, | 2 |
| பார்ப்பனர்கட்கு | 2 |
| ஆதிதிராவிடர்கட்கு (Scheduled classes) | 2 |
| முகம்மதியர்கட்கு | 1 |
| கிருத்தவர்கட்கு (ஆங்கிலோ, இந்தியர் உட்பட) | 1 |

என்பதாக ஒதுக்கப்படவேண்டும். இன்னும் தெளிவாகக் கீழ்க்கண்டவாறு கூறலாம்.

| இடவரிசை. | வகுப்பு. |
|---|---|
| 1. | பார்ப்பனரல்லாதார் |
| 2. | ஆதித்திராவிடர் |
| 3. | கிருத்தவர் (ஆங்கிலோ இந்தியர்) |
| 4. | முகம்மதியர் |
| 5. | பார்ப்பனர் |
| 6. | பின்னணிப் பார்ப்பனரல்லாதார் |
| 7. | பார்ப்பனரல்லாதார் |
| 8. | ,, ,, |
| 9. | ஆதித்திராவிடர் |
| 10. | பின்னணிப் பார்ப்பனரல்லாதார் |
| 11. | பார்ப்பனரல்லாதார் |
| 12. | கிருத்தவர் |
| 13. | பார்ப்பனர் |
| 14. | பார்ப்பனரல்லாதார். |

முதலாவது இடத்திற்கு ஒரு பார்ப்பனரல்லாதார் தெரிந்தெடுக்கப்படவேண்டும். இவ்வாறு பிரித்து எடுப்பது பார்ப்பனரல்லாதாருக்குச் சாதகமானது. மற்றவர்களுக்கு, அதாவது ஆதித் திராவிடர், கிருத்தவர், பின்னணி வகுப்பார் ஆகியவர்களுக்குப் பாதகமானது.

இதுபோன்றே, இரண்டாவது இடத்திற்கு ஒரு ஆதித்திராவிட வகுப்பாரைப் பிரித்து எடுப்பதானது அவ் வகுப்பாருக்குச் சாதகமானதும், மற்ற வகுப்பார்களுக்குப் பாதகமானதுமாகும்.

இதுபோலவே ஐந்தாவது இடத்திற்கு ஒரு பார்ப்பனரைப் பிரித்து எடுப்பதானது, பார்ப்பன வகுப்பாருக்குச் சாதகமானதும், மற்ற வகுப்பாருக்குப் பாதகமானதுமாகும்.

இவ்விதமாகவே, ஒவ்வொரு சுற்று வரும் போதும் ஒவ்வொரு இடத்தையும் நிரப்புகையில், ஒரு வகுப்பாருக்குச் சாதகமும் மற்ற வகுப்பார்களுக்குப் பாதகமுமாகவே இருக்கும். மொத்தத்தில் பார்க்கப்போனால், இம்முறையானது எல்லா வகுப்பார்களுக்கும், சாதக பாதகம் இரண்டும் உடையதாக இருப்பது புலப்படும். ஆகவே இம்முறை, அரசியல் சட்டத்தில் கூறப்பட்டுள்ளபடி பிரித்துவைத்து வேற்றுமை காட்டுகின்றதென்று கொள்ளப்படலாமா?

### நிர்வாகத் துறையில்

மேலும், சென்னை உயர்நீதி மன்றத் தீர்ப்பின் படி நிர்வாகத்தில் ஏற்படக்கூடிய தொல்லைகளும் பல.

200-மாணவர்களுக்கே இடமுள்ள ஒரு கல்வி நிலையத்தில் சேருவதற்கு 1000-விண்ணப்பங்கள் வந்திருக்கின்றன. தகுதியாளர்களை வடிகட்டக்

கூடிய பல பன்னுடைகளால் வடிகட்டிய பின்பும் 500 பேர் தகுதி பெறுகின்றனர். இவர்கள் யாவரையும் சேர்த்துக்கொள்ள இயலாது. 300 பேரைக் கழித்தாகவேண்டும். இந்நிலையில், மாணவர்களைச் சேர்க்கும் பொறுப்பாளர் எந்த முறையைக் கையாள்வது? அவரவரின் விருப்பு, வெறுப்புக்கு விடப்படுவதா?

மாணவர்களைச் சேர்க்கும் அதிகாரி பார்ப்பனரல்லாதாரானல் அவ்வகுப்பாரையும், பார்ப்பனரானல் அவ்வகுப்பாரையும், வேறு வகுப்பாரானல் அவரவர் வகுப்பினரையுமே சேர்த்துக்கொள்வர். இதுபற்றி அரசாங்கம் அவரைக் கேள்வி கேட்டால், அரசியல் சட்டத்தின் அடிப்படை உரிமைகளின்படியே தகுதியுள்ள 200-பேரைச் சேர்த்திருக்கிறேன் என்று பதில் கூறக்கூடும். அரசாங்கமும் சாதி, சமூகம் என்ற காரணங்களைக் கொண்டு ஏதும் செய்ய முடியாது.

மற்றும் ஒவ்வொருவரும் ஒவ்வொரு முறையைக் கையாளலாம். ஒருவர் சொல்லலாம், அபாஸ் அலி, ஆப்ரகாம், அச்சுதன், ஆனந்தராமன், அண்ணுமலை போன்ற அகரவரிசையில், பெயர்களைப் பொறுக்கி எடுக்கிறேன் என்று. மற்ரெருவர், தேதிவாரியாக விண்ணப்பங்களைப் பொறுக்கி எடுக்கிறேன் என்று கூறலாம். பெண்களும், ஆண்களும் சேர்ந்து படிக்கக்கூடாது என்ற கருத்துடையவர்—பெண்களைச் சேர்க்க மறுக்கலாம். இப்படி மனித அறிவு எத்தனையோ 'குயுத்திகளில்' செல்லலாம். இந்த விபரீதச் செயல்களைத் தடுக்கவேண்டாமா? தடுப்பதென்ருல், சர்க்கார் எந்த முறையைப் பின்பற்றுவது?

உதாரணமாக, யூனியன் சர்க்காருக்கு 500 இராணுவ அதிகாரிகள் தேவை என்று வைத்துக்

கொள்ளுங்கள். டேராடன்னில் உள்ள இராணுவக் கல்லூரியைப்போல் ஒரு பயிற்சிக் கல்லூரி ஏற்படுத்துகிறார்கள் என்றும், இதில் ராஜபுத்திரர்கள், சீக்கியர்கள் கூர்க்கர்கள்தான் சேர்க்கப்படலாம் என்றும் முறை வகுத்து அவர்களைமட்டும் சேர்க்கிறார்கள் என்றும் வைத்துக்கொள்வோம். இது, அரசியல் சட்டத்தின் 15-வது கட்டளை முதல் பிரிவின்படியும், 29-வது கட்டளை 2-வது பிரிவின் படியும் குற்றமானதாகும் என்று கூறப்படலாமா?

கல்லூரிகளில் சேருவதற்கு மாணவர்கள் படும் தொல்லையை நீக்கவும், ஒரே இடத்தில் வந்து குழுமுவதைத் தடுப்பதற்கும், அந்தந்த மாவட்டங்களில் கல்லூரிகளை ஏற்படுத்தி அந்தந்தப் பகுதியிலுள்ளவர்களை மட்டும் சேர்க்க வேண்டும் என்று அரசாங்கம் உத்திரவு பிறப்பித்தால், இவ்வாறு செய்வது, இந்த இடத்தில் பிறந்தான் என்று பிரித்துவைப்பது, அரசியல் சட்டத்தின் 15-வது கட்டளை முதல் பிரிவுக்கு முரணானது என்று கூறலாமா?

இன்றுள்ளபடி, பிர்ஹாம்பூரிலிருந்து வரும் ஒரு மாணவனைக் கண்ணனூரில் உள்ள ஒரு கல்லூரியில் சேர்க்க வேண்டும். சென்னைப் பல்கலைக் கழகத்தில் சென்னை மாணவனுக்குள்ள ஒரு இடத்தில், கிழக்கு பஞ்சாப்பைச் சேர்ந்த ஒரு மாணவன் சேரவேண்டுமென்றால் சேர்க்கப்பட வேண்டுமல்லவா?

மற்றும் சிறுபான்மையினர் தங்கள் பிள்ளைகளுக்கென நடத்தும் தனிப்பட்ட சமயக் கல்லூரிகளுக்கு, அரசாங்கம் பொருள் உதவி செய்து வருகின்றதென்று வைத்துக் கொள்வோம். அதில், அவ்வகுப்பைச் சேராத மாணவன் ஒருவன் சேர்ந்து பயில விரும்பினால், அதை அக்கல்லூரி நிர்வாகிகள் தடுக்க முடியாதல்லவா?

எனவே, இதுதான் இன்றுள்ள அரசியல் சட்டம் என்றால், இதைமாற்றி (திருத்தி) யமைப்பதற்கும் இதுவே தக்க வாய்ப்பும் சமயமும் ஆகும்.

ஆம், அறிஞர் பெருந்தகை தம் அறிக்கையை முடித்துள்ளவாறே தீர்ப்பின் விளைவு குறித்துப் பெரும்பாலான பொதுமக்களும் கருதியுள்ளனர்.

## அரசியல் திட்டம் உருவான விதம்

இவ்வாறு, விவாதத்திற்கும் வேதனைக்கும் காரணமாக உள்ள அரசியல் சட்டத்தின் 29-வது கட்டளை 2-ம் பிரிவு, சட்டத்தில் இடம் பெறச் செய்யப்பட்ட செய்தியே கூட, அதைக் கொண்டுவந்தவர்களின் நீண்டநாள் திட்டத்தின் விளைவு என்பதைக் காட்டுவதாகும். அதைப் புகுத்திய பெருமைக்குரியவர்கள் சட்ட நகல் கமிட்டி உறுப்பினர்களாக இருந்த அல்லாடி கிருஷ்ணசாமி ஐயர் அவர்களும், டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் அவர்களுமே ஆவர்.

அவர்களின் இந்த 'நல்லெண்ணத்தின் பாற்பட்ட செயலைக் குறித்துச் சென்னை மேல்சபையில் திரு. பி. நாராயணசாமி நாயுடு, எம். எல். சி. அவர்கள் பேசுகையில்

"புதிய அரசியல் வகுக்கப்படும்போது, இந்தக் 'கம்யூனல் ஜி. ஒ' வுக்குப் பாதகமான பிரிவுகளை நீக்கிவிட வேண்டுமென்று நானே ஓர் திருத்தம் கொண்டுவந்தேன். அப்படி இருந்தும் இப்பிரிவுகள் அச்சட்டத்தில் சேர்க்கப்பட்டுவிட்டன. இவைகள் எப்படி இந்தச் சட்டத்தில் நுழைக்கப்பட்டன என்பதை அரசாங்கம் கண்டுபிடிக்கவேண்டும். மேலும் இவ் வழக்கில் வெற்றி கண்டோர்

பலன் காணாதமுறையில், சென்னை அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும்."

என எச்சரிக்கையும் வேண்டுகோளும் விடுத்துள்ளார்.

அதுமட்டுமன்றி, புதிய அரசியல் சட்டத்தின் நகலைத் தயாரித்த குழுவில் இடம் பெற்றவர்கள் யார் யார் என்பதை அறிவதும் அவசியம். அக் குழுவின் தலைவர், டாக்டர் பி. ஆர். அம்பேத்கார். மற்ற உறுப்பினர்கள், ஸ்ரீமான்கள் அல்லாடி கிருஷ்ணசாமி ஐயர், என். கோபாலசாமி ஐயங்கார், கே. எம். முன்ஷி, என். மாதவராவ், டி. பி. கைத்தான், சையது மகமது சாதுல்லா, டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் ஆகியோராவர். உறுப்பினர் அறுவர்களில் நால்வர் பார்ப்பனர். தென்னாட்டின் பிரதிநிதிகளாகச் சென்ற மூவருமே பார்ப்பனர். இவர்களின் கருத்தின்படித்தான் நகல் சட்டம் தயாராயிற்று.

அந்த நகலே, 1946-ல் அமைக்கப்பட்ட அரசியல் நிர்ணயசபையில், பல திருத்தங்களோடும் சில கட்டளை நுழைப்புக்களோடும் நிறைவேற்றப் பட்டு, 1950 ஜனவரி 26-ல் இந்தியாவின் புது அரசியல் சட்டமாக நடைமுறைக்குக் கொண்டுவரப் பட்டது. அதன் பலனைத்தான் திராவிடமக்கள் உயர்நீதிமன்றத்தின் தீர்ப்பின் மூலம் இன்று அடைந்துள்ளனர்.

புது அரசியல் சட்டத்தின் நகலை உருவாக்குவதில், தமது ஆதிக்கம் நிலைக்கும்படிக் கவனித்துக்கொள்ளப் பார்ப்பனர்கள் பெரும்பான்மையாக (மெஜாரிட்டி 7 ல் 4) இருந்தார்கள் என்பது மட்டுமன்றி, அதனால் ஏற்படக்கூடிய தீமைகளைக் கண்டறிந்து, திருத்தம் கொண்டுவரக்கூடிய தகுதியுடையவர்களும், நாட்டுக்குரியவர்களின் பிரதிநிதி

களும் ஆனவர்கள், அந்த அரசியல் நிர்ணய சபை யில் இடம்பெறவில்லை என்பதும் உண்மையாகும்.

### தேர்தல் நடந்த விதம்

புதிய அரசியல் சட்டத்தை நிறைவேற்றி யுள்ள, அரசியல் நிர்ணய சபையின் உறுப்பினர் களோ பொதுமக்களால் நேரடியாகத் தேர்ந் தெடுக்கப் பட்டவர்களல்ல. அவ்வுறுப்பினர்கள், அதற்குமுன் நடைபெற்ற பொதுத் தேர்தலில் மாகாண சட்டசபை உறுப்பினர்களாக வந்தவர் களால் தேர்ந்தெடுக்கப் பட்டவர்களாவார்கள். அதாவது, அரசியல் நிர்ணய சபையே நேரடித் தேர்தலால் அன்றி மறைமுகத் தேர்தலால் (Indirect Election) அமைந்ததாகும். அதுமட்டு மன்றி, அந்த மறைமுகத் தேர்தலும் கூட, உரி மைக்கு இடமின்றி மேலிடத்துக் கட்டளை நிறை வேற்றச் சடங்காகவே முடிந்ததாகும். மேலிடத் திலிருந்து பொறுக்கி எடுக்கப்பட்டவர்கள் மட்டுமே தேர்ந்தெடுக்கப்படும்படி, ஒவ்வொருவருக்கும் இவ் வளவுபேர் வாக்களிக்கவேண்டும் என்று கட்டளை யிட்டு அம்முறையிலேயே ஒற்றை மாற்று ஒட்டுக் களைப் பதிவு செய்து 'சுதந்திர சாசனத்தைத் தயாரிக்கும்' குழுவின் தேர்தல் நிறைவேறியது.

தேர்தலில், பொதுமக்கள் பிரதிநிதிகள் என்று சொல்லிக்கொள்பவர்களே, உரிமையோடு வாக்கு அளிக்கவில்லை, வாக்களிக்க வழியும் இல்லை. ஆனால் அ. நி. சபை மட்டும் நிரப்பப்பட்டுவிட்டது.

உதாரணமாக, சென்னைக்கு உரிய 52-இடங் களில், கிருத்தவர்கட்கும் முஸ்லீம்களுக்கும் உரிய 7-இடங்கள் தவிர்த்த 45-இடங்கட்கும், மேலிடத் தின் விருப்பப்படி தேர்ந்தெடுக்கப்பட்டவர்களில் 15-பேர் பார்ப்பனர், 7-பேர் ஆதித்திராவிடர்,

3-பேர் இருந்தவர், 20-பேர் மட்டுமே பார்ப்பனரல்லாதார். நூற்றுக்கு 3-பேராக உள்ளவர்களுக்கோ 15-இடங்கள், 70-பேராக உள்ளவர்களுக்கோ 20-இடங்கள் மட்டுந்தான். அதுவே, பார்ப்பனர்களுக்கு ஒரு பெருங்கொண்டாட்டமாக அமைந்தது. அதிலும், பார்ப்பனர்களில் திறமைமிக்கவர்களும், மற்றவர்களில் 'அது' குறைந்தவர்களுமே பெரிதும் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தனர்.

அதுமட்டுமின்றி, மேலிடத்துக் கட்டளையை நிறைவேற்றும் முறையில், நடைபெற்ற மறைமுகத் தேர்தலில் வாக்களித்த சட்டசபை உறுப்பினர்களேனும், பொதுமக்கள் எல்லோருக்கும் பிரதிநிதிகளாவார்களா என்றால், இல்லை என்ற பதிலே கிடைக்கும். அப்பொழுது வாக்காளர்களாக இருந்தவர்களே 100-க்கு 11 பேர்கள்தான். அவர்களுள்ளும் வாக்கு அளிக்காதவர்கள், எதிர்த்தவர்கள் ஆகியோரது தொகையை நீக்கினால் அந்தச் சதவிகிதம் மேலும் குறையும்.

இந் நிலையில், அரசியல் நிர்ணய சபை பொது மக்கள் எல்லோரின் முழுச்சம்மதம் பெற்றதேயாகும் என்றோ, அங்கு நிறைவேற்றப்பட்ட 'அரசியல் சட்டம்' அனைவரையும் கட்டுப்படுத்தும் எனினும் அனைவரையும் திருப்தி செய்வதாகும் என்றோ எப்படிக் கூறமுடியும்?

இவ்விதச் சிறப்புக்களோடு கூடிய அரசியல் நிர்ணய சபையில் நிறைவேறிய அரசியல் சட்டத்தின் படிதான், அதைத் தீட்டும் குழுவிலேயும் திருத்தும் சபையிலேயும் இருந்தவர், தனது அரிய சாதனையைத் தம் 'சோதராள்' கண்டு பூரிக்கட்டும் என்ற நினைப்பிலே போலும், உலகம் என்ன கூறும் என்பதைக் கூட இலட்சியம் செய்யாமல்,

ஒரு பார்ப்பன மாணவரின் சார்பில் வழக்கினைத் தொடுத்தார்.

## அல்லாடியாரின் வீரம்!

'கம்யூனல். ஜி. ஓ.' காரணமாக இடம் கிடைக்காத மாணவர்கள் பார்ப்பனர் மட்டுமல்ல, மற்ற வகுப்பினரும் உண்டு. அல்லாடியார், அவர்களில் ஒருவரைப் பிடித்தே கூட வழக்குத் தொடுத்திருக்கலாம். தம் வகுப்பாருக்குத் தாம் பாடுபடுவது வெளிப்படையாகத்தான் தெரியட்டுமே, இனிமேல் கூடவா 'மற்றவாள்' தயவை நாடித் தன் உயர்வைத் தேடவேண்டும்? தம் இனத்தாரைக் காக்கக் கூடவா, இலை மறைவு காய் மறைவு பார்ப்பது என்று எண்ணியிருப்பார் போலும்!

வழக்கை நடத்திய நோக்கங் கூட, எந்த மாணவர்களுக்காக வழக்காடப்பட்டதோ, அவர்களுக்கு இடம் கிடைக்கவேண்டும் என்பதை விட, 'தர்மம்' நிலை நாட்டப்பட வேண்டும் என்பதுதான் என்று தோன்றுகின்றது. வெற்றிபெற்ற அவ்விரு மாணவனும், மாணவியுங்கூட அக் கல்லூரிகளில் இப்பொழுது சேர்ந்து பயிலவில்லை என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

வழக்குத் தொடுப்பதற்கு முன்பே, தமது இலட்சிய வெற்றியைக் குறித்து, சென்னை மாகாணக் கல்லூரியில் பேசிய அல்லாடி கீழ்க்கண்டபடி வெளியிட்டுள்ளார்: "இந்த அரசியல் அமைப்பில் காணப்படும் முக்கிய அம்சங்களில் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவ ஒழிப்புத் திட்டமும் ஒன்றாகும். இந்த முறை இருந்து வந்துள்ளதாலேயே, நாட்டில் தொல்லைகள் பல தொடரலாயின. இதனால் வகுப்புப் பிரச்சினைகள் தீரா. மக்கள் தங்கள் மனத்திலிருந்தே வகுப்பு வாதத்தை ஒழித்தாக

வேண்டும். அவர்கள் இந்திய அரசியலிடம் உண்மையான பற்றுக் கொள்ளவேண்டும்.'' வகுப்பு வாதத்திலேயே ஊறி உயர்வு பெற்ற அல்லாடியார் தான், ஊருக்கு இந்த உபதேசத்தைச் செய்யலானர், வகுப்பு நீதிச் சட்டத்தை ஒழித்துவிடச் செய்துள்ள திட்டத்திற்கு ஒத்திகையாக. ஆம், அப்பொழுது அவர் எண்ணியிருக்க மாட்டார் அதனல் ஏற்படக்கூடிய விளைவுகளை. அவர்மட்டுமல்ல, அக்ரஹாரமேகூட, வழக்கிலே வெற்றிகிடைத்த பின்தான் அதன் விபரீதத்தை உணர்ந்து வாயடைத்துப் போயிற்று.

தாம் வெற்றிபெற்றும் அதை வெளியிலே கூறமுடியாத நிலை 'அவர்களைப்' பொருத்தவரையில் இதுவே முதல்தடவையாகும். அந்த 'மௌனத்தைக்' கலைக்கத் துணிந்து முன்வந்த மேதாவிகள், ஸ்ரீமான்கள், முன்னுள் மந்திரி கே. பாஷ்யம் ஐயங்காரும், 'சுதந்தரா' ஆசிரியர் காசா. சுப்பாராவுமே யாவர். அவ்விருவரும் ஆரியகுல வீரதீர அசகாய சூரர்கள் என்பதை எப்படித் 'தம் இனத்தார்' தெரிந்துகொள்வது என்று எண்ணினர் போலும்.

### பாஷ்யம் ஐயங்காரின் தீரம்

அவ் வமயம், ஐயங்கார் பேசினர்: "நிர்வாகத்தில் திறமை குன்றி இருப்பதால்தான் மக்கள் வாழ்க்கைக்குப் பல்வேறு துன்பங்கள் ஏற்பட்டு இருக்கின்றன. சென்ற 25-வருடகாலமாக இருந்துவரும் கம்யூனல் ஜி. ஒ.வின் காரணமாகவே திறமையுள்ள மக்கள் நிர்வாகத்தில் இடம் பெறவில்லை. பிராமணர்கள் என்ற காரணத்தால் அவர்களைப் புறக்கணிப்பது தவறு,'' என்று.

பிராமணர்கள் திறமைசாலிகளாம்! அவர்களின் 'திறமை' ஆண்டவனை அவதாரம் எடுக்கச் செய்வதிலிருந்து ஆங்கிலேயருக்கு ஆரூடம் கூறுவதுவரை—எந்தெந்த அற்புதங்களைச் செய்துள்ளது என்பதை மக்கள் அறிவார்கள். அந்தத் 'திறமை'யாளர்கள் அடியோடு புறக்கணிக்கப் பட்டதால்தான் அரசாங்க நிர்வாகம் சீர் குலைந்து விட்டதாம். இன்றும் அரசாங்க அலுவலில் 100-க்கு 50-பேர் அளவுக்கு, அந்தத் திறமைசாலிகள் இருக்கிறார்களே? இருந்தும் அவர்கள் பங்கு அளவுக்குக்கூட ஏன் நிர்வாகம் சரியாக இல்லை? என்ன கூறுவார் முன்னாள் அமைச்சர்? அவர்கள் 'திறமை' இப்பொழுது வேறு நோக்கத்தோடு பயன்படுத்தப்படுகிறது என்பாரா? அல்லது அவர்களெல்லாம், "கோபத்தால்"— இன்றைய சர்க்காரோடு ஒத்துழைக்கவில்லை என்பாரா?

இவைகளுக்குப் பதில் கூறவேண்டிய அவசியமின்றியே, இந்தத் திமிர்வாதம் நிகழ்த்திய அதே பிரமுகர், இரண்டுமாதங்கள் பூர்த்தியாகு முன்பே தம் பேச்சை மாற்றிக்கொண்டார்.

1950-செப்டம்பர் 25-ல், "அரசியல் வகுப்பு வாதம்" என்ற தலைப்பில், சென்னையில் அதே ஸ்ரீமான் பாஷ்யம் பேசியது கீழே தரப்பட்டிருக்கிறது.

"இன்றுள்ள சாதிமுறை கட்டுப்பாடுகள் பிரிட்டிஷாரின் ஆட்சியுடன் வந்தவை. பார்ப்பனர்கள் சர்க்கார் உத்தியோகங்களில் பெருவாரியான எண்ணிக்கையிலிருந்ததால், சர்க்கார் பதவிகளுக்குத் தேர்ந்தெடுக்கும் முறையினலன்றிப் பார்ப்பனருக்கு எனத் தனியாகச் சில இடங்களை ஒதுக்கி வைத்துவிட வேண்டுமென்னும் முயற்சி 'இரட்டை ஆட்சிக்' காலத்தில் செய்யப்பட்டது.

பானகல் அரசர் முதலமைச்சராக இருந்தபோது, ஜஸ்டிஸ் கட்சியின் மிக முக்கியமான கொள்கையாக இருந்ததுவே இந்தக் கம்யூனல் ஜி. ஓ."

"4 அல்லது 5 சதவிகிதம் மக்கள் தொகையினைக் கொண்ட சிறு பான்மை வகுப்பினரான பார்ப்பனர்கள், பார்ப்பனரல்லாதாரின் தலைவர்களுடன் நடைமுறை ஒப்பந்தமொன்றைச் செய்து கொள்ள முன்வந்தாக வேண்டும். வழி வழி வந்த நிலைமையைக் கைவிட்டுப் பார்ப்பனர்கள் மற்றவர்களுடன் போட்டியிட முனைந்திருப்பது கண்டு நான் வருந்துகிறேன்."

மேலும் பல கருத்துக்களையும் பார்ப்பனர்களுக்கு அவர் கூறி இருக்கிறார். இவ்வுரையில் எவ்வளவுதான் ராஜதந்திரமும், மற்றவர்களை ஏமாறச்செய்யும் மந்திரமும் இருந்தபோதிலும், பொதுமக்களின் மனக்கொதிப்பு, திமிர்வாதம் பேசியவர்களையும் சாகசப் பேச்சிலே ஈடுபடச் செய்தது என்பதைத் தெளிவாக்குகின்றது. ஆனால், 'அவர்களின்' அந்த மாய மொழிகளில் பொதுமக்கள் மயங்காமல் இருக்கவேண்டும், மறுபடியும் வருந்தாமலிருக்க வேண்டுமானால்.

காசாவின் அரசியல் ஞானம்!

ஸ்ரீமான் காசா சுப்பாராவ் அவர்களோ பொது மக்களின் கிளர்ச்சியைக் கண்டு கொதிக்கலானார். "சர்வநீதி மன்றத்துக்கு விண்ணப்பிக்கவும், அங்கும் தீர்ப்பு கம்யூனல் ஜி. ஓ. வுக்கு இடமளிக்காவிடில் அரசியல் சட்டத்தையே திருத்தி அமைக்கவும்," என்று மக்கள் மன்றங்கள் தீர்மானித்ததும், அவ்வாறே செய்வதாக அமைச்சர்குழு வாக்களித்ததும் அவரால் பொறுக்கமுடியாதனவாயின. தமது வயிற்றெரிச்சலைத் தம்முடைய

ஏட்டிலேயே (சுதந்தரா) கொட்டிக்கொள்வாராயினர்.

"உயர்நீதி மன்றத்தின் தீர்ப்பை எதிர்த்து, சுப்ரீம் கோர்ட்டுக்கு அப்பீல் செய்து கொள்வதாயின் தாராளமாகச் செய்து கொள்ளலாம். ஆனால் இந்திய அரசியல் திட்டத்தைக் 'கம்யூனல் ஜி. ஓ' விற்குச் சாதகமாகத் திருத்தம் செய்வது மட்டும் கூடாது," என்று சர்வாதிகாரத் தோரணையில் கட்டளை இட்டுவிட்டு, அதற்குக்காரணம் என்ற நினைப்பில், "இன்று பெரும்பான்மையாக உள்ளவர்களின் விருப்பத்திற்காக, அரசியல் சட்டத்தை ஆணி வேரோடு பெயர்த்தெறிந்து விட்டால், நாளைவரும் பெரும்பான்மையானவர்கள் செய்யும் அதே காரியத்தை எப்படித் தடுக்க முடியும்? பெரும்பான்மையோரின் பொறுமை இன்மையைத் தடுத்துத் தாங்கிக் கொண்டால்தான், சிறுபான்மையோர் செய்யும் புரட்சிக்கு ஒரு தடுப்பாக அரசியல் சட்டம் இருக்கமுடியும்" என்று தீட்டுகிறார், படிப்பவர்கள் மிரண்டுவிடுவார்கள் என்ற எண்ணத்தில்! இதை எழுதியவரையும், இது நாள் வரை, ஏதோ மேதையாக எண்ணியிருந்தோமே என்று தான் படிப்பவர்கள் மிரட்சியடைந்திருப்பார்கள்.

அவரது கருத்தின்படி,

(1) பெரும்பான்மையோர் விருப்பத்திற்காகக் கூட அரசியல் சட்டத்தைத் திருத்தக்கூடாது.

(2) இந்த அரசியல் சட்டத்தை வருங்காலத்திலும் அந்தப் பெரும்பான்மையோரும் திருத்த அனுமதிக்கக்கூடாது.

(3) பெரும்பான்மையோரின் 'இந்தக் கிளர்ச்சியை' (பொறுமையின்மையை) தடுத்துத் தாங்

கிக் கொள்ளவேண்டும். (அடக்க வேண்டும்.) இல்லையானல் 'சிறுபான்மையோர்' புரட்சி செய்வார்கள் என்பது தெளிவாகிறது. இந்தப் பேருண்மைகளை அவர் எப்படித்தான் கண்டு பிடித்தாரோ தெரியவில்லை.

இந்த அரசியல் சட்டத்தை (மத இனப் பாது காப்புக்கு ஏற்ப அமைத்திருப்பதால்) ஆண்டவன் மீது சத்தியமாக யாரும் திருத்தக்கூடாதாம். மனு நீதி, வேதவாக்கு, தேவகட்டளை போலவே இது வும் ஏற்றுக்கொள்ளப்படவேண்டும்! சிறுபான்மை யினரின் பிரதிநிதிகளே பெரும்பான்மையினராக இருந்து செய்துள்ள இந்தச் சட்டத்தைப் பெரும் பான்மையினர் திருத்த என்ன உரிமை இருக் கிறது? அதுமட்டுமல்ல பெரும்பான்மையோரின் பொறுமை இன்மையைத் தடுத்துத் தாங்கிக் கொள்ளவேண்டும் அரசாங்கம். பெரும்பான்மை யோரின் எதிர்ப்பைத் தேடிக்கொள்ள வேண்டும். இவ்வளவும் நடைபெருவிடில் சிறுபான்மையோர் (வேதமோதிகளோ, அவர்தம் அடிமைகளோ, வேறு எவரோ) புரட்சி செய்வார்கள். யாககுண் டத்தில் தீமூட்டி—இந்த உரைகளை, தேவகட்டளை யாகக் கொள்ளாதவர்களை யெல்லாம்—நீருக்கிவிடு வார்கள். இதுவே அவரது உள்ளப் படப்பிடிப்பு. இதைக் கேட்டு அஞ்சும் அளவுக்கு இன்றைய மக் கள் மூட நம்பிக்கையில் ஆழ்ந்திருக்கவில்லை.

'மக்கள் ஆட்சி' மலரும் காலம் இது. குடி மக்களால், குடிமக்களுக்காக குடி மக்களைக் கொண்டே நடத்தப்படும் ஆட்சி. மேலும் நல் லாட்சியாக அமைய திட்டமிடும் காலம் இது. பார்ப்பனர்களாலும் அவர்தம் அடிமைகளாலும், பார்ப்பனர்களுக்கென்றே, பார்ப்பனர்களைக் கொண்டோ அவர்தம் அடிமைகளைக் கொண்டோ

நடத்தப்பட்டுவந்த பார்ப்பனீய இருளாட்சி, பகுத்தறிவுப் பகலவனின் ஒளியால் மறைந்தொழியும் காலம் இது. என்றாலும் மேல்நாடுகளையெல்லாம் சுற்றித்திரிந்தவரும், அனுதினமும் ஆங்கிலத்திலேயே ஊறுபவருமாகிய, காசா, பிராமணராகப் பிறந்துவிட்ட ஒரே காரணத்தால் இவ்வாறு திட்டத் துணிந்தார்.

'அரசியல் சட்டம்' திருத்தக்கூடாததோ, மாற்றக் கூடாததோ அல்ல. மக்களின் நல்வாழ்க்கைக்காகவே 'சட்டம்' தேவைப்படுகிறது, மக்களின் வாழ்க்கை காலச் சுழற்சியில் மாறுகின்ற போது, தேவைகளும் மாறுகின்றன. மக்களின் தேவைகளைக் கருத்தில் கொண்டு அவ்வப்பொழுது புதுப்பிக்கப்பட்டுவரும் சட்டமே உயிர்ப் பண்புடையதாகும். மக்கள் வாழ்க்கை வளம்பெற, காலத்திற்கேற்ப சட்டம் திருத்தப்பட்டே ஆக வேண்டும். நிலைத்துப்போன சட்டமோ செத்துப் போன சமூகத்தின் பாடையேயாகும்.

சட்டத்திலுள்ள ஏற்பாடு.

புது அரசியல் சட்டத்திலோ, அதைத் திருத்துவதற்கான ஒரு ஏற்பாடும் இருக்கிறது, அதன் 20-வது பகுதியிலுள்ள 368-வது கட்டளையில்,

"இந்த அரசியல் சட்டத்தைத் திருத்துவதென்றால், பாராளு மன்றத்தைச் (Union Parliament) சேர்ந்த ஏதாவது ஒருசபையில் அதற்கான தீர்மானம் (மசோதா) கொண்டு வரப்பட்டு, ஒவ்வொரு சபையிலும், அதைச் சேர்ந்த மொத்த உறுப்பினர்களில் பெரும்பான்மையினராயும், (மெஜாரிட்டி) கலந்துகொண்டுள்ள உறுப்பினர்களில் மூன்றில் இரண்டு பங்குக்குக் குறையாதவர்களாயும் உள்ளோரது ஆதர

வுடன் நிறைவேற்றப்படுமானல், அது குடியரசுத் தலைவரின் (ஜனதிபதி) ஒப்புதலுக்கு விடப்பட வேண்டும். அவரது ஒப்புதலைப் (அங்கீகாரம்) பெற்ற பிறகு அரசியல் சட்டம், அந்த மசோதா வின்படி திருத்தப்பட்டதாகும்.'' என்று கூறப் பட்டுள்ளது.

பெரும்பான்மையோர் விரும்பினலும், அர சியல் சட்டத்தைத் திருத்துவது அடாத செய்கை, என்று கருதப்பட்டிருக்குமானல், இக் கட்டளை ஏன் இடம்பெற வேண்டும்?

### உரிமையும் தேவையும்

அரசியல் சட்டத்தைத் திருத்துவது என்பது, அகில உலகத்தாலும் ஒப்புக்கொள்ளப்பட்ட உரி மையேயாகும். மொழி, கலை, நாகரிகம், பண்பாடு ஆகியவற்றில் வேறுபடாத 9 கோடி மக்களை மட் டுமே கொண்ட அமெரிக்க நாட்டு அரசியல் சட் டம் இதுவரை 21 முறை திருத்தப்பட்டுள்ளது. இங்கோ நிலைமையோ வேறு. மொழி, கலை, நாக ரிகப் பண்பாடுகளிலே மட்டுமின்றி, இனத்தாலும் இயல்பாலும் பல்வேறு முரண்பாடுகளுக்கு ஆட் பட்ட தனித்தனியான கூட்டங்களாக மக்கள் உள் ளனர். அப்படி யுள்ளவர்களும் ஏறத்தாழ 30 கோடி பேர். இந் நிலையில் 'புது அரசியல் சட் டமோ' மாகாண உரிமைகளையும் குறைத்து யூனி யன் சர்க்காரின் அதிகாரத்தை அதிகப்படுத்தி, சிறு, சிறு உரிமைகளுக்குங் கூடப், பாராளுமன் றத்தைக் கொண்டே செயலாற்ற வேண்டிய நிலை யில் மக்களை வைத்துள்ளது. வர்க்கத்திற்கு ஒரு வட்டாரமும் அதற்கென்று ஒரு பாராளுமன றமும் தனி அரசியல் சட்டமும் அமையாத நிலையில், பல வர்க்கங்களும் பிணைக்கப்பட்டு அமைக்கப் பட் டுள்ள அரசியல் சட்டம், பலப்பல திருத்தங்களுக்கு

இடம் தந்தே தீரவேண்டும். 'ரப்பர்' போல இழுக்க நீளத்தான் வேண்டும். இல்லையானால் 'கயிறு' போல அறுந்துபோகத்தான் நேரிடும்.

சிறுபான்மையினரின் எடுபிடிகளாக, ஏவல் தொண்டினராக, எதிர்த்துப் பேசாத மௌடிக ளாக ஆக்கப்பட்டுக் கிடந்த பெரும்பான்மையினர் தான், தென்னாட்டைப் பொருத்தவரையில் இன்று விழிப்புணர்ச்சி யடைந்து, இழந்த வாழ்வை மீட் டுக்கொள்ள, சட்டப்படியான வகுப்புரிமையை மறுபடியும் நிலைநாட்ட முரசு கொட்டுகின்றனர். அந்தப் பெரும்பான்மையினரின் உரிமை முழக் கந்தான், காசாவைக் கருத்திழந்து தீட்டச் செய் திருக்கிறது. எனினும் காசாவும் அவர்தம் இனத் தவரில் பலரும், தமது தவறான கருத்தையும் போக்கையும் இப்பொழுதேனும் மாற்றிக் கொண்டு, பெரும்பான்மையினராகிய பிற்படுத்தப் பட்டவர்களுக்கு 'நல்லது ஆற்றாவிடினும் அல்லது செய்தல் தவிர்ப்பாராயின்' அதுவே அவர்கள் நாட்டிற்குச் செய்யும் நற்பெருந் தொண்டாகும்.

மத்திய சர்க்காரின் தீர்மானம்

இவ்வாறு தென்னாட்டுப் பெருங்குடி மக்கள், தலைக்குமேல் வந்த விபத்தைத் தவிர்ப்பதற்கு முனைந்து நிற்கும்போதே, இந்திய சர்க்கார் 14-9-50-ல் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவ உரிமை குறித்து ஒரு புதிய முடிவு செய்தது. அதன்படி, "தாழ்த்தப்பட்ட சாதியினர், மலைசாதியினர், ஆங் கிலோ இந்தியர் ஆகியோருக்கு மட்டுமே இனி இந்திய சர்க்கார் ஊழியங்களில் இடங்கள் ஒதுக்கி வைப்பது" என்றும், "புது அரசியல் சட்டப்படி, தாழ்த்தப்பட்டோர், மலைசாதியினர், ஆங்கிலோ இந்தியர், பிற்பட்ட வகுப்பார், ஆகியோரைத் தவிர்த்து மாகாண சர்க்கார் பதவி நியமனங்கள்,

மதம், இனம், சாதி, பால் ஆகியவற்றின் அடிப்படையில் எவ்வித வேறுபாடுகளும் கையாளப்படக்கூடாது' என்றும் தீர்மானித்துள்ளதாக அறிவிக்கப்பட்டது.

மேலும், "இந்துக்கள், முஸ்லீம்கள், சீக்கியர், தாழ்த்தப்பட்டோர் ஆகியோருக்கு மட்டும் மாகாண சர்க்கார் உத்தியோகங்களில், போட்டி வைக்காது பதவியளிப்பதற்கும், விகிதாச்சாரப் பிரதிநிதித்துவம் அளிக்கவேண்டியதற்குமுரிய சட்டங்கள், மத்திய சர்க்காரால் கைக்கொள்ளப்பட்டன" என்றும் தெரிவிக்கப்பட்டது.

தாழ்த்தப்பட்டவர்களுக்கும், ஆங்கிலோ இந்தியர்களுக்கும் எக்காரணங்களைக் கொண்டு மத்திய அரசாங்க ஊழியத்தில் இடம் ஒதுக்கப்பட்டதோ, அதைவிட அதிக காரணங்களைக் கொண்ட, தென்னாட்டுப் பெருங்குடி மக்களுக்கு (திராவிடர்களுக்கு) மட்டும், மத்திய அரசாங்க ஊழியத்தில் இடம் ஒதுக்கப்படாதது ஏன்? "தென்னாட்டுப் பார்ப்பனரல்லாதார் தான், அரசியல் அனாதைகளாயிற்றே; அவர்கள் சார்பில் பேச, வாதிட, யார் முன்வரப் போகிறார்கள்" என்ற எண்ணம் போலும்.

மாகாண அரசாங்கத்திலோ, பிற்பட்ட வகுப்பார், என்ற காரணத்தோடு கூடிய பெயரால் இடம் ஒதுக்கிவைப்பதற்கு வழி இருக்கிறது என்றாலும், வகுப்பு நீதியை அடிப்படையாகக் கொண்ட சட்டத்தின் வடிவம் நிலைக்குமா என்பது ஐயந்தான்.

இந்துக்களும் முஸ்லீம்களும் சீக்கியர்களும் வெவ்வேறு மதத்தவர்களாதலினாலும், தாழ்த்தப்பட்டோர் சமூகத்தில் ஒடுக்கப்பட்டுள்ளதனாலும், 'விகிதாச்சாரம்' அளிக்கப்படுவது அவசியம் என்

பதை ஒப்புக்கொள்ளும் எவர்தான், அவர்களை விட வேறுபட்டும், ஒடுக்கப்பட்டும் உள்ள மற்ற வகுப்பாருக்கு "விகிதாச்சார உரிமை" தேவை யில்லை என்று கருத முடியும்?

'**இந்து**'—பல ரகம்.

இங்கு 'இந்துக்கள்' என்று கூறப்பட்டுள்ள எல்லோரும் ஒரே 'சமயத்தவரா? (இந்துமதமே ஒரு சமயம் அல்லவே.) ஒரே இனத்தவரா? ஒரே கலை, மொழி, நாகரிகப் பண்பினரா? அல்லது ஒரே முறை வாழ்க்கையினரா? என்பதையெல் லாம் எண்ணிப்பாராமலே, ஒரே காட்டிலே திரிந் தவை என்ற காரணத்திலேயே, நரியையும் பரியை யும், நாயையும் பூனையையும் ஒரே கூண்டிலே அடைப்பதைப் போல, எல்லோரையும் 'இந்து' என்ற மதக்கூண்டிலே அடைத்துவிட்டு அவர் களில் வல்லவர்களை வாழவிட்டுவிடுவது எப்படி நியாயமாகும்?

மேலும், இந்துவுக்கும் முஸ்லீமுக்கும் உள்ள முரண்பாட்டைவிடப் பார்ப்பனருக்கும் அல்லா தாருக்கும் (வடமொழி வேதசாஸ்திர மனுநீதியைப் பின்பற்றும் ஆரியர்களுக்கும், தென் தமிழ் இலக் கியக்குறள் நெறியைப் பின்பற்றும் தமிழர்களுக் கும்) உள்ள முரண்பாடு அதிகம் என்பதும், இந் துக்களுக்கும் சீக்கியர்களுக்கும் உள்ள வேற்று மையைவிட, இந்து வருணங்களுக்கிடையிலே (நால் வகை சாதிகட்கும் இடையிலே) உள்ள வேற்றுமை ஏராளம் என்பதும், மற்றவர்களோடு நோக்க, தாழ்த்தப்பட்டவர்களின் நிலையை ஒத்தே, பார்ப் பனரோடு நோக்க அல்லாதார் நிலையும், வடநாட்டு இந்துவோடு நோக்க திராவிடரின் நிலையும் அமைந்துள்ளன என்பதும், மறுக்கமுடியாதவை களாகும்.

'இந்து மதத்தின் சூதுத் திட்டம்'

'வேற்றுமைகளின்' விளைவிடமாகவும்' 'முரண்பாடுகளின்' பிறப்பிடமாகவும், எத்தர்கள் சிலர் வாழப்பலரை ஏமாளிகளாக்கும்மடமாகவும் உள்ள மதமாகிய இந்து என்ற பெயர்ப் பட்டியலில் எப்படியோ இடம்பெறச் செய்யப்பட்டுவிட்ட காரணத்தாலேயே, 'இந்து' வாகக் குறிப்பிடப்படும் பல திறத்தாரும் விகிதாச்சாரப்படி உரிமைபெறக் கூடாது என்பது எண்ணம் போலும்.

'இந்து மதம்' என்ற பூதேவர்களின் சூழ்ச்சிப் பொறியில் சிக்கிச் சிதைந்தவர்கள் ஏராளம். அதில் அகப்பட்டோரின் உழைப்பும் உடமையும் மட்டுமன்றி உரிமையும் உணர்வும்கூட பூசுரர்களின் சுகபோக வாழ்வு நடைபெற சுரண்டப்பட்டு வந்துள்ளது பன்னெடுங் காலமாக. அதே கூட்டம் இப்பொழுதும் தம் ஆதிக்கத்தை நிலைநாட்டிக் கொள்ள அந்தச் "சூழ்ச்சிப் பொறியைக்" கூட அல்ல, அதன் பெயரான 'இந்து' என்ற சொல்லையே பயன்படுத்திக் கொண்டுள்ளது,

ஆம், 'இந்து' என்ற பெயருள்ளவரை, அதன் செல்வாக்கால் அவர்கள் மட்டுமே 'இகபர சுகம்' இரண்டையும் இணையின்றி நுகரவும், மற்றவர்கள் எல்லாம் இளித்தவாயர்களாக இருக்கவுமே நேரிடும்.

மதத்திலோ குருமார்கள், கல்வியிலோ ஆசான்கள், சமூகத்திலோ உயர் சாதியினர், பொருளாதாரத்திலோ சுரண்டல் இயந்திர சொந்தக்காரர்கள், அரசாங்க அலுவலிலோ அதிகாரிகள்—என்றுள்ள ஆதிக்க முறை நிலைத்து நிற்கவே வழி தேடிக்கொண்டுள்ளனர், 'இந்து' என்பவர்களுக்கிடையில் வகுப்புரிமை வழங்குவதங்கு இடமின்றிச்

சட்டம் செய்யவும், தீர்மானிக்கவும் செய்திருப்பது மூலமாக.

மேலும், இவ்வாறு தீர்மானிக்கப்படுவதற்குச் சில நாட்கள் முன்பே, மைசூர் சர்க்காருக்கு மத்திய சர்க்காரிடமிருந்து வந்த ஓர் அறிவிப்பில், "கல்வி நிலையங்களில் மாணவர்களைச் சேர்ப்பதில் எந்தவித சாதி, வகுப்பு வேறுபாடும் கவனிக்கப் படக் கூடாதென்றும், அவ்விதம் செய்வது அரசியல் சட்டவிதிக்கு முரணானது" என்றும் தெரிவிக்கப்பட்டது. இவ்வாறு தென்னாட்டுப் பார்ப்பனர்களின் முயற்சி, பலப்பல வடிவங்களைப் பெற்று வெளிவந்தபடி உள்ளன.

'சதியின்' சந்தோஷ ஆரவாரம்

ஆம்! இந்துமதம் என்ற 'சூதுப்பொறியில்' தயாரான அபூர்வக் கருவியே 'சாதி' என்பது. அந்த 'சாதி'யின் பெயரால், 'சமூக வாழ்வையே' 'சதிக்கு' ஆளாக்கலாம். ஆனால், அதே 'சாதியின்' பெயரால் இழைக்கப்பட்ட கொடுமையைத் துடைத்து, 'நீதியை' நிலைநாட்டுவது மட்டும் கூடாது, முடியாது. இந்நிலையிலே 'சட்டம்' ஆட்சி செலுத்துவது காண 'நீதி' கண்ணீர் விடுகிறது, கதறுகிறது. 'சர்க்கார்' இயந்திரமோ சுற்றியபடி இருப்பது கண்டு 'சதி' சந்தோஷ ஆரவாரம் செய்கிறது.

இந்நிலையில் 'கம்யூனல் ஜி. ஓ.'வை ஒழிப்பதற்காகவே மேலும் சில வழக்குகளும் தொடுக்கப்படலாயின.

தொடரப்பட்ட வழக்குகள்.

சென்னை, உயர்நீதி மன்றத்தின் முன், கம்யூனல் ஜி. ஓ. வின்படி அன்றித் தகுதிப்படி, தன்னை

என்ஜினியரிங் கல்லூரியில் சேர்த்துக்கொள்ளு மாறு சென்னை அரசாங்கத்திற்கு உத்தரவிட வேண்டுமென்று K. இராமன் என்பவர் விண்ணப் பித்துக்கொண்டார்.

காலங்கடந்து விண்ணப்பித்ததால், கல்லூரி யில் இடமில்லாத நிலையில், உரிமையை ஒப்புக் கொள்வதனுலேயே, அரசாங்கத்திற்கு உத்தரவிடு வது கட்டாயமில்லாததால், இந்த விண்ணப்பத் தைத் தள்ளிவிடுவதாகத் தலைமை நீதிபதியும், விசுவநாத சாத்திரியும் 29-9-50-ல் தீர்ப்பளித்த னர்.

அதுபோன்றே, மருத்துவக் கல்லூரியில் தன்னைச் சேர்த்துக்கொள்ள உத்தரவு செய்ய வேண்டுமென்று, மோஹன் பக்தா என்பவர் விண்ணப்பித்துக்கொண்டார். அவரது விண்ணப் பமும் தள்ளப்பட்டது.

ஜில்லா முன்சீப்களை பொறுக்கி எடுப்பதில், சென்னை சர்க்கார் 'கம்யூனல் ஜி. ஓ.' வைக் கைக் கொண்டது அரசியல் சட்டத்திற்கு முரண் என் றும், எனவே, தமது மனுவை மீண்டும் ஆலோ சனைக்குக் கொண்டுவர வேண்டும் என்றும், பீமா வரம், திரு. பீ. காமராஜு என்பவர் சென்னை உயர்நீதி மன்றத்தில் விண்ணப்பித்துக் கொண் டார். அதே காரணங்களால் மற்றொருவரும் விண் ணப்பித்திருந்தார். இவ்விரு விண்ணப்பங்களும், தக்க காரணங்கள் காட்டப்பட்டுத் தள்ளப் பட்டன.

நெல்லூர். வெங்கட்ராமன் என்பவர், கம்யூனல் ஜி. ஓ. காரணமாக ஜில்லா முன்சீப் பதவிக்குத் தன்னைப் பொறுக்கி எடுக்கவில்லை என்றும், அவ் வுத்தரவு நியாயமற்றது என்றும், கடந்த அக்டோ

பரில், அரசியல் சட்டத்தின் 32-வது கட்டளைப்படி சர்வநீதிமன்றத்தில் விண்ணப்பித்துக் கொண்டுள்ளார்.

சென்னை அரசாங்கமும், பொதுமக்களுக்கு வாக்களித்துள்ளபடி, சென்னை உயர்நீதிமன்றத்தின் தீர்ப்பின்மீது, சர்வநீதி மன்றத்துக்கு (அப்பீல்) விண்ணப்பம் செய்துகொண்டுள்ளது. அந்த அப்பீல் சர்வநீதி மன்றத்தின் வசதிகளை முன்னிட்டு சென்னை உயர்நீதி மன்றத்தின் மூலமாகவே ஏற்றுக்கொள்ளப்பட்டுமிருக்கிறது.

ஒருபுறம் கல்வித்துறையிலும் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் நிலைக்கவேண்டும் என்று பொதுமக்களின் சார்பில் அரசாங்கமும் அப்பீல் செய்துள்ள அதேசமயத்தில் ஆதிக்கவாதிகளோ, உத்தியோகத் துறையிலும் கம்யூனல் ஜி. ஓ. ஒழிக்கப்பட இதுவேதருணம் என்று வழக்குத் தொடுத்தபடி உள்ளனர்.

அரசியல் சட்டத்தின்படி, சர்வநீதி மன்றத்தின் தீர்ப்பே இறுதித் தீர்ப்பாகும். அதன்படி, வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத்துக்குச் சட்டத்தில் இடமில்லை என்று ஏற்படுமானல், அரசியல் சட்டத்தைத் திருத்துவதைத் தவிர வேறு வழியில்லை.

"திருத்தப்படவேண்டும்" என்பதே மக்களின் தீர்ப்பு. மக்கள் தீர்ப்பை எந்தக் குடியரசும் அலட்சியம் செய்யமுடியாது; செய்யும் எந்த ஆட்சியும் நிலைக்கமுடியாது.

### மக்களின் கடமை

எனவே, பொதுமக்கள் தமது உரிமையை நிலைநிறுத்த, அரசாங்கம் வாக்களித்துள்ளபடி செயலாற்றவும், வெற்றிகிட்டவும், அயராமலும்

மறவாமலும், அற்பர்களின் சூதுக்கு ஆளாகாம லும், உற்சாகத்தோடும் உறுதியோடும் தொடர்ந்து பணியாற்ற வேண்டும். "அரசியல் சட்டத்தைத் திருத்தியேனும் வகுப்புரிமையை நிலைநாட்டியேதீரு வோம்" என்ற உறுதியோடு, கட்சி வேறுபாடின் றித் தென்னடே ஒன்றுபட்டுத் தொடங்கியுள்ள இவ்வுரிமைக் கிளர்ச்சி வெற்றிபெறுமற்போகாது. 'வெற்றியின்றேல் வாழ்வும் இல்லை' என்பதை ஒவ் வொருவரும் உணர்ந்து வருகின்றனர். அந்த உணர்ச்சி பரவியபடி இருக்கிறது.

சர்வநீதி மன்றத் தீர்ப்பினலோ, அரசியல் சட்டத் திருத்தத்தினலோ, வகுப்பு நீதியை நிலை நாட்ட வழியில்லாது போகுமானல் இந்த 'முயற்சி' அத்துடன் நின்றுவிடாது. தென்னட்டார் வாழ் வில், உரிமையில் குறுக்கிடுவது எதுவானலும் அது வீழ்த்தப்பட்டேதீரும். வடநாட்டார் ஆதிக்கமே அதற்குத் தடையாக அமையுமானல், தென்னட் டார், அத்தடையை முறியடிப்பதற்காகத் தொடங் கும் அறப்போர், 'திராவிட நாடு திராவிடருக்கே" என்ற முழக்கமாக வளர்ந்து, தனி அரசியல் நிர் ணயசபையையே அமைக்கும் என்பதில் ஐய மில்லை.

இன்றைய ஆட்சி முறையால் வடவரின் அரசி யல், பொருளாதார ஆதிக்கத்திற்கு அடிமைப்பட்டு, சிக்கிச் சீரழிகிறேமே என்பதை முன்பே உணர்ந்து குமுறிக்கிடக்கும் காளைகள், இந்திய அர சியல் சட்டம் ஒரு பொன்விலங்கு, இரும்புத்தளை, நியாயமான உரிமைகளுக்காகக் கூட அதைத் திருத்துவதற்கும் இடமில்லை, என்று கண்டுகொள் வார்களானல் அதை உடைத்தெறியத் தயங்கமாட் டார்கள் திராவிட மக்கள் எத்தனை எத்தனை பிரி வாக இருப்பினும ஒன்றுபட்டுவிடுவார்கள், திரா

விடத்தின் விடுதலைக்காகத் துவக்கப்படும் அறப் போரின் முரசொலி கேட்டவுடன்.

அந்நிலை கூடாது என்று எண்ணுபவர்கள், சிறிதுகாலமேனும் நீட்டித்துச் செல்லக் கைக் கொள்ளக்கூடிய இறுதி முயற்சியெல்லாம் வகுப் புரிமைச் சட்டத்தை நிலைநாட்டச்செய்வதேயாகும். இது நிலைநாட்டப்படாவிடில், நிலை என்று எண்ணி யுள்ள வேறுபலவும் நிலையற்றுப்போய், புதியன பலவும் நிலைநாட்டப்பட்டே தீரும் என்பதை ஆட்சியாளர் நன்கு உணரவேண்டும்.

## வெற்றிக்குப் பின்

'வகுப்புவாரிப் பிரதிநிதித்துவ உத்தரவு' அரசியல் சட்டப்படி நிலைநாட்டப்பட்ட பின்னரும் நிறைவேற்ற வேண்டிய கடமைகள் சில உள்ளன. அவையாவன:—

(அ) பெயர் மாற்றம்

'கம்யூனல் ஜீ. ஓ.' பெயரளவில், வகுப்புக்களை நிலைநிறுத்தப் பயன் படுவதுபோல ஒலித்தாலும் நோக்கத்தாலும், பயனாலும் மதக் கொடுமையால் விளைந்த வகுப்பு வேற்றுமைகளையும், உயர்வு தாழ் வுகளையும் ஒழித்துச் சமூக சமத்துவத்தைத் தோற்றுவிப்பதாலும், பெயரைக்கொண்டே சிலர் தவறான கருத்தைப் பரப்பிவருவதைத் தடுப்பது அவசியமாதலாலும், கம்யுனல் (Communal) என்ற சொல்லுக்குச் சமூகத்தைப்பற்றிய (Pertaining to the Society) என்றொரு பொருளும் உளவாதலா லும், அதன் பெயர் "சமூக நீதிச்சட்டம்" அல் லது "சமூக சமத்துவச் சட்டம்" [Social Justice Law] என்றே இனி வழங்கச் செய்ய வேண்டும்.

(ஆ) வழங்கவேண்டிய காலம்

எத்தனை ஆண்டுகளானாலும், மதத்தினால் சமூக வாழ்வில் புகுத்தப்பட்டுள்ள கொடிய வேற்றுமைகளும், உயர்வு தாழ்வை நிலை நாட்டும் வர்ணாஸ்ரம தர்ம மனப்பான்மையும் ஒழிந்து, பார்ப்பானென்றோ பறையனென்றோ எவரையும் குறிப்பிடவும் இயலாத நிலை சட்டபூர்வமாக ஏற்படுகின்ற வரையில் "சமூக நீதிச்சட்டம்" கைக்கொள்ளப்பட வேண்டும்.

(இ) வடிவம்

"சமூகநீதிச் சட்டத்தின்படி வழங்கப்பட்டுள்ள விகிதாச்சாரம்—அந்தந்த வகுப்பு மக்களின் தொகை விகிதாச்சாரத்திற்கு ஏற்ப (அந்தச் சத விகிதப்படியே) அமைக்கப்படவேண்டும்.

(ஈ) கைக்கொள்ளும் முறை

இச் சட்டம், ஊதியத்திற்கு ஏற்ப பிரிக்கப்பட்ட ஒவ்வொரு தர உத்தியோகத்திற்கும், தனித் தனியே கைக்கொள்ளப் படுவதோடு, வகுப்புக்களுக்கு அளிக்கப்பட்டுள்ள விகிதாச்சாரம், மொத்தத்தில் இவ்வளவு என்று மட்டும் கொள்ளப்படாமல், ஒவ்வொரு தடவை உத்தியோகம் வழங்க நேருகிற போதும், சட்டத்தின்படி, மொத்த இடங்களில் இன்னின்ன (எண்) இடம் இன்னின்ன வகுப்புக்குரியது என்று குறிப்பிட்டுள்ள படியே வழங்கப்படவேண்டும். எந்த ஒரு வகுப்பிலேனும் தகுதியுள்ளவர் இல்லாமற் போனால் வரிசையில், அடுத்து வரும் வகுப்பார்தான் நியமிக்கப்பட வேண்டும்.

(உ) சட்டம் பயன்தர.

பிற்பட்ட வகுப்பினர், தத்தமக்கு உரிய அளவு இடங்களைக்கூடப் பெறமுடியாத படியும்,

முன்னேறிய வகுப்பாரே அவற்றையும் அடையும் படியும், பல தர அரசாங்க உத்தியோகங்கட்கும் அவசியமான அளவினும் அதிகமான அளவு கேட்கப்படும் 'அடிப்படைத் தகுதியை' அவசியமான அளவாகக் குறைக்க வேண்டும்.

(ஊ) ஒரே வகுப்பு ஆதிக்கம் தொலைய

(க) எக்காரணத்தைக் கொண்டும், உத்தியோகங்கட்குத் தேர்ந்தெடுக்கும் குழுக்களில் (Service Commission) தமது வகுப்புக்குரிய விகிதத்தைப் போல், 3-மடங்குக்கு மேல் அரசாங்க உத்தியோகங்களில் இடம் பெற்றுள்ள வகுப்பார், நியமிக்கப் படக்கூடாது.

(ங) எந்த ஒரு வகுப்பாரும், தமக்கு உரிய விகிதத்தைப் போல் 4-பங்குக்கு மேல் அரசாங்கப் பதவிகளிலோ, அதற்கு வாயிலாக உள்ள உயர்தரக் கல்வித்துறையிலோ இடம் பெற்றிருப்பார்களானல், இடம் பெற்றுள்ளவர்கள் தொகை 4 பங்குக்குக்குறைந்துவரும் வரையில், அவ்வகுப்பார் அரசாங்கத்திலும், கல்லூரிகளிலும் நியமிக்கப்படுவது தடுக்கப்படவேண்டும். 4-பங்கினும் குறையும் காலத்து அந்த அளவுக்குமேற் போகாமல் வகுப்பு விகிதாசாரப்படி, அனுமதிக்கப்படலாம். (இந்த ஏற்பாடு, 50 ரூபாய்க்குக் குறைந்த மாதச் சம்பளம் பெறுகிறவர்களைக் கட்டுப்படுத்தத் தேவை இல்லை.)

(எ) பிற்போக்கினர் சமத்துவம் பெற

பிற்பட்ட வகுப்பினருள்ளும், மிகவும் பிற்போக்கினராக உள்ள, பின்னணிப் பார்ப்பனரல்லாதார், ஆதிதிராவிடர், மலைசாதியினர் ஆகியோர், இதுவரையில் இழந்து வந்துள்ள உரிமைகளை எளிதில் பெறும் பொருட்டு, அடிப்படைத் தகுதி

யோடு விண்ணப்பித்துக் கொள்வாரானல், அப்படி விண்ணப்பித்துக் கொள்ளும் அனைவருக்கும், அரசாங்கத்தில் உத்தியோகம் அளித்தபிறகே, மற்ற வகுப்பாருக்கு விகிதாச்சாரப்படி உத்தியோகம் வழங்கவேண்டும். (இந்த ஏற்பாடு, சுமார் 15 ஆண்டுகள் வரையிலேனும் நிலை பெறவேண்டும்.)

(ஏ) உயர்வளிக்கும் முறை

(க) ஒரு உத்தியோகத்திலிருந்து, மேல்தரத்திற்கு உயர்வளிப்பதற்கும், 'சமூக நீதிச் சட்டத்தின்' விகிதாச்சாரத்தைக் கைக்கொள்ள வேண்டும்.

(ங) உயர்வளிக்கப்படவேண்டிய மேல்தர உத்தியோகத்தில், எந்த ஒரு வகுப்பாரேனும் தமது விகிதத்தைப் போல் 2-பங்குக்கு மேல் இடம் பெற்றிருந்தாலும், அவ்வகுப்பாரை நீக்கி, முறைப்படி வருகின்ற மற்றொரு வகுப்பாருக்கே உயர்வளிக்க வேண்டும். [அல்லது]

ஒரேதர உத்தியோகத்தில், உள்ளவர்களில் ஒரு பிற்பட்ட வகுப்பினர் குறைந்த அளவு 4-ஆண்டுகள் பணியாற்றி இருப்பாரானல், அவரைவிட அதிக ஆண்டுகள் பணியாற்றி யிருப்பினும் எந்தமுன்னேற்ற (பார்ப்பன) வகுப்பாரையும்விட, உயர்வளிக்கப்படத் தகுதியும் உரிமையும் உள்ளவராகக் கொள்ளப்படவேண்டும்

(அண்மையில், மைசூர் பல்கலைக்கழக நியமனக்குழு கல்லூரி ஆசிரியர்களுக்கு உயர்வளிக்கும் முறை குறித்து, இவ்விதமே முடிவுசெய்தது என்பது குறிப்பிடத் தக்கது.)

(ஐ) மத்திய சர்க்கார் கடமை.

(அ) சென்னை மாகாணத்திலுள்ள மத்திய சர்க்கார் இலாக்காக்களான, ரயில்வே, தபால்தந்தி,

வருமானவரி, கஸ்டம்ஸ், எக்சைஸ், ரேடியோ, அக்கவுண்டண்ட் ஜெனரல் ஆபீஸ் ஆகிய அனைத்திலும் "சமூக நீதிச்சட்டம்" அப்படியே கைக்கொள்ளப்படவேண்டும். அவ்விலாக்காக்களில், பார்ப்பனர் மட்டுமே 100-க்கு 70, 80 என்ற விகிதத்தில் இடம் பெற்றுள்ளதால், அவ்வகுப்பாருள் தற்காலிகமாக நியமிக்கப்பட்டுள்ளவர்கள் நிரந்தரமாக்கப்படக் கூடாது என்பதோடு, இன்னும்பல ஆண்டுகளுக்கு, (அவர்களது விகிதாச்சாரம், வகுப்பு விகிதத்தைப் போல் 4-மடங்குக்குள்ளாக வரும் வரையில்) அவ்வகுப்பார் இடம் பெறுமல் தடை செய்யவும் வேண்டும்.

(ஆ) "இந்தியன் போலீசு சர்வீசு" "இந்தியன் அட்மினிஸ்ட்ரேடிவ்சர்வீசு" (I.A.S. & I.P.S.) போன்ற மத்திய சர்க்கார் நியமனங்களுக்குச் சென்னை மாகாணத்திலிருந்து பொறுக்கப்படவேண்டியவர்கள் எல்லோரும், "சமூகநீதிச் சட்டத்தின்" வகுப்பு விகிதப்படியே தகுதியாளர்கள் பட்டியலிலிருந்து நியமிக்கப் படவேண்டும்.

(ஓ) நோக்கம் வலியுற

"சமூக நீதிச்சட்டம்" சாதியை நிலைநிறுத்தவன்றி, ஒழிப்பதற்கே என்பது தெளிவாகும்படி, வேறுபட்ட வகுப்பினராக இருந்து கலப்பு மணம் செய்துகொண்டவர்களுக்கு பிற்போக்கு வகுப்பினரை ஒப்ப சலுகைகாட்டி உத்தியோகம் அளிக்கவும், அவர்களின் குழந்தைகளின் கல்விப் பயிற்சிக்குப் பொருளுதவி செய்யவும் அரசாங்கம் முன்வரவேண்டும்.

(ஓ) பயிற்சிக் கல்லூரிகளில்

அரசாங்க உத்தியோகங்களுக்காகவோ, தேவைக்காகவோ பயிற்சியளிக்கப்படும் கல்லூரி

களிலும், தொழிற்பள்ளிகளிலும், (பள்ளிவகுப்புக் களிலும்) சமூக நீதிச் சட்டத்தின் விகிதப்படியே மாணவர்களைச் சேர்க்கவேண்டும். விண்ணப்பித்துக்கொள்ளும் தகுதியுடையோர் எல்லோரையும் சேர்த்துக்கொள்ள முடியாத எந்த உயர்தரத் தொழிற் கல்லூரிகளிலும் (Colleges of Medicine, Engineering, Veterinary etc.,) இந்தச் சட்டத்தின் விகிதப்படியே மாணவர்களைச் சேர்க்க வேண்டும்.

(ஔ) கல்வித் துறையில்

(க) எந்த ஒரு வகுப்பினரையும் அவர்களுடைய விகிதாச்சாரத்தைப் போல் 10-மடங்குக்கு மேல் சேர்த்துக் கொண்டு, வேறு எந்த ஒரு வகுப்பு மாணவருக்கும் இடம் இல்லை என்று தெரிவிக்கும், எந்தக் கல்லூரிக்கும், உயர்நிலைப் பள்ளிக்கும் அளிக்கப்பட்டுவரும் அரசாங்கப் பொருளுதவியும், பல்கலைக்கழக அங்கீகாரமும் மறுக்கப்பட வேண்டும்.

(ங) எந்த ஒரு தேர்வுக் குழுவிலும், (பல்கலைக் கழகமோ, அரசாங்கமோ அமைக்கும் தேர்வுக் குழுக்கள்—Examining Bodies) எந்த ஒரு வகுப்பினரும் தமது வகுப்பு விகிதத்தைப் போல் 5 மடங்குக்கு மேல் இடம் பெறக்கூடாது. எல்லோரும் ஒரே வகுப்பாகவும் இருக்கக்கூடாது.

(ச) தொடக்கப் பள்ளிகளில் பயிலும் குழந்தைகளின் உள்ளத்தில், வர்ணாஸ்ரம மனப்பான்மையையும், குறிப்பாகப் பிற்பட்ட வகுப்புப் பிள்ளைகளின் மனத்தில் படிப்பைக் குறித்த பயத்தையும், அவ நம்பிக்கையையும், தெரிந்தோ தெரியாமலோ, தம் பேச்சாலும் நடத்தையாலும் பார்ப்பன ஆசிரியர்கள் தோற்றுவித்து விடுவதே அவர்

களின் முன்னேற்றத்திற்குப் பெரிதும் தடையாகி விடுவதால், சாதி உணர்ச்சி அடியோடு ஒழிக்கப் படுகின்ற காலம் வரையில்—பார்ப்பன வகுப்பார் ஆரம்ப ஆசிரியர்களாக வருவதும், ஆசிரியப் பயிற் சிக் கல்லூரிகளில் (Lower Grade, Higher Grade & Secondary Grade Training Schools) இடம் பெறுவதும் தடைசெய்யப்பட வேண்டும். பெண் களுக்கு விதிவிலக்கு அளிக்கலாம்.

(ஞ) பிற்படுத்தப்பட்ட வகுப்புக்களைச் சார்ந்த மாணவர்கள், கல்லூரி உயர்நிலைப் பள்ளிக் கட்ட ணங்கள் அளவில் அரசாங்கச் சலுகை பெற்றாலும் அவர்களது குடும்ப ஏழ்மை நிலையாலும் வறுமை யாலுமே பெரிதும் கவலை கொண்டோராகிக் கல்வியில் கவனம் செலுத்த முடியாத பரிதாபத் திற்கு ஆளாவதால் அப்படிப் பட்டவர்கள், நியாய மான காரணங்களோடு விண்ணப்பித்துக் கொள் வார்களானால், படிப்பு முடிந்த பின்னர் அவர்களை அரசாங்க வேலையில் அமர்த்திக் கொண்டு ஊதி யத்திலிருந்து கடனை அடைத்துக் கொள்வது என்ற ஏற்பாட்டின் மீது 'கடன்' தந்து உதவ அரசாங்கம் முன் வரவேண்டும். அல்லது, வறு மைக்காளான பிற்பட்ட வகுப்புப் பிள்ளைகளை யெல்லாம் அரசாங்கம் தனது வளர்ப்பிலேயும் பொறுப்பிலேயுமே வைத்துக் கல்வி கற்பிக்க முன் வர வேண்டும்.

மேற்காணும் கருத்துக்களை உட்கொண்டு நிறைவேற்றப்படும் சட்டம் இவ்வாறு அமைக்கப் படலாம்:—

கம்யூனல் ஜி. ஓ. வின் நியாயத்தையும் நோக் கத்தையும் உட்கொண்டு அமைக்கப்படும் இச் சட் டம் "சமூக நீதிச்சட்டம்" என்றே வழங்கப்படும்.

இதன்படி நாட்டு மக்கள், அரசாங்க உத்தியோகம், கல்வித்துறை ஆகியவற்றில் அடைந்துள்ள நிலைமைப்படி முன்னேறிய வகுப்பார், பிற்பட்ட வகுப்பார், (Forward & Backward Classes) என்று பிரிக்கப்படுவர். பிற்பட்ட வகுப்பார், மிகப் பெரும்பான்மையராகலின், எல்லோரும் நியாயம் பெறும் பொருட்டு, அவர்களிடையே உள்ள பிரிவுகளுக்கு ஏற்ப, பார்ப்பனரல்லாதார், பின்னணிப் பார்ப்பனரல்லாதார், ஆதித்திராவிடர், முஸ்லீம்கள், கிருஸ்தவர் என்று பிரித்துக் கொள்ளப்படுவர்.

ஒருவகுப்பிலிருந்து மற்றொரு வகுப்பில் மணம் செய்து கொண்டுள்ளவரும், அவரது குழந்தைகளும், 'கலப்பு மணம் செய்து கொண்டவர்கள்' என்று கொள்ளப்பட்டு உரிய சலுகையாக (5 சத விகிதம்) உரிமையளிக்கப்படுவர்.

வகுப்பு விகித உரிமைப்படியும், சலுகைப்படியும், ஒவ்வொரு வகுப்பாருக்கும் கீழ்க்காணும் சுற்று முறைப்படி மொத்த உத்தியோகங்களும் குறிப்பிடப்பட்டுள்ள பிற இடங்களும் அளிக்கப்படவேண்டும்.

மொத்த இடங்கள் 37 எனில், பார்ப்பனர் 1, கிருத்தவர் 1, முஸ்லீம்கள், 3, ஆதித்திராவிடர் 6, பார்ப்பனரல்லாதார் 12, பின்னணிப் பார்ப்பனரல்லாதார் 12, கலப்பு மணம் செய்து கொண்டவர்கள் 2 என்ற விகிதத்தில் கொள்ளப்பட்டு அந்த 37 இடங்களும், ஒவ்வொரு சுற்றிலும் முறையே 1-ம் 36-ம், கலப்புமணம் செய்துகொண்டவர்கட்கும், 2, 5, 8, 11, 14, 17, 20, 23, 26, 29, 32, 35, ஆகியவை, பின்னணிப் பார்ப்பனரல்லாதார்கட்கும், 4, 7, 10, 13, 16, 19, 22, 25, 28, 31, 34, 37, ஆகியவை (முன்னணி) பார்ப்பனரல்லாதார்கட்கும்,

3, 9, 15, 21, 27, 33 ஆகியவை ஆதித்திராவிடர்கட்கும், 6, 18, 30 ஆகியவை முஸ்லீம்கட்கும் 12, கிருஸ்தவர்கட்கும் 24, பார்ப்பனாகட்கும் வழங்கப்பட வேண்டும்.

குறிப்பு :—[கலப்பு மணம் செய்து கொண்டவர்கட்கு என்று வழங்கப்பட்டுள்ள இடம் பெரும்பான்மை கருதி பார்ப்பனரல்லாதாருக்கு உரிய இடத்திலிருந்தே எடுக்கப்பட்டுள்ளது. தமக்கு அளிக்கப்பட்டுள்ளது குறைவு என்று கருத இடமுள்ள கிருஸ்தவர்களில் பலரும் கலப்பு மணம் செய்து கொண்டுள்ளமையின் அக்குறைவு தாராளமாக நிறைவு செய்யப்படுவதும் அறியத்தக்கது. பார்ப்பனர்கட்கு வகுப்பு விகிதப்படி குறைவு என்பதற்கே இடமில்லை.]

ஏறத்தாழ, இந்த வடிவில் 'சமூக நீதிச்சட்டம்' நிறைவேற்றப்படும் நாளே, சமூக நீதி தழைக்கும் நாளாகும். அச்சட்டம் வெற்றி பெற, மேலே குறிப்பிட்ட மற்ற கடமைகளையும் அரசாங்கம் நிறைவேற்றுவது இன்றியமையாததாகும். அரசாங்கம் நிறைவேற்றுமா என்பதல்ல கேள்வி; அரசாங்கத்தை நிறைவேற்றச் செய்யும் வலிமையும், ஒத்துழைப்பும் பொதுமக்களிடம் இருக்கிறதா என்பதே கேள்வியாகும்.

## மறுக்கமுடியாத சான்றுகள்

இதுகாறும் வரையப்பட்டுள்ளவற்றைக் கண்டும், 'கம்யூனல் ஜி. ஓ.' குறித்தும், அதன் நோக்கம் குறித்தும், ஐயப்படுபவர்கள், கீழ்க்காணும் சான்றுகளைக் காணின் தெளிவு பெறுவர் என்பது உறுதியாகும்

### சென்னைப் பல்கலைக் கழகத் தீர்ப்பு

சென்னை மாகாணத்திலுள்ள அரசாங்கத் தொழிற் கல்லூரிகளில் மாணவர்களைச் சேர்ப்பதில் கடைப்பிடிக்கப்பட்டுவரும் வகுப்புவாரி முறையைக் குறைகூறி, அம்முறை நீக்கப்படவேண்டுமென, இந்திய அரசாங்கத்தால் நியமிக்கப்பட்டிருந்த "பல்கலைக்கழகக் கமிஷன்" தனது அறிக்கையில் வெளியிட்டிருந்தது.

அதைக்குறித்தே (195) ஜூன் மாதத்தில்) சென்னைப் பல்கலைக் கழக சிண்டிகேட் அதை ஆராய்ந்து ஓர் முடிவிற்கு வந்தது. அந்த அவையில் பல பார்ப்பன அறிஞர்களும் இடம் பெற்றிருந்தனர் என்பதும் குறிப்பிடத் தக்கது. அந்த முடிவை விளக்கும் கருத்துரைகளே இவை:

"தென்னிந்தியாவில் இந்த வகுப்பு விகிதாச்சாரக் கொள்கை பற்றி மாறுபட்ட கருத்துக்கள் உள்ளன. இக்கருத்து வேற்றுமை கொண்ட இரு சாராரும் தமது கருத்தையே வலியுறுத்தி வருகின்றனர். ஆனல் பல்கலைக் கழகக் கமிஷனே, இம் மாறுபட்ட கருத்துடையோருள் ஒரு சாராரின் கருத்தினை மட்டுமே ஏற்றுக்கொண்டிருப்பதாகத் தெரிகிறது.

பல்கலைக் கழகத்தார் எந்தத் தனிப்பட்ட கொள்கைக்கும் ஆதரவு தருபவர்களல்ல. ஆனல் மாறுபட்ட கருத்துடையோருக்கும் இடமளிக்க

வேண்டுவது அவசியம் என்பதைப் பல்கலைக் கழகம் உணருகிறது.

நாடு முன்னேற வேண்டுமானால் கல்வித்துறையிலும், சமுதாயத் துறையிலும் எல்லா வகுப்பினரும் முன்னேற வேண்டும். துர்ப்பாக்கிய வசமாக தற்போது இந்து மதத்திலுள்ள பல்வேறு சாதியினருக்கு உயர்தரக் கல்வி சமமாக அளிக்கப்படவில்லை. இப்படிப்பட்ட நிலைமைக்கு எதுகாரணமாகவிருந்தாலும், இந்த நிலைமையை மாற்றிப் பின்தங்கிவிட்ட வகுப்பாரை முன்னேற்றுவதற்கான எல்லாமுயற்சிகளையும் செய்யவேண்டியது நமது நாட்டவரின் கடமையாகும். இதற்காகச் செய்யப்படும் எந்த ஏற்பாடும் நாட்டுக்கோ, தனிப்பட்ட மனிதர்களுக்கோ எவ்வித ஊறும் (கேடும்) செய்வதாகாது. இது நீதிக்குப் புறம்பானதுமல்ல.

"சில ஆண்டுகளுக்கு முன்புவரையில் கல்வி வசதி, நாட்டில் நூற்றுக்கு மூன்று பேராக உள்ள ஒரு வகுப்பாருக்கே தனிஉரிமையாக்கப்பட்டிருந்தது. ஆங்கிலக் கல்வியால் பெரும் பயன் அடைந்தவர்களும், பலன்களை அநுபவித்தவர்களும் அவர்களே யாவர். பல்கலைக் கழகப்படிப்பு அவர்களுக்குத் தலைமைச் சிறப்பளித்தது. அரசாங்க அலுவல்களையும் பொது வாழ்வில் உள்ள பதவிகளையும் அவர்களால் கைப்பற்ற முடிந்தது. இன்றைய சமுதாய வாழ்விலுள்ள முக்கியமான பதவிகளையெல்லாம் அவர்களே பெருவாரியாகப் பற்றியிருக்கிறார்கள். அவர்கள் மிகவும் அழுத்தமான சாதிப்பற்று (வகுப்புவாத உணர்ச்சி) கொண்டிருக்கிறார்கள். வசதியாக இருக்கும் தங்கள் நிலையை அப்படியே நிலைநிறுத்திக்கொள்ள விரும்புகிறார்கள்.

இந்நிலையில், செய்யப்பட்டுள்ள ஏற்பாடோ (வகுப்பு விகிதாச்சாரம்) சென்னை மாகாணத்திலுள்ள பெரும்பான்மையான மக்களின் விருப்பத்தை ஒட்டியதாகும். அதைக் குலைக்க, இச் சிறுபான்மையினர் முயற்சிக்கின்றனர். (இவ்வித முயற்சியால்) ஒரு சிறிய சிறுபான்மைக் கூட்டத்திற்காக இந்த ஏற்பாட்டை மாற்றுவது என்றால், அதைவிட ஜனநாயகத்துக்கு மாறான செயல் வேறெதுவும் இருக்க முடியாது.

"மேற்படிப்புக்காகவும், தொழிற்கல்விக்காகவும் இருக்கின்ற சிறு வாய்ப்புக்களெல்லாம், ஒரு சிறு கூட்டத்திற்கே செல்லும்படியான சுரண்டல் முறை ஏதேனும் ஏற்பட்டால், சாதிமத வேறுபாடுகளைத் தகர்ப்பதற்கு என்று ஏற்பட்ட கல்வி, அவைகளை மேலும் மேலும் வளர்க்கப் பயன்படுவதாகவே முடியும்.

வகுப்பு விகிதாச்சாரப்படி கல்வியளிக்கும் முறையால்தான் கல்வித்துறையிலும், சமூக நிலையிலும் சமத்துவத்தைக் காணமுடியும். கல்லூரிகளில் மாணவர்களைச் சேர்ப்பதில், சாதி மதம் முதலியவற்றை விசாரிப்பது கூடாது என்று சொல்லப்படுவது, உண்மையை மறைப்பதும் மக்களை அறியாமையில் ஆழ்த்தச் செய்வதுமான முயற்சிகளேயாம். இதனால் எவ்வித முன்னேற்றத்தையும் காண முடியாது.

மற்றும், தென்னாட்டில் அரசாங்க நிர்வாகத்தில் உள்ளதைவிட அதிகமாக தனிப்பட்ட நிர்வாகத்தில் உள்ள கல்லூரிகளிலோ, விருப்பப்படி இடமளிக்கப்பட்டு வருவதால், ஒரு குறிப்பிட்ட வகுப்பினருக்கே அதிகமான இடம் கிடைத்துவருகிறது என்பது உண்மையாகும். இதைப் பல்கலைக் கழகக் கமிஷன் கவனித்ததாகத் தெரியவில்லை.

இரண்டு மாறுபட்ட கருத்துக்களுக் கிடையேயும் பிளவை வளர்க்கவேண்டும் என்பதல்ல பல

கலைக் கழகத்தின் நோக்கம். ஆனால், அக்கருத்துக் களால், நடைமுறையில் இருக்கும் உண்மைகளை மறைப்பதற்கில்லை.

இவை, சென்னைப் பல்கலைக்கழக சிண்டிகேட் அவையின் கருத்துரைகளிற் சில பகுதிகளேயாம். முற்றும் காணில் மேலும் விளக்கம்பெறலாம். இதைக் கண்டபின்பும், கல்வித்துறையிலுமா 'கம்யூனல் ஜி. ஓ.'? என்ற கேள்வி எழமுடியாது அறிவுடையார் எவரிடமிருந்தும்.

## அண்ணலின் அறிவுரை

பார்ப்பன மாணவர்கள் சிலருக்குக் கல்லூரிகளில் இடங்கிடைக்கவில்லை என்பதற்காக, அதை ஒரு பெரிய அநீதியாக அக்ரஹார தேசியத் தம்பட்டங்களான இந்து, மித்திரன், எக்ஸ்பிரஸ், தினமணி போனறவற்றில் விளம்பரப் படுத்திக் கொண்டு, 1947-ல் உலக உத்தமர் காந்தியாரிடத்தில் தூதுபோயினர். அன்றொரு நாள் தேவர்கள் முறையிட, 'மஹாவிஷ்ணு' அவதாரமெடுப்பதாகக் கூறினராமே, அதுபோல 'மஹாத்மா' தேவர்களின் சார்பிலே புறப்பட்டுவிடுவார் என்று எண்ணினர் போலும்.

ஆனால் அவரோ அறிவுரை கூறினார், அன்பான மொழியில். அது, இது:

"பள்ளிக்கூடம் அல்லது கல்லூரியின் நான்கு மதில்களுக்குள் மட்டுமே, 'அறிவு' அடைக்கப்பட்டிருக்கவில்லை. அவைகளுக்கு வெளியில் இருந்தபடியே ஒவ்வொரு சிறுவனும், சிறுமியும் அறிவைப் பெறலாம்.........

கடவுளைக்காண்பதுதான் பிராமணன் தர்மம். மற்றவர்களையும் அவ்விதம் காணச்செய்தல் வேண்டும்."

'கல்லூரியில் இடம்பிடிக்கவும் அதன் மூலம் ஆதிக்கம் செலுத்தவும் முயலாதே; 'பிராமணன்' என்று சொல்லிக்கொள்ளும்வரை — கடவுளைத் தேடுவதுதான் உனக்குரிய வேலை' என்ற கருத்தினை உள்ளடக்கியே அவருக்கு இயல்பான புண்படுத்தாத புனிதமொழியிலே (அறிவுரை) கூறியுள்ளார். இதற்கு ஆதாரம் தேவையானல், 1927-ல் அவரே கூறியுள்ள எச்சரிக்கையையும் காணுங்கள்.

"பணத்திற்கும் அதிகாரத்திற்கும் ஆசைப்படுவீர்களானல், உண்மைப் படிப்பற்றவர்களாயும் உண்மை மதத்தைப் போதிக்க முடியாதவர்களாயும் இருப்பீர்கள் அப்படி இருப்பீர்களானல், நாங்கள் உங்களைப் 'பிராமணர்கள்' என்றழைக்க மாட்டோம் (பார்ப்பனர் என ஒப்பமாட்டோம்.)"

இப்பொழுதேனும், எல்லாக் கல்லூரிகளையும் தமக்கு மட்டுமே திறந்துவைக்க வேண்டும் என்று ஆதிக்க ஆசை கொண்டுள்ளவர்கள், உத்தமரின் உபதேசத்தினை உணர்ந்து, உண்மையாக நடந்து கொள்ள முன்வரவேண்டும். "எப்படி முடியும்? இப்படிப்பட்ட உபதேசத்தின் பலன்தானே 'கோட்சே' தோன்றியது?" என்றுகேட்கத்துணியமாட்டார்கள், புத்தியுள்ள பார்ப்பனர் எவரும்.

### விவேகானந்தரின் விவேக விளக்கம்

பார்ப்பனர்கள் நல்லறிவு பெறும் பொருட்டு ஞானி விவேகானந்தர், "வேதாந்தப்பணி" என்ற தலைப்பில் கும்பகோணத்தில் (பல ஆண்டுகளுக்கு முன்) ஆற்றிய சொற்பொழிவின் பகுதிகளே இவைகள்:—

"நம் நாட்டுப் பெரும்பான்மையான பாமர மக்கள், செயலற்று மரத்துப்போகும்வரை, நமது

மூதாதைகள் (பார்ப்பனர்கள்) அவர்களைத் (பாமர மக்களைத்) தங்கள் காலடியில் போட்டுத் தேய்த்துத் துவைத்து வந்துள்ளனர் இந்தச் சித்திரவதைகளால் அவர்கள் சீரழிந்தனர். அந்த அப்பாவி மக்கள் தாங்களும் மனிதர்கள்தான் என்பதையே மறந்தனர். பல நூற்றாண்டுகளாக, அவர்கள் வெறும் மரம் வெட்டிகளாகவும் ஏர் பிடிப்பவர்களாகவும் வலுக்கட்டாயத்தால் ஆக்கப் பட்டுவிட்டனர். இதனுல் அவர்கள் கொத்தடிமை குலவடிமைகளாகப் பிறப்பிலேயே ஆக்கப்பட்டு விட்டதாக நம்பும்படியும் செய்யப்பட்டுவிட்டனர்."

"நவீனப் படிப்பறிவிலே நாம் வல்லுனரென எவ்வளவுதான் பெருமை பேசிக்கொண்டாலும், அந்த ஏழை மக்களுக்காக யாராவது ஒரு ஆதரவு மொழி பேசிவிட்டாலும் போதும், உடனே நமது மக்கள் அந்த ஏழை அடிமைகளைக் கைதூக்கி விடும் பணியிலிருந்தும் ஓடி ஒளிந்துகொள்வர். அத்துடன், வெறிபிடித்த, முரட்டுத்தனமான விவாத முழக்கங்களைக் கிளப்புவார்கள். பரம் பரை, வம்சாவளி, பிறவிமுறை புராணங்களை அளக்கத் தொடங்கிவிடுவார்கள்."

"மேனுடுகளிலும் இம்மாதிரி வேற்றுமைகள் இருக்கத்தானே செய்கின்றன என்று குதர்க்கம் பேசுவர், அடுத்து அந்த ஏழை மக்களை முன்னை விட அதிகக் கொடுமைப் படுத்தவும், வாதைக் குள்ளாக்கவும் துவங்கிவிடுவார்கள்."

"ஆம்! பார்ப்பனர்கள்தாம். ஏ! பிராமணர் களே! உங்கள் பரம்பரை பெருமை குறித்து நான் என்ன நினைப்பது?"

"பரம்பரை உரிமை என்ற காரணத்தால், படிப்பதற்குப் பறையரைவிட அதிக தகுதியும் திற மையும் பெற்றவர்களானுல், இனி, பிராமணர்க

ளின் படிப்பிற்காக ஒற்றைக் காசும் செலவழிக்கப்படவேண்டாம். எல்லாப் பணத்தையும், பறையர்களின் படிப்புக்காகவே செலவு செய்யுங்கள். வலிமை யற்றவர்களுக்கே கொடுத்துதவுங்கள். நன்கொடைகள் யாவும் தேவைப்படுவது அவர்களுக்குத்தான்."

"பிராமணர்கள், பிறப்பிலேயே அறிவுத் திறமை பெற்றிருந்தால், பிறர் உதவியின்றியே அவர்கள் படித்துக்கொள்ள முடியும்."

"மற்றவர்கள், பிறவியிலேயே அறிவுத்திறமை யற்றவர்களானல், அவர்களுக்குத் தேவையான அளவு படிப்பு வசதிகளையும், ஆசிரியர்களையும், பள்ளிக்கூடங்களையும் அவர்களுக்கே விட்டுவிடுங்கள். நானறிந்த அளவில், இதுவே நீதியும் நியாயமும், பகுத்தறிவுப் பண்புமாகும்."

[இந்த அறிவுரை — அறிஞர் ரோமெய்ன் ரோலந்து என்பார் எழுதிய, "விவேகாநந்தரின் வாழ்க்கையும் அறிவுரைகளும்" என்னும் நூலில் இரண்டாம் தொகுதி பக்கம் 123-ல் காணப்படுவதாகும்.]

விவேகியின் விளக்கவுரையைக் கேட்ட பின்பும், தம் வகுப்பு ஒன்றே கல்விநலம் யாவும் பெற்றுக் கொழுக்கச் சில வீணர்கள் திட்டமிட்டபடி இருப்பது வெட்கக் கேடேயாகும். இனியும் "கல்லூரியில் பார்ப்பனருக்கு இடம் இல்லையா" என்று கேட்கும் எவர்தான், நேர்மையில் பற்றும், நியாய புத்தியும் கொண்டவர் என்று கருத முடியும்?

அதுமட்டுமன்றி அதே ஞானியின் பெயராலேயே பார்ப்பனரல்லாத பணப் பெட்டியாளர்களின் நன்கொடையைக் கொண்டு, கல்லூரி அமைத்து, பார்ப்பனப் பிள்ளைகளை மட்டுமே (தட்டுக் கெட்ட ஒன்றிரண்டு பா. அல்லாத பிள்ளைகளை

யும்) சேர்த்துக்கொண்டு வரும் பார்ப்பனப் பெரு மக்களின் செயலை என்னவென்றெண்ணுவது? புத்தர் புலால்கடை, காந்தி கள்ளுக்கடை என்பது போலல்லவோ 'விவேகாநந்தர் கல்லூரி' என்பதும் ஒலிக்கின்றது?

### அமைச்சரின் பதில்

வகுப்பு விகிதாச்சாரப்படி உத்தியோகம் தரப் படுவதால் உரிமை பறிபோவதாகப் பல பார்ப்ப னர், வழக்கு மன்றத்தின் கதவடியிலே காத்துக் கொண்டுள்ளனரே, அவர்தம் கூற்று உண்மை தானா? என்று ஐயப்படுவோர் — இவற்றைக் காணட்டும்.

1949-டிசம்பரில், சட்டசபையில் கேட்கப்பட்ட கேள்விக்குப் பதிலளிக்கையில் 1948-1949 ஆகிய இரண்டு ஆண்டுகளிலும் போலீஸ் சப் இன்ஸ் பெக்டர் வேலைக்கு நேரடியாக எடுக்கப்பட்டோர் விவரத்தை அமைச்சர் கூறியுள்ளார். அதாவது—

| வகுப்பு ஆண்டு | 1948 | 49. |
|---|---|---|
| பிராமணரல்லாத இந்து | 18 | 91 |
| பிற்போக்கு இந்து | 9 | 27 |
| பிராமணர் | 12 | 28 |
| கிருஸ்தவர் & ஆங்கிலோ இந்தியர் | 3 | 15 |
| தாழ்த்தப்பட்டோர் | 1 | 27 |
| எடுக்கப்பட்டவர் மொத்தம்— | 43 | 188 |

முஸ்லீமோ எடுக்கப்படவில்லை. ஆனால் பார்ப் பனரோ—43-ல் 12-பேரும், 188-ல் 28-பேரும் எடுக் கப்பட்டுள்ளனர். என்றாலும் அவர்கள்தான் தமக் குரிய அளவைவிட அதிகம் பெற்றும் அதி தீவிர மாக அதே சட்டத்தை எதிர்க்கின்றனர். இதை

"ஆதிக்க வெறி" என்றல்லாமல் வேறெப்படி அழைப்பது?

* * *

### மராமத்து இலாக்கா நிலை

அதுபோன்றே, 1950 மே மாதத்தில், மராமத்து இலாக்காவுக்காக விளம்பரப்படுத்தப்பட்ட 500 சூபர்வைசர் வேலைகட்கும் ஒரு பார்ப்பனரையும் எடுக்கவில்லை என்று ஸ்ரீமான் தென்னேட்டி விசுவநாதம் என்ற பார்ப்பனர், 'இந்து' முதலிய தம் வர்க்க ஏடுகளில் தீட்டிய கண்டனக் கடிதங்களுக்குச் சென்னை சர்க்கார் அளித்த பதிலறிக்கை இதுவாகும்.

"சர்க்கார் இதுபற்றி நன்கு ஆராய்ந்தது. விதிக்கு விரோதமாக ஒன்றும் முடிவு செய்யப்படவில்லை.

1927-ல் இருந்துவகுப்புவாரிப்பிரதிநிதித்துவம் நடைமுறையில் உள்ளது. இதன்படி ஒரு குறிப்பிட்ட சதவிகித இடங்கள் ஒவ்வொரு வகுப்பாருக்கும் ஒதுக்கப்பட்டுள்ளன. அவ்வகுப்புக்களில் பார்ப்பனரும் ஒரு பகுதியினர். குறிப்பிட்ட வகுப்புக்களிலிருந்து ஆட்கள் கிடைக்காவிட்டால் அடுத்தபடியுள்ள வகுப்புக்களிலிருந்து இதுவரை ஆட்கள் எடுக்கப்பட்டு வந்தது. இதுபோன்று, ஒரு தடவை தனக்குரிய இடங்களை இழக்கும் வகுப்புக்கு அதைத் தொடர்ந்து ஆட்கள் எடுக்கும்போது முன் பிழந்த இடங்களைச் சரிக்கட்டும் வகையில் இடங்கள் தரப்பட்டுவந்தன.

1947--ல் தேவைப்பட்ட சூபர்வைசர்கள் 300-பேர். இதில் ஒரு இடங்கூட முறைப்படி பார்ப்பன வகுப்புக்கு உரியதல்ல. ஆனல், எடுக்கப்பட்ட 271-பேரில் 134-பேர் பார்ப்பனர்.

1949-ம் ஆண்டில், தேவைப்பட்ட 300-பேரில்-43 இடங்கள் பார்ப்பனருக்கு ஒதுக்கப்பட்டிருந்தன. ஆனல் பொறுக்கப்பட்ட 217-பேரில் 85-பேர் பார்ப்பனர்.

இதுபோன்று அளவுக்கு மீறி மூன் ஆண்டுகளில் பார்ப்பனர்களுக்கு உத்தியோகங்கள் கொடுக்கப்பட்டிருப்பதாலும் மற்ற வகுப்பார் இழந்துள்ள இடங்களைச் சரிக்கட்ட வேண்டியிருப்பதாலும், இவ்வாண்டு, பார்ப்பன வகுப்பிலிருந்து ஒருவரையும் எடுப்பதாகத் தெரிவிக்கவில்லை. ஆனல், மற்ற வகுப்பில் ஆட்கள் கிடைக்காவிடில், விண்ணப்பித்துக் கொண்டுள்ள-பார்ப்பனர்கள் பொறுக்கப்படலாம்.

பொதுமக்கள் அறியவேண்டிய மற்ருரு உண்மையென்னவெனில், மராமத்து இலாக்காவில் வேலைசெய்யும் 1036-சூபர்வைசர்களில் 585 பேர் பார்ப்பனர். வகுப்புவாரி முறைப்படி அவர்கள் 148-பதவிகள்தான் பெற்றிருக்க வேண்டும்.

இவ்வறிக்கையைப் படித்த எவரும், பார்ப்பனர்களின் பதவிவேட்டையையும், வேட்கையையும் தெளிவாக உணரலாம். இனியும் 'கம்யூனல் ஜி.ஓ. ஏன்? என்று எந்தக் கருத்துக் குருடரும் கூடக் கேட்கத்துணியமாட்டார். கேட்கத் துணிபவர்கள், நீதியும் நேர்மையும் சிறிது மற்ற உள்ளத்தினரும் பிடிவாதக்காரர்களும் ஆதிக்கவெறியர்களுமே ஆகவேண்டும். அவர்களுக்குக் 'காலம்' தான் பதிலளிக்கும்! நாட்டவர்க்கோ 'கம்யூனல் ஜி. ஓ.' வாழ்வளிக்கும்!

தமிழர் கட்சி

தமிழர் நாடு (மாத மிருமுறை)

கி. ஆ. பெ. விசுவநாதம்

திராவிடர் கழகம்

விடுதலை (நாளிதழ்) E. V. R. மணியம்மை

திராவிட முன்னேற்றக் கழகம்

மாலை மணி (நாளிதழ்) டி. எம். பார்த்தசாரதி

திராவிட நாடு (வார இதழ்)

C N. அண்ணாதுரை

போர்வாள் (வார இதழ்)

காஞ்சி. மணிமொழியார்

பொன்னி (மாத மிருமுறை)

முருகு சுப்பிரமணியம்

தனி அரசு (மாத இதழ்)

ஏ. வி. பி. ஆசைத்தம்பி

[illegible]

Y. சுப்பையா

சோஷலிஸ தேசியக்கட்சி

பாரததேவி (தினசரி) S. V. சுவாமி

ப்ரீ பிரஸ் (ஆங்கில வாரத்தாள்) ,,

இரு புறமும் சாராதது

மெயில் : (ஆங்கில தினசரி)

A. A. ஹெயில்ஸ்

விளக்கம் :—ஆதரிக்கும் இதழ்கள், பல கட்சிகளையும் சார்ந்தவை. அவற்றின் ஆசிரியர் அனைவரும் பார்ப்பனரல்லாதார்.

எதிர்க்கும் ஏடுகள் தேசியக் கட்சி ஒன்றையே சார்ந்தவை. அவற்றின் ஆசிரியர் அனை வருமே பார்ப்பனர். அல்லது திராவிடர் அல்லாதார்.

நடுநிலை வகிக்கும் ஏடோ, அந்நியரால் நடத்தப்படுவதாகும். இதிலிருந்தே, எது நீதி என்பது விளங்கவில்லையா?

# திருத்தம்

| பக்க எண் | வரி எண் | காணப்படுவது | காணவேண்டுவது |
|---|---|---|---|
| 19 | 2-வது | | |
| | கட்டம் | எம். ஏ | எப். ஏ. |
| 21 | 19 | மேல் சபை | சட்ட சபை |
| 22 | 5 | ,, | ,, |
| 27 | 21 | பின் சந்திரபாலர் | பிபின் சந்திரபால |
| 34 | 9 | 1931-ல் | 1937-ல் |
| 37 | 4 | மேல் சபை | சட்ட சபை |
| 43 | 16 | (6) | (. 6) |
| 44 | 28-29 | நீதியாகக்கொடுக்க வேண்டியது இருந்தும் | கொடுக்கவேண்டிய நீதியாக இருந்து |
| 45 | 18 | அன்றிருந்த | ஏறத்தாழ அன்றிருந் |
| 62 | 29 | செறிக்துள்ளன | செறிந்துள்ளன |
| 71 | 26 | 387 | 337 |
| 99 | 12 | நில நாட்டிய | நிலை நாட்டிய |
| | 17 | சமூகத் துரோகம் | சமூகத்துரோகம் (இது தலைப்பு) |
| 107 | 2 | பிரதி நிதித்துவ மிருகமே | பிரதி நிதித்துவ மிருக்குமே |
| ,, | 6 | வகுப்பொன்டுன் | வகுப்பொன்றின் |
| 108 | 10 | 24 | 14 |
| 154 | 2 | இழுக்க | இழுக்க இழுக்க |
| ,, | 31 | நியமனங்கள் | நியமனங்களில் |

[பிற அச்சுப்பிழைகளைத்—திருத்திக் கொள்க.]